[ 1 ]

# ஆதிரையான்

ஓருரில் செல்வத்தில் திளைக்கும் சீமான் ஒருவர் இருந்தார். அவர் அந்த ஊரில் கட்டிய வீடுகள் பல ; எல்லாம் அவருக்குச் சொந்தமே. அவர் மட்டும் ஒரு தெருவின் கோடியில் உள்ள ஒரு பெரிய வீட்டில் குடியிருந்தார். அவர் பல வீடுகளைக் கட்டினாலும், பல வீடுகளுக்கு அவர் உரியவராக இருந்தாலும் ஊரார் அனைவரும் அவரைக் 'கோடிவீட்டுச் சீமான்' என்றே வழங்கி வந்தனர். இதே பெயர் எங்கும் பரவலாயிற்று. இதனால் அவருக்கு வேறு வீடுகள் இல்லையென்றும் வேறு வீடுகளைக் கட்டவில்லையென்றும் உண்மைக்கு மாறாகப் பெறப்படுகின்றன அல்லவா ?

இந்த நிலை கவிஞர் ஒருவர் கருத்தில் பட்டது. அதே சமயத்தில் கடவுள் தத்துவத்தைப்பற்றியும் அவர் சிந்திக்கலானார். கடவுள் தத்துவமானது அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருப்பது. இந்த உலகும், இந்த உலகிற்கு அப்பாற்பட்ட உலகங்களும் அந்தத் தத்துவத்திலிருந்தே தோன்றின. செவ்வாய், புதன் முதலிய கோள்களையும், விண்ணில் காணப்பெறும் எண்ணற்ற விண்மீன்களையும் ஆதியில் அந்தக் கடவுளே—சிவபெருமானே—படைத்தார். அவர் படைப்பதற்கு முன்னர் இந்த விசும்பு முழுவதும் வெட்டவெளியாகவே இருந்தது. இங்ஙனம் எல்லாவற்றையும் சிவபெருமானே படைத்திருந்தும் இந்த அலைகடல்சூழ் உலக மக்கள் அனைவரும் ஒன்றும் அறியாதவர்கள்போல் "திருவாதிரை" என்ற ஒரு விண்மீனை மட்டிலும்தான் அவர் படைத்தார் என்று சொல்லிக்கொண்டே வருகின்றனர். சிவபெருமானை "ஆதிரையான், ஆதிரையான்" என்றே வழங்கிவருகின்றனர்.

'ஆதிரை' என்ற நாள்மீனும் அவரால் படைக்கப்பெற்ற நாள் மீன்களுள் ஒன்றுதானே. அல்லது ஆதிரை நாளில்தான் அவர் பிறந்தாரா? அதுவுமில்லையே. அவர் பிறவாயாக்கைப் பெரியோன்

அல்லவா ? இந்த உலகில் ‘உத்திராடம்’, ‘திருவோணம்’ போன்ற நாட்களில் பிறந்தவர்களை முறையே ‘உத்திராடத்தான்’ ‘திருவோணத்தான்’ என்று கூறுவது மரபுதான். ஆயின், ஆதிரையில் பிறவாதானை ‘ஆதிரையான்’ என்று கூறுவது எங்ஙனம் பொருந்தும் ? ஒரு நாமம் ஒருருவம் இல்லாத இறைவனை இந்தப் பைத்தியக்கார உலகம் ஆயிரம் நாமங்களையும் திருவுருவங்களையும் கற்பித்து அல்லவா வழிபடுகின்றது ? “இது பலவீடுகளைக் கட்டிய சீமானைக் ‘கோடி வீட்டுச் சீமான்’ என்று சொல்வதைப் போலல்லவா இருக்கின்றது?” என்று கருதுகின்றார் கவிஞர்.

இந்த நிலையில் அவர் வானத்தை ஏறிட்டுப் பார்க்க நேரிடுகின்றது. கண்ணைப் பறிக்கும் எண்ணிறந்த சுடர்கள் விண்ணில் ஒளிர்ந்துகொண்டிருக்கின்றன. ‘எங்களையெல்லாம் இறைவனே படைத்தான்’ என்று அவரிடம் முறையிடுவனபோன்றிருக்கின்றன அவைகள். ஒரே வியப்பில் மூழ்கிவிடுகின்றார் கவிஞர். இந்நிலையில் அன்று திருவாதிரை மீன் ஒளிர்வது அவரது கண்ணுக்குப் புலனாகின்றது. சிவபெருமானுக்கு ‘ஆதிரையான்’ என்ற பெயர் இருப்பதும் அவரது நினைவுக்கு வருகின்றது. உடனே பக்தி, நகைச்சுவை, வியப்பு முதலிய அனைத்தும் கலந்த உணர்ச்சி அவரிடம் எழுகின்றது. ஒரு பாடலும் அவர் உள்ளத்தில் உருவாகி நல்ல வடிவமும் பெறுகின்றது.

இனி, பாடலைப் பார்ப்போம் :

**மன்னிய நாண்மீன் மதிகனலி யென்றிவற்றை**
**முன்னம் படைத்த முதல்வனைப்—பின்னரும்**
**ஆதிரையா னாதிரையான் என்றென் றயருமால்**
**ஊர்திரைநீர் வேலி யுலகு.***

இது கடவுள் வாழ்த்து

**விளக்கம் :** மன்னிய—(வானத்தில்) நிலையாய் இருக்கின்ற. நாண்மீன் = நாள் + மீன்—நட்சத்திரம். மதி, கனலி எனப் பின் வருவதால் நாண்

பாடவேற்றுமை : 10 என்றே ; 11 றயர்வுறுமீ ; அறையுமால்.

* இப்பாடலின் பின்னிரண்டடிகளையும் நீலகேசி தெருட்டுக் கடவுள் வாழ்த்துரையில் சமயதிவாகர முனிவர் மேற்கோள் காட்டியுள்ளார்.

மீன்' என்பதை நாளும் மீனும் என்று பிரித்து அவை இரண்டுமின்றிச் செவ்வாய் முதலிய கோள்களும் அசுவதி முதலிய விண் மீன்களும் என்று கொள்ளலும் பொருந்தும்.

மதி—திங்கள் (சந்திரன்); கனலி—ஞாயிறு (சூரியன்). கனலுதலைச் செய்வது கனலி; இது ஞாயிற்றுக்குக் காரணப் பெயர். பௌதிக இயலில் calorie என்று வரும் கலைச் சொல்லுக்குக் 'கனலி' என்ற தமிழ்ச் சொல் பெரிதும் பொருந்துவது ஈண்டு உளங்கொள்ளத் தக்கது. என்று என்று அயருமால்—சொல்லிச் சொல்லி ஒரு பெரிய மயக்கத்திலிருக்கின்றது. ஊர் திரை நீர் வேலி—சுருண்டு வருகின்ற அலைகளையுடைய கடல். உலகு—உலகத்தார்; இங்கு ஆகுபெயர்ப் பொருளில் வந்தது.

x x x

திருவாதிரை நட்சத்திரம் சிவபெருமானுக்கு உரியது. திங்கள் தோறும் வருகின்ற திருவாதிரையன்று, குறிப்பாக மார்கழித் திங்களில் வருகின்ற திருவாதிரையில், எல்லாச் சிவன் கோயில் களிலுள்ள நடராசரின் நடனவிழாக் கொண்டாட்டம் பல்லாயிரம் ஆண்டுகளாக நடந்தேறி வருகின்றது. மார்கழித் திங்களில் திரு வாதிரையன்று சிதம்பரத்தில் இவ்விழா மிகச் சிறப்பாகக் கொண் டாடப்பெற்று வருவதும் உளங்கொள்ளத் தக்கது.

[ 2 ]

# பாண்டியநாட்டின் வளம்

முத்தமிழை வளர்த்த பாண்டியநாடு முத்துக்களுக்குப் பெயர் போனதென்பது உலகறிந்த செய்தி. 'தென்னடு முத்துடைத்து' என்று இலக்கியமும் கூறுகின்றதல்லவா ? இன்று தூத்துக்குடியில் 'முத்துக்குளித்தல்' நடை பெற்று வருவதைக் காண்கின்றோம். பருவகாலத்தில் செய்தித்தாள்களில் இச் செய்தி வெளியாவதைப் பல இரத்தின வணிகர்கள் ஆவலுடன் எதிர்பார்ப்பதைக் காணத் தான் செய்கின்றோம்.

இன்று திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த கொற்கை என்னும் கடல்துறைப் பட்டினம் அக்காலத்தில் சிறந்த துறைமுகப் பட்டினமாகத் திகழ்ந்தது. மேற்கே உரோமாபுரி முதல் கிழக்கே சீனம் வரையிலும் அந்தப் பட்டினம் வாணிகத் தொடர்பு பெற்றிருந்தது. அந்தக் காலத்தில் கொற்கையில் 'முத்துக்குளித்தலும்' நடை பெற்று வந்தது. வேறு நாடுகளில் முத்துபற்றிய பேச்சு வரும்பொழு தெல்லாம் பாண்டியனைப்பற்றிய பேச்சும் சேர்ந்தே வரும் ; பாண்டிய நாடும் சேர்ந்தே பேசப்பெறும். முத்து வளங்காரணமாகப் பாண்டிய நாட்டிற்கும் பாண்டியனுக்கும் தனித்த புகழ் இருந்து வந்தது.

நாம் வாயில் வைத்து ஊதும் சங்கு கடலில் வாழும் ஒரு பிராணி யின் உடல் ; சிப்பி என வழங்கப்பெறுவது. சங்கு என்ற இந்தப் பிராணி நத்தை இனத்தைச் சேர்ந்தது. இதற்கு 'நந்து' என்ற பெயரும் உண்டு. பண்டைய இலக்கியங்களில் 'நந்து' என்றே வழங்கி வருகின்றது. ஆனல் இது நத்தையைவிடப் பன்மடங்கு பெரியது. கடலில் காணப்பெறும் இது மணலில் ஊர்ந்து செல்லும் ; செல்லும்போதே முட்டைகளை இட்டுக்கொண்டேபோகும். சாதாரண மாக ஒரு சங்கு இருபது முப்பது முட்டைகளை இடும் என்று அறிந்த வர்கள் சொல்லுகின்றனர். முட்டைகள் மிளகுப் பருமனுள்ளவை ; வெண்ணிறத்தவை.

புன்னை மரம் நாம் எல்லோரும் அறிந்ததொன்று. அதன் பூவை யும் மொட்டையும் நாம் நன்கு அறிந்துள்ளோம். மொட்டுக்கள் தூய்மையான வெண்மை நிறமுடையவை; உருண்டையான வடிவ முடியவை.

கமுகம் (பாக்கு) பாளையிலிருந்து உதிரும் மணிகள் பளபளப்பாக மின்னும் என்பதைப் பாக்குமரச் சோலைகளில் உலாவுபவர்கள் நன்கு அறிவர்.

முத்துக்களை அடிக்கடிப் பார்த்துப் பழகிய கண்களுக்கு நந்தின் இளஞ்சினையும், புன்னை மொட்டுக்களும், கமுகம்பாளை உதிர்க்கும் மணிகளும் முத்துக்கள் போலவே தோன்றும். நீர்வளமும் நிலவளமும் செறிந்த பாண்டி நாட்டில் இவை எம்மருங்கும் காணப்பெறும் காட்சி களாகும்.

பாண்டி நாட்டின் பழம் பெருமையையும் இயற்கை வளத்தையும் நன்கு அனுபவித்த கவிஞரின் உள்ளத்தில் பாண்டிய நாட்டுச் சிறப் பினைப்பற்றிய கவிதை உருவாகின்றது. வேற்றூர் சென்ற விளங் கிழை யொருத்தி அவ்வூரார்க்குப் பாண்டி நாட்டின் வளத்தினைப் பகரும் பாணியில் வடிவம் பெறுகின்றது பாட்டு.

இனி, பாடலைப் பார்ப்போம்:

**நந்தி னிளஞ்சினையும் புன்னைக் குவிமொட்டும்**
**பந்த ரிளங்கமுகின் பாளையும்—சிந்தித்**
**திகழ்முத்தம் போற்றோன்றும் செம்மற்றே தென்னன்**
**நகைமுத்த வெண்குடையா னாடு.**

இது நாட்டுவளம் கூறுவது.

**விளக்கம்:** நந்து—சங்கு. இளஞ்சினை—அப்போதுதானே ஈன்ற முட்டைகள். சங்கு, முதிர்ந்த முத்துக்களை ஈன்றால் மக்கள் அணிவதற்காக அவற்றைப் பொறுக்கித் திரட்டுவர். முதிராத முத்துக்களாயின் எடுப்பா

---

(பா. வே.) 4 கருவிமொட்டும்; 6 ரிளங்கமுகம்; 10 போற்றோன்று; 11 செம் மைத்தே.

ரின்றிச் சிதறிக்கிடக்கும். குவிமொட்டு—குவிந்த அரும்புகள். பந்தர் இளங் கமுகு—பந்தல்போல் அகன்று விரிந்து அழகு செய்யும் இளங் கமுகு. திகழ் முத்தம்போலத் தோன்றும்—உண்மையாகவே ஒளிர்ந்து திகழும் முத்துக்களாகவே காட்சி யளிக்கும். தென்னன்—பாண்டியன். நகைமுத்த வெண்குடையான்—ஒளி விடுகின்ற முத்துச்சரம் தொங்கவிட்ட வெண்கொற்றக் குடை பிடித்த பாண்டியன். செம்மற்று—தலைமையையுடையது; தனிப்பெருமையை உடையது என்றவாறு. செம்மல்—தனிப்பெருமை.

'செம்மற்றே' என்று அந்த நங்கை நாட்டின் சிறப்பை எடுத்தியம்பும் தொனியில்தான் நங்கையின் வாய்மொழியாகக் கவிஞரின் எக்களிப்பும் பாட்டில் நிழலிடுகின்றது. (1)

[ 3 ]

# ஊடல் விளைவித்த செயல்

நான்குபேர் சேர்ந்து கொண்டால் பொழுதுபோக்குப் பேச்சுக்குக் குறைவில்லை. உண்பன, உடுப்பன, கவிப்பன, பூசுவனவற்றிலிருந்து தொடங்கி அகில உலக அரசியல் வரையிலும் பேச்சுக்கள் விரிந்து செல்லும். அறிஞர்கள் கூடினல் உயர்ந்த பொருள்களைப்பற்றிப் பேசுவர். கலைஞர்கள் குழுமினல் கலைகளைப்பற்றிய பேச்சே நடை பெறும். கூடுபவர்கள் மேற்கொண்டுள்ள அலுவல்களையொட்டிப் பேச்சின் பொருள் அடிக்கடி மாறிக்கொண்டே போகும். ஒரு சிலர்—வாழ்வின் அவலக் கவலைகளை மறக்கமுடியாதவர்கள்—பணம், ஊதியத்திட்டம் முதலியவற்றையே பேசிப் பேசிப் பேச்சின் தரத்தையே குறைத்துவிடுவர். இலக்கியம், தத்துவம், சமயம் போன்ற துறைகளில் சர்ச்சை முறையில் நடைபெறும் பேச்சுக்களில் இவர்கள் கலந்துகொள்வதே இல்லை. போகட்டும்!

காதல்பற்றிய பேச்சென்றால் சொல்லவேண்டியதில்லை. ஆடவர்கள் தனியாகக் கூடியிருக்கும்பொழுதும், மகளிர் தனியாகக் கூடியிருக்கும்பொழுதும்தான் காதல் பேச்சு தலை நீட்டும். இரு சாராரும் கூடியிருக்கும் கூட்டத்தில் சாதாரணமாகக் காதல் பேச்சு எழுவதில்லை. அங்ஙனம் பேசுவது நாகரிகக் குறைவு என்று கருதியோ, வேறு என்ன காரணத்தாலோ அதற்குப் பெரும்பாலும் இடம் இருப்பதில்லை.

ஒரு சமயம் நெடுமாடக்கூடலைப்பற்றி மகளிரிடையே பேச்சு நடைபெறுகின்றது. மதுரைமாநகரத்துத் தெருக்களைப்பற்றிப் பேசுகின்றனர். குழாயில் தண்ணீர் சரியாக வராததைப்பற்றிப் பேசவில்லை. தெருக்கள் ஒழுங்காகப் பெருக்கப்பெறுவதில்லை என்றும் பேசவில்லை. கொசுக்களின் தொல்லைகளைப்பற்றியும் பேசவில்லை. (இந்த நிலை அக்காலத்தில் இல்லை!) அப்படியானல், அவர்கள் எதைப்பற்றித்தான் பேசுகின்றனர்?

"தெருக்களின் இருபுறங்களிலும் சாளரம் வைக்கப்பெற்றுள்ள மேன் மாடங்கள் உள்ளன. காதலர்கள் தங்கள் காதலிமாருடன் கொஞ்சிக் கொஞ்சிப் பேசுகின்றனர். காதலிமாரோ ஊடலில்—சிறு பிணக்கில்—நிற்கின்றனர். அதை எங்ஙனம் தணிப்பது? நறுமண நீரில் (பன்னீர்) கரைக்கப்பெற்ற நறுஞ் சாந்தைக் (சந்தனத்தைக்) கொண்ட கிண்ணங்களுடன் நெருங்குகின்றனர்; சிலர் தந்த நறுஞ் சாந்தில் குங்குமப்பூவும் சேர்ந்துள்ளது. அத்தகைய சாந்தினைத் தம் காதலிமார் மார்பில் பூசி மகிழ எண்ணுகின்றனர். மகளிரோ இருந்த ஆத்திரத்தில் கிண்ணங்களைப் பறித்துச் சாளரங்களின் வழியாகத் தெருக்களில் விட்டெறிகின்றனர். தெருக்கள் முழுவதும் ஒரே சந்த னச் சேறு மயம்! அத் தெருக்களின் வழியாகப் போவோரும் வரு வோரும் வழுக்கித் தடுமாறி விழுந்தெழுந்து செல்லுகின்றனர். நெடுமாடக் கூடலின் நீள்வளம் இப்படிப்பட்டது" என்று பேசிக் கொள்ளுகின்றனர்.

கூடல்மா நகரைப்பற்றி எண்ணிய கவிஞரின் உள்ளத்தில் இக் காட்சி எழுகின்றது. உடனே அதற்குப் பாட்டு வடிவமும் தருகின்றார்:

மைந்தரோ டூடி மகளிர் திமிர்ந்திட்ட
குங்கும வீர்ஞ்சாந்தின் சேறிழுக்கி—எங்குந்
தடுமாற லாகிய தன்மைத்தே தென்னன்
நெடுமாடக் கூட லகம்.

இது நகர் வளங் கூறுவது.

*விளக்கம்* : மைந்தர் - இளைஞர். மைந்து - வலிமை. ஊடி - சிறு பிணக்குக் கொண்டு. ஊடல் - சிறு பிணக்கு. திமிர்ந்திட்ட - சிதறிவிட்ட; வீசியெறிந்த. குங்கும ஈர்ஞ்சாந்தின் சேறு - குங்குமப்பூ சேர்ந்த சந்தனச் சேறு. இழுக்கி - வழுக்குதலால். தடுமாறல் - சறுக்கி விழுதல். நெடு மாடம் - உயர்ந்த மாளிகை. கூடல் - மதுரை. (2)

(பா. வே.) 7. சேறுழக்கி; 10. லாகாத.

[ 4 ]

# பாண்டியனின் ஆணை

அந்தக் காலத்தில் ஒரு பேரரசின் கீழ்ப் பல சிற்றரசுக்கள் அடங்கி இருக்கும். தாம் அவ்வாறு அடங்கி யிருப்பதற்கு அறிகுறி யாகச் சிற்றரசுக்கள் பேரரசுக்குத் திறை—கப்பம்—செலுத்திவருதல் வழக்கம். யாதாவது ஒரு சிற்றரசு கப்பப்பொருளை அனுப்பத் தவறி னால் பேரரசு அச்சிற்றரசின்மீது தண்டெடுத்துச் சென்று அதனை ஒறுத்து அடக்கும். இஃது அந்த நாளைய நடைமுறை. இது கவிஞ ருக்கு நன்கு தெரியும்.

பாண்டிய அரசு பேரரசாகத் திகழ்ந்த காலத்தில் பல சிற்றரசுக் கள் கப்பம் செலுத்தி வந்ததைக் கவிஞர் நன்கு அறிவார். ஒரு சமயம் சிலர் கப்பப் பொருள்களைச் செலுத்தத் தவறிவிட்டனர். பேரரசு அவர்கள்மீது நடவடிக்கை எடுக்கவேண்டியதுதானே. இராணுவ வீரன் ஒருவன் திறை செலுத்தாத குறுநில மன்னர்களிடம் தூதாக அனுப்பப்பெறுகின்றான். சென்றவன் தனது அரசின் ஆணையின் சிறப்பையும் அதன் வேகத்தையும் கூறி அவர்களை எச்சரிக்கை செய்கின்றான். "தேவர்களும் எங்கள் அரசின் ஆணைக்கு அஞ்சி நடுங்கும்போது நீங்கள் எம்மாத்திரம்?" என்று எடுத்தியம்பு கின்றான். இந்த நிலையை ஒரு சமயம் கவிஞர்காண நேரிடுகின்றது.

ஒருநாள் கவிஞர் தனியாக இருக்கும்பொழுது பாண்டியனின் ஆணை நினைவுக்கு வருகின்றது. ஆணையைப்பற்றிய சிந்தனையில் ஆழ்கின்றார். கவிதை யொன்று உருவாகின்றது. திறைப்பொருள் தராத குறுநில மன்னர்களிடம் தூதாகச் சென்ற படை வீரன் அவர் களை எச்சரிக்கை தரும் பாணியில் பாட்டு வடிவம் பெற்று விடு கின்றது.

பாடல் இது :

**நேமி நிமிர்தோ ணிலவுத்தார்த் தென்னவன்**
**காமர் நெடுங்குடைக் காவல னாணையால் !**
**ஏம மணிப்பூ ணிமையார் திருந்தடி**
**பூமி மிதியாப் பொருள்.**

இது திறைபற்றிய பாடல்.

*விளக்கம்* : நேமி - தோள் வளையம். பாண்டியனின் தோள் மிகப் பெரியது. அதுகாரணமாகத் தோள் வளையம் நிமிரப் பார்க்கின்றது. நேமி - பூமி ; நிமிர்த்தல் - தாங்குதல் ; பூமியைத் தாங்கும் தோள்கள் என்றும் பொருள் கொள்ளலாம். நிலவுதார் - ஒளிவிடும் வெள்ளிய முத்தாரம். தேர்ந்தெடுத்த பாண்டிய நாட்டின் முத்துக்களாலாகிய ஆரத்தை மார்பில் அணிந்திருக்கின்றான். காமர் நெடுங்குடை - அழகிய அகன்ற வெண் கொற்றக் கொடை. இது நாட்டைப் பாதுகாக்கும் முறையை எடுத்துக் காட்டும் ஓர் அடையாளமாகும். இந்தக் குடையைப்பற்றிப் பலவாறுகச் சிறப்பித்துப் பாடுவது இலக்கிய மரபு. காவலன் - காவல் செய்கின்றவன் ; அரசன். ஏம மணிப்பூண் - பொன்னாலும் இரத்தினத்தாலும் செய்த அணி கலன். ஏமம் - பொன். மணி - இரத்தினம். இமையார் - தேவர்கள். திருந்து அடி - நல்ல பூங்குறிகள் யாவும் அமைந்த அடி.

இயல்பாகவே கால் நிலம் தோயாத தேவர்கள் பாண்டியனின் ஆணைக்கு அஞ்சித்தான் நிலத்தில் காலை வைத்திலர் என்று தன் உளக் குறிப்பை ஏற்றிப் பேசுகின்றார் கவிஞர். இதனைத் ‘ தற்குறிப் பேற்ற அணி ’ என வழங்குவர் இலக்கண நூலார்.

தேவர்களே இவ்வளவு எச்சரிக்கையாக இருப்பார்களாயின் பூமியிலுள்ள அரசர்களைப்பற்றிச் சொல்லவா வேண்டும்? கவிதை யில் பெருமிதச் சுவை காணப்படுகின்றது. “ ஆணையால் !” என்ற சொல்லின்மூலம் இச்சுவை வெளியாகின்றது. படைத்தலைவன் ஆணித்தரமாக வலியுறுத்திப் பேசும் பாணி இது. பாடலைப் பல முறைப் பாடிப் பாடி அனுபவித்தால் இப்பாணியையும் காணலாம் ; சுவையையும் வெளிப்படச் செய்யலாம். (3)

(பா. வே.) 2. நிமர்தோள். 9. தீவ.

[ 5 ]

# பாண்டியனின் வெற்றி மேம்பாடு

செட்டி நாட்டில் வாழும் தன வணிக மரபினருக்கும் மற்றைய ஒரு சில மரபினருக்கும் மலேயா, சிங்கப்பூர், பர்மா முதலிய தொலைவிலுள்ள நாடுகளுடன் வாணிகத் தொடர்பு உண்டு. ஆதலால் அவர்கள் அடிக்கடி அந்த நாடுகளுக்குப் பெரும்பாலும் கப்பல் மூலம் பிரயாணம் செய்வர். ஒரு சிலர்மட்டிலும் அவசரத்தின் பொருட்டுச் சில சமயங்களில் விமானத்தின்மூலம் செல்வர். கப்பலில் செல்வோருள் சிலர் சென்னைத் துறைமுகத்தில் கப்பல் ஏறுவர்; சிலர் நாகப்பட்டினத் துறைமுகத்தில் கப்பல் ஏறுவர்.

கப்பல் நல்ல நாள் பார்த்தா புறப்படும்? அது பிரயாணத்திட்டப்படி, கப்பல் கம்பெனியாரின் சௌகர்யப்படி, குறிப்பிட்ட நாள்களில் செல்லும். ஆனால், பெரும்பாலும் செட்டி நாட்டுப் பகுதிகளிலிருந்து கப்பல் பிரயாணம் செய்து தொலை நாடுகட்குச் செல்கின்றவர்கள் நல்ல நாள் பார்த்தே பிரயாணத்தைத் தொடங்குவது வழக்கம். கப்பல் புறப்படும் நாளுக்கு முன்னதாகவே ஒரு நல்ல நாளில் தம் சொந்த வீட்டை விட்டுப் புறப்பட்டு ஒரு நெருங்கிய உறவினர் வீட்டுக்குச் சென்று அங்குத் தங்கிவிடுவர்; அல்லது தமது மரபினர்க்கென்று கட்டப்பெற்ற ஒரு பொது விடுதியில் தங்கிவிடுதலும் உண்டு. அவ்விடத்திலிருந்து கொண்டே தாம் கப்பலேறும் வரை தம் உள் நாட்டு அலுவல்களைக் கவனித்துவருவர். இந்த வழக்கம் செட்டி நாட்டுப் பகுதியில் இன்றும் நடைமுறையில் இருந்து வருகின்றது.

மேற்குறிப்பிட்டதைப் போன்றதொரு வழக்கம் அக்காலத்தில்—தமிழ் மன்னர்கள் தரணியை ஆண்ட காலத்தில்—இருந்து வந்தது. ஓர் அரசன் மாற்றரசனோடு தண்டெடுத்துச் சென்று போர் செய்து வெல்வதற்கு ஒரு நன்னாள் பார்த்துப் புறப்படுவ தென்பது நடைமுறையில் மேற்கொள்ளமுடியாத தொன்று. அதனால் அந்த அரசன் தன்

குடையையோ, வாளேயோ அல்லது கொடியையோ ஒரு நல்ல நாளில் ஒரு குறித்த ஓரையில் பட்டத்து யானையின்மீது வைத்துப் போக்கி வேறு இடத்தில் வைப்பது வழக்கம். பிறகு அரசன் போர் செய்யச் செல்வான். குடையை ஓர் அரசன் அனுப்பினல் அது குடைநாட் கோள் என்று வழங்கப்பெறும். இத்தகைய வழக்கத்தைக் கவிஞர் நன்கு அறிவார்.

பாண்டியனின் ஆட்சி பல்வகைச் சிறப்புக்களுடன் ஓங்கியிருந்த காலம் அது. எத்தனையோ யாண்டுகள் போரின்றிக் கழிகின்றன ! குறு நில மன்னர்கள் இந்நிலையை எண்ணிப் பார்க்கின்றனர். "இனிமேல் நாம் திறை செலுத்துவதை நிறுத்திவிடுவோம். பாண்டியன் என்ன தான் செய்வான் என்று பார்ப்போமே" என்று இறுமாந்து ஆணவத் துடன் இருந்து விடுகின்றனர். மாறன் இந்நிலையை உணர்கின்ருன்; அவர்கள்மீது சீற்றங்கொள்ளுகின்ருன். திறை செலுத்த மறுப்பது மன்னிக்கமுடியாத குற்றமல்லவா ? குடை நாட்கோளுக்கு ஆணை பிறப்பிக்கின்ருன். ஒரு நல்ல நாளில் ஒரு நல்லோரையில் படை வீரர்கள் மலைபோன்ற பெரிய பட்டத்து யானையின்மீது அரசனின் வெண்கொற்றக் கொடையைத் தோன்றவைத்துக் கொட்டு முழக்கத் துடன் புறப்படுகின்றனர்.

இச் செய்தி ஒற்றர்கள் மூலமோ—அல்லது வேறு எப்படியோ— மாற்றரசர்கட்கு எட்டி விடுகின்றது. அவர்கள் குலை நடுக்கம் கொள் கின்றனர் ; 'சிம்ம சொப்பனம்' காண்கின்றனர் ! "ஐயோ, குடை நாட்கோளா ? அஃது எங்கள் வாழ்நாட்கோளாக அல்லவா முடியும் ?" என்று உளறியடித்துக்கொண்டு திறைப்பொருள்களுடன் "நீ முந்தி, நான் முந்தி" என்று பாண்டியனின் அரண்மனை வாயிலில் வந்து திரண்டு விடுகின்றனர்; இருப்பதற்குக் கூட இடம் போதாது திண் டாடுகின்றனர். "மன்னுவோ, திறையைப் பெற்றுக்கொண்டு எங் கட்கு உயிர்ப்பிச்சை அருள்வாயாக. உன் கீழ் அடியராய் வாழும் எம்மீது தண்டெடுத்துப் போர் தொடுக்க எண்ணுவது முறையோ ?" என்று முறையிடுகின்றனர். இந்தக் காட்சியையும் கவிஞர் கண் ணுறுகின்ருர்.

ஒரு நாள் பாண்டியனின் வென்றி மேம்பாட்டைப்பற்றிச் சிந்திக்கின்றார் கவிஞர். சிந்தனை ஒரு பாடலாக உருவெடுக்கின்றது. பாண்டியனின் படை வீரன் ஒருவன் மற்றொரு நண்பனுக்கு எடுத்தியம்பும் முறையில் பாட்டு வடிவம் பெறுகின்றது.

பாட்டினைக் காண்போம் :

நிறைமதிபோல் யானைமே னீலத்தார் மாறன்
குடைதோன்ற ஞாலத் தரசர்—திறைகொள்
இறையோ வெனவந் திடம்பெறுத லின்றி
முறையோ! வெனநின்றார் மொய்த்து.

இதுவும் திறைபற்றிய பாடலே.

**விளக்கம் :** நிறை மதி போல் - முழு மதியம் போல. நீலத்தார் மாறன் குடை தோன்ற - நீல நிறமுள்ள குவளைப்பூ மாலையை அணிந்த பாண்டியனின் வெண்கொற்றக் குடை காட்சியளிக்க. நிறைந்த திங்களைப் போல் குடை தோன்றிற்று என்பதால் மாறனது தண்ணளியும் செங்கோன்மையும் விளங்குகின்றன. போருக்குச் செல்லுங்கால் அணிய வேண்டிய தும்பை மலரைக்கூட அரசன் சூடவில்லை. குடைநாட்கோள் செய்தவுடன் திறைப் பொருள்கள் வந்து குவிந்துவிடுகின்றன. அதனால்தான் ஈண்டு 'நீலத்தார் மாறன்' என்றார். இதன் நயம் எண்ணி உளங்கொள்ளத் தக்கது.

ஞாலத்து அரசர்—இத்தொடர் பல சிற்றரசர்களைக் குறிக்கின்றது. மொய்த்து—நெருங்கிக்கொண்டு ; சூழ்ந்துகொண்டு. பலாப்பழத்தின்மீது ஈக்கள் மொய்ப்பதைப் பார்த்திருக்கின்றோமே, அப்படி மொய்த்துக்கொண்டு என்றவாறு. முறையோ—திறையை வாங்காதிருப்பது நீதியோ? 'இறையோ... முறையோ' என்பவற்றிலுள்ள ஓகாரங்கள் மாற்றரசர்கள் சேய்மையிலிருந்து கொண்டு கூவுவதை உணர்த்துகின்றன. * (4)

* நம்மாழ்வாரின் 'ஓஓ உலகினதியல்பே' (திருவாசிரியம் 6-ஆம் பாசுரம்) என்பதற்கு "'ஓஓ' என்று இருந்தார் இடமெல்லாம் செவிப்படும்படி கூப்பிடுகின்றார்" என்ற பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானப் பகுதியை ஒப்பிட்டு நோக்குக.

[ 6 ]

# வெற்றிமுரசு விளைவித்த செயல்

பாண்டிய நாட்டில் பல்லாண்டுகள் அமைதி நிலவுகின்றது. மக்கள் போர்ப்பறை ஒலிப்பதைக் கேட்டுப் பன்னாட்களாகின்றன. அமைதிக்காலத்தில் சிலர் மாறனுக்குத் திறைகொடாமால் இறுமாந்து இருந்து விடுகின்றனர். குடை நாட்கோளோ வாள்நாட்கோளோ அவர்களை அசைக்க முடியவில்லை. அதுபற்றிய செய்தியை அறிந்தும் அவர்கள் வாளா இருந்து விடுகின்றனர்.

பாண்டியன் வெஞ்சினங்கொண்டு பகைமேற் செல்லுகின்றான். மடைதிறந்தாற்போல் பாண்டியனின் படை மாற்றரசர்களின் நாடுகளை நோக்கிப் புறப்படுகின்றது; பகைவரின் தேயத்தையும் நெருங்கி விடுகின்றது. போர்ப்பறையும் முழங்கப் பெறுகின்றது. இந் நிலையை அவர்கள் ஒருநாளும் எதிர்பார்க்கவே இல்லை. பாவம்! என்ன செய்வார்கள்? ஓடி யொளிப்பதைத் தவிர வேறு வழி அவர்கட்டுப் புலப்படவில்லை. எதிர்த்து நிற்பதற்கோ வலி இல்லை; நெஞ்சில் உரமும் இல்லை. ஆகவே, மதிற் கதவுகளைத் திறந்துகொண்டு பகைவர்கள் யாவரும் நாற்புறமும் சிதறியோடுகின்றனர்.

இடியின் ஒலியைக் கேட்டால் அச்சம் நம்மைப் பிடுங்கித் தின்னும்; குலை நடுங்கும். பாம்புகள் இந்த ஒலியைச் சிறிதும் சகிக்க முடியாது. இடியும் மின்னலும் சேர்ந்து தோன்றுங்கால் பாம்புகளின் உடலங்கள் புரண்டு துடிக்கும். இதனால்தான் துன்ப உணர்ச்சியை எடுத்தியம்புவதற்குப் பாம்பின் நீண்ட உடலின் நெளிவையும் சுழிவையும் துடிப்பையும் எடுத்துக்காட்டி விளக்குகின்றோம்.

பாண்டியனுடைய போர்முரசின் ஒலிக்கு ஆற்றாது சிதறியோடிய பகைவர்கள் இடிமுழக்கம் கேட்ட நாகம்போல் அஞ்சி அஞ்சி ஓடுகின்றனர். அண்மையிலுள்ள மலையில் ஏறி ஆள் அரவம் இல்லாத இடங்களையும் கடந்து விடுகின்றனர். அங்குக் காட்டுப் பசுக்கள்

இவர்களைக் கண்டு வெருவியோடுகின்றன. அவ் விலங்குகளின் காற்குளம்புகள் பட்ட இடங்களில் மணிகள் பெயர்ந்து ஒளியொடு மிளிர்கின்றன. பகைவர்கள் அந்த இடங்களையும் கடந்து சென்று மறைகின்றனர்.

அப்படியும் அவர்களைத் திகில் விட்டபாடில்லை. உள்ளம் நெருப் பாகின்றது. வயிற்றில் நெருப்பை வாரிக்கட்டியது போன்ற நிலை அவர்கட்கு ஏற்படுகின்றது. வயிற்றில் ஒரே எரிச்சல்; மனக் கொதிப்போ தாங்கமுடியவில்லை. இந்த இடங்கட்கும் பாண்டியனின் படை வீரர்கள் வந்து தம்மைக் கண்டு பிடித்துவிட்டால் என்ன செய் வது என்று பயந்து சாகின்றனர்; உயிர் உடலில் நின்று ஊசலாடு கின்றது.

மாற்றரசர்களின் மன நிலையைச் சிந்திக்கின்றார் கவிஞர். பாண்டியனின் படைகள் எயில்கொண்டதையும் எண்ணுகின்றார்; எயிலிடத்தில் முழங்கப்பெறும் வெற்றி முரசின் ஒலி மலைச்சரிவு களில் எதிரொலித்துக்கொண்டே சென்று பகையரசர்கள் ஒளிந் திருக்கும் இடத்தை அடைந்து அவர்கள் காதில் விழுவதையும் கருதுகின்றார். உடனே அவர் உள்ளத்தில் ஒரு கவிதை உருவாகி அது நல்ல வடிவத்தையும் பெற்றுவிடுகின்றது.

இதோ அந்தப் பாடல்:

> **செருவெங் கதிர்வேற் சினவெம்போர் மாறன்**
> **உருமி னிடிமுர சார்ப்ப—அரவுறழ்ந்**
> **தாமா வுகளு மணிவரையி னப்புறம்போய்**
> **வேமால் வயிறெரிய வேந்து-**

இது பாண்டியனின் படை மாற்றரசர்களின் **எயில் கோடலைக்** கூறியது.

விளக்கம்: செரு - போர். செருவெங் கதிர்வேல் - போர் செய்வதற் கான கூரிய வேல். சினம் - கோபம். சினவெம்போர் மாறன் - பொங்கி யெழும் கோபத்துடன் போர் புரியும் பாண்டியன். வெம்போர் - கொடும போர். வெம்மை - வெப்பம். உரும் - இடி. உருமின் இடி முரசம் ஆர்ப்ப

(பா - வே) 8. உருவுறழ்ந்.

இடியைப் போலவே இடி முரசம் ஒலிக்க. ஆர்ப்ப - முழங்க. அரவு - பாம்பு. உறழ்ந்து - ஒத்து. அதாவது மின்னலையும் இடியையும் கேட்ட பாம்பு புற்றுக்குள் புற்றுய்ச் செறிகின்றது என்றவாறு.

ஆமா - ஆப்போலும் மா; காட்டுப் பசு. உகளும் - தாவி ஓடித் திரியும். அணிவரை - அழகிய மலை. 'ஆமா உகளும் மணிவரை' என்று பிரித்து மாணிக்கக் கற்கள் உள்ள மலை என்று கொள்ளலும் பொருந்தும். வயிறு எரிய - வயிறு கனல. வேம் - வேகும்; உள்ளம் கொதிக்கும். ஆல் - அசை. பகையரசர்கள் வயிறு எரிய மனம் புழுங்குவர். "வேமால் வயிறெரிய வேந்து" என்பதில் அச்சச் சுவை பொங்கி வழிகின்றது.

முரசொலி கேட்டுப் பகையரசு அணிவரையின் அப்புறம் சென்றது என்ற குறிப்பால் மாற்றரசரின் எயிலை மாறன் படை கைப்பற்றியது என்பது புலனாகின்றது. (5)

# பொன்னுரைத்த கல்

பெரும்போர் ஒன்று நடை பெறுகின்றது. மாறனைப் பல பகைப் புல மன்னர்கள் ஒருங்கு சேர்ந்து எதிர்க்கின்றனர். பாண்டியன் படை பல மிக்கவன். வேற்படை, யானைப்படை, குதிரைப்படை ஆகியவை அவனிடம் அதிகமாக உள்ளன. பாண்டியனும் பேராற்றல் மிக்க வன்; போர் புரிதலிலும் மிக்க திறமுடையவன்.

போர் மிகக் கடுமையாக நடைபெறுகின்றது. முதலில் பாண்டி யனுடைய வேற்படைகள் அணி அணியாகச் சென்று மாற்றரசரின் படைகளைத் தாக்குகின்றன. அடுத்து அவனுடைய குதிரைப்படைகள் மாற்றரசர்களின் யானைப்படைகளின்மேற் சென்று மோதுகின்றன. யானைப்படைகளால் இத்தாக்குதலைச் சமாளிக்க இயலவில்லை. யானை கள் கழுத்தை நிமிர்த்துக்கொண்டு அங்கு மிங்குமாகத் திரும்பி அல மருகின்றன. குதிரைகளோ சும்மா இருக்கவில்லை. யானைகளின் கழுத்தடியில் மோதிப் பாய்கின்றன; விடாது மேலும் மேலும் பாய்ந்த வண்ண மிருக்கின்றன. கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையு மன்றோ? குதிரைகள் தொடர்ந்து மோதுதலால் யானைகளின் கழுத் துக் கயிறுகள் அறுந்து போகின்றன. அந்தக் கழுத்துக் கயிற்றின் அடியில் காலை நுழைத்துக்கொண்டிருக்கும் மாற்றரசர்கள் கீழே உருண்டு விழுகின்றனர். அவர்கள் தலையிலணிந்துள்ள பொன்முடி கள் நாற்புறங்களிலும் சிதறியோடுகின்றன. குதிரைகளும் அம்முடி களைத் தம் கால்களால் எற்றி இடறிக்கொண்டு மேற்செல்லுகின்றன. இவ்வாறு தொடர்ந்து குதிரைகள் பல்வேறு மன்னர்களின் பொன் முடிகளை இடறி இடறிக் கம்பீரமாக மேற் செல்லுவதால் அவைகளின் காற்குளம்புகள் பொன்னுரைத்த கட்டளைக்கல்போல் ஒளிர்கின்றன.

போர்க்கள நிலையைக் கவிஞர் சிந்திக்கின்றார். குதிரைப்படை களின் செயல் அவருடைய மனக்கண்முன் வந்து நிற்கின்றது. அதனையே பொருளாகக்கொண்டு பாடலும் உருவாகி விடுகின்றது.

மாறனுடைய படை வீரன் ஒருவன் மற்றொருருவனிடம் குதிரைகளின் மறச்செயலைக் கூறுவதுபோல் பாட்டின் வடிவம் அமைகின்றது.

பாடலைப் பார்ப்போம்:

> நிரைகதிர்வேல் மாறனை நேர்நின்றார் யானைப்
> புரைசை யறநிமிர்ந்து பொங்கா—அரசர்தம்
> முன்முன்னு வீழ்ந்த முடிக ளுதைத்தமாப்
> பொன்னுரைகற் போன்ற குளம்பு. *

இது குதிரைமறம்.

விளக்கம்: நிரை கதிர் வேல் மாறன் - அணி அணியாக ஒளி பொருந்திய வேற்படைகளையுடைய பாண்டியன். மாறன் - பாண்டியன். நேர் நின்றார் - எதிர்த்து நின்ற பகைவர். புரைசை - யானையின் கழுத்திலிடும் கயிறு. அற - அறுந்துபோகும்படியாக. நிமிர்ந்து பொங்கா - தலையெடுத்து மோதிச் சீறி ஆங்காரம் கொள்ள. பொங்கா - பொங்கி; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சப் பொருளில் வந்தது.

'அரசர்தம் முன் முன்னு வீழ்ந்த முடிகள்'—என்பதனை 'தம்முன் முன்னு வீழ்ந்த அரசர் முடிகள்' எனக் கூட்டிப் பொருள் உரைக்க வேண்டும். முடிகள் - கிரீடங்கள்; இவை தங்கத்தாலாகியவை. உதைத்த மா - காலால் ஏற்றி இடறிச் செல்லும் குதிரைகள். குதிரைகள் மிகப் பல; அவை யாவும் தம்முன்னே வீழ்ந்த மன்னரின் தங்கக் கிரீடங்களை இடறிச் செல்லுகின்றன. இதனால் மாவின் குளம்புகள் பொனனுரைத்த கட்டளைக் கற்களைப் போன்றுகின்றன. போன்ற - போன்றன.

முன் முன்னு - என்ற அடுக்கு பன்மையைக் குறிக்கின்றது. குதிரைகளும் பல, மன்னரும் பலர், யானைகளும் பல என்பதை அது தெளிவாக்குகின்றது.

(6)

(பா - வே) 10. வீழ்ந்தார்.

> 'தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும், அவர்தம்
> மருண்ட புன்மையை மாற்றுவர்' எனும்இது வழக்கே;
> உருண்ட வாய்தொறும், பொன்உருள் உரைத்(து)உரைத்(து) ஓடி,
> இருண்ட கல்லையும் தன்நிறம் ஆக்கிய இரதம்.

—கம்ப. பாலகாண்-சந்திரசயிலப்-செய்-8.

என்ற கம்பராமாயணப் பாடலில் தேரின் பொன்னுலியன்ற சக்கரங்கள் இருண்ட கல்லையும் பொன்னிறமாக்கிய செய்தி கூறப்பெற்றிருப்பதை ஒப்பிட்டு மகிழ்க.

[8]

# அதிசயமான கணக்கப்பிள்ளை !

மனிதன் தோன்றிய நாள் தொட்டு மண்ணாசை அவனது 'பிறப்புரிமை' யாக இருந்து வந்திருக்கின்றது. இந்தத் தத்துவத்தின் அடிப்படையில்தான் பேரரசுகள் அந்தக் காலத்திலிருந்து இன்று வரை ஏற்பட்டுக்கொண்டே வருகின்றன. மக்களாட்சி நிலவும் இக் காலத்திலும் உலகின் பல்வேறு பகுதிகளில் நாடு பிடிக்கும் இயல்பு இருந்து வருவதை நாம் காணலாம்.

போரில் தோல்வியுற்ற அரசர்கள் வெற்றி பெற்ற மன்னனுக்குத் தம் நாடனைத்தையும் பனையோலையில் 'உரிமைச்சான்று' எழுதித் தருவது வழக்கம். இதனைப் 'பட்டோலை' என்று வழங்குவர். இந்தப் பதிவேட்டை எழுதும் கணக்கப்பிள்ளைகள் 'பட்டோலை எழுதுவோர்' என்று வழங்கப்பெறுவர்.

பாண்டிய நாட்டில் போர் கடுமையாக நடைபெறுகின்றது. வீரம் கனலும் வேற்படை மன்னர்கள் திரண்டெழுகின்றனர் அவர்கள் யாவரும் திண்தோள் வலிமை பெற்றவர்கள்; அவர்களின் பரந்த மார்பைப் பார்த்தோர் யாவரும் வெருவியோடுவர் ; மருண்டுபோய் விடுவர்.

பாண்டியனது யானை—மாறன்களிறு—அவர்கள்மீது பாய்கின்றது. அச்சத்தை விளைவிக்கும் மாற்றரசர்களது மார்புகள் உருக்குலைகின்றன. மன்னர்கள் மண்ணைக் கவ்வுகின்றனர். இந்த நிலையைக் கவிஞர் அறிகின்றார். கற்பனை நிறைந்த அவரது மனம் செயற்படுகின்றது. நிகழ்ச்சிக்கு ஒரு வடிவம் தருகின்றார். யானையின் செயலைக் காணும் வீரன் ஒருவன் மற்றொரு வீரனுக்கு அதனை எடுத்துக்காட்டுவதுபோல் கவிதை அமைகின்றது.

"நண்பனே, அதோ பார் ; மாறன்களிறு விளைவிக்கும் மாண்பினைக் காண்பாயாக ! அது வெற்றி ஓலை எழுதுகின்றது. அதன்

கொம்புதான் எழுத்தாணி; மாற்றார் மார்பு ஓலை. 'செல்வம் நிலை பெற்ற உலகமெல்லாம் எமது'—என்றுதான் எழுதுகின்றது. 'நமது நாடு!' என்பதில் யானைக்கும் பெருமித உணர்ச்சி உண்டாகின்றது'' என்று கூறுகின்றான் படை வீரன்.

இனி, கவிதையைக் காண்போம்.

மருப்பூசி யாக மறங்கனல்வேல் மன்னர்
உருத்தகு மார்போலை யாகத்—திருத்தக்க
வையக மெல்லா மெமதென் றெழுதுமே
மொய்யிலை வேல் மாறன் களிறு. *

இது யானை மறம். அடுத்து வரும் மூன்று பாடல்களும் யானை யின் வீரத்தைக் குறிப்பனவே.

*விளக்கம்:* மருப்பு - கொம்பு; யானையின் தந்தம். ஊசியாக - எழுத் தாணியாக. மறம் - வீரம். வேல் மன்னர் - வேலேந்திய மன்னர். உருத் தகு மார்பு - பகைவரால் அஞ்சத்தக்க மார்பு. உரு - உட்கு; அச்சம். 'உரு உட்காகும்' என்பது தொல்காப்பியம். திருத்தக்க - செல்வம் நிலைத்த. கவிஞருக்கு நாட்டுணர்ச்சி மீதூர்ந்து நிற்கின்றது! அதனால்தான் 'தான் வேறு, மன்னன் வேறு' என்று கருதாது, 'எமதென்று எழுதும்' என்று குறிப் பிடுகின்றார். பகைவர்களைக் கொல்லுதலை 'எழுதும்' என்று மங்கல வழக் காக அமைத்தமை மிக நயமாக அமைந்துள்ளது. மொய்யிலை வேல்-வலிமை யுள்ளதும் இலை வடிவானதுமான வேலை ஏந்திய. மாறன் களிறு - பாண்டி யனது கொம்பன்.

மருப்பூசியாக, மார்போலையாக என்பன உருவக அணிகள்.

பாட்டைத் திரும்பத்திரும்பப் படித்து அனுபவித்தால் 'அச்சச் சுவை' தோன்றுவது புலனாகும். பாடலின் உருவமே அச்சத்தைக் காட்டுகின்றது. இல்லையா? (7)

(பா - வே) 5 திருத்தகு.

* மார்பில் தலைவனின் பெயரெழுதும் வழக்கம் இருந்து வந்ததைக் குறிப்பிடும்,

'வாணன் பெயரெழுதா மார்புண்டோ மாகதர்கோன்
வாணன் புகழுரையா வாயுண்டோ—வாணன்
கொடிதாங்கி நில்லாத கொம்புண்டோ உண்டோ
அடிதாங்கி நில்லா அரசு.

என்ற தனிப்பாடலை இஃதுடன் ஒப்பிட்டு உணர்க.

[ 9 ]

# இரண்டு கொம்புகள் எதற்கு?

கூடலையொத்த பாண்டியனது படைகள் மாற்றார் மதிலை முற்றுகையிடுகின்றன. பாண்டியனுடைய மலைபோன்ற யானையைக் கண்டவுடன் பகைவர்களுக்குப் பெருத்த அச்சம் ஏற்படுகின்றது. கதவை அடைத்துக்கொண்டு கோட்டைக்குள்ளேயே இருந்து விடு கின்றனர்.

அடிக்கடிப் போரில் ஈடுபட்டு ஈடுபட்டு யானைக்கும் பகைவர் களின் கைவரிசை நன்கு பழக்கமாகி விடுகின்றது, பகைவர்கள் மதில் வாயிலை மூடியதைக் கண்டதும் யானை பெருஞ்சினம் கொள்ளு கின்றது. வாயிலை நோக்கி விரைந்து செல்லுகின்றது. ஒரு கோட் டால் கோட்டைவாயிலைத் தகர்த்தெறிகின்றது; மற்றொரு கோட் டால் பகைவருடைய மார்பைப் பிளந்து விடுகின்றது. வாரணத்தின் இரு கோட்டின் செயல்களையும் காண்கின்றார் கவிஞர். இக் காட்சி யைச் சிந்திக்கின்றார். அஃது அழகிய பாடலாக உருப்பெறுகின்றது.

யானைக்கு இரண்டு மருப்புக்கள் எதற்கு என்ற ‘வினாவை’த் தாமாக எழுப்பிக்கொள்ளுகின்றார். அதற்குக் காரணங்களையும் கற்பிக்கின்றார். பகைவரின் கோட்டைவாயிலைத் திறக்க துணையாக அமைகின்றது ஒரு மருப்பு; மற்றொரு மருப்பு பகைவரது மார்பைப் பிளந்தெறியப் பயன்படுகின்றது. ஒன்று, கோட்டை வாயிற் கதவின் திறவுகோலாகப் பயன்படுகின்றது; மற்றொன்று, பகைவரிடன் மார் பாகிய வயலை உழும் கலப்பையாகச் செயற்படுகின்றது. இந்த முறை யில் பாட்டும் வடிவம் பெற்றுவிடுகின்றது.

பாட்டைப் பார்க்கலாம்:

உருவத்தார்த் தென்னவ னேங்கெழில் வேழத்
திருகோடுஞ் செய்தொழில் எண்ணில்—ஒரு கோடு
வேற்ரு ரகல முழுமே யோருகோடு
மாற்ருர் மதில்திறக்கு மால்.

விளக்கம்: உருவத்தார்த் தென்னவன் - அழகிய (வேப்ப) மாலை யணிந்த பாண்டியன். ஓங்கு எழில் வேழத்து - உயர்வும் அழகும் பொருந்திய யானையின். எழில் - வளர்ச்சியோடு கூடிய அழகு; ஓங்கு எழில், உருவ வளர்ச்சியையும் அழகு வளர்ச்சியையும் உணர்த்துகின்றது. வேழம் - யானை.

கோடு - கொம்பு. வேற்ருர் - பகைவர். அகலம் - மார்பு. மாற்ருருடைய மார்பாகிய வயலில் கொம்பாகிய கலப்பையால் * உழா நிற்கும் என்றவாறு. மாற்ருர் - பகைவர். மதிற் கதவினைக் கோடாகிய திறவு கோலால் திறவா நிற்கும். ஆல் - அசை.

யானைக்கு இரண்டு கொம்புகள் இருப்பதற்குக் கவிஞர் காரணம் காட்டிவிட்டார்! இதனை எண்ண எண்ண மகிழ்ச்சி ஊற்றெடுக் கின்றது. (8)

(பா - வே) 7. வேருல்; 8. தேரில்; 15. (ந்)தான்.

* ஆங்களிற் றசனி வேக மதன்மருப் பூசி யாகச்
சீவக னகன்ற மார்ப மோலையாத் திசைகள் கேட்பக்
காய்பவன் கள்வ ரென்ன வெழுதுவித் திடுவல்......

—சீவகசிந் - 1121.

என்று கட்டியங்காரன் கந்துக்கடனிடம் கூறுவதாக அமைந்த பாடலில் இத்தகைய செய்தி வந்திருப்பதைக் காண்க.

[10]

# யானையின் ஓட்டம்

ஓட்டத்திலும் ஓர் அழகு உண்டு. வட்டரங்குகளில் (Circus) குதிரைகளை ஓட விடுவதையே ஒரு நிகழ்ச்சியாக அமைத்திருக்கின்றனர் அல்லவா? காதுகளை மடக்கிக்கொண்டு பூனை ஓடுவதைக் கண்டு நாம் மகிழவில்லையா? காதுகளை நிமிர்த்துக்கொண்டு காற்றினும் கடுகியோடும் முயல்களையும், மானினங்களையும் கண்டு மகிழ்கின்றோம். வேட்டைக்குச் செல்வோருக்கு இந்த அநுபவம் நிறைய இருக்கும். பாலூட்டப்பெற்ற பசுங்கன்று வாலைத் தூக்கிக்கொண்டு ஓடுவதிலும், காதை நிமிர்த்தி வாலையும் தூக்கிக்கொண்டு திமிலை அசைத்த நிலையில் காளை ஓடுவதிலும் நமக்கு இன்பம் ஏற்படுகின்றது. விளையாட்டுப் போட்டிகளில் பல்வேறு ஓட்டங்களும் நிகழ்ச்சிகளாக அமைவதிலிருந்து ஓட்டத்தின்மீதுள்ள கவர்ச்சி வெளியாகின்றது.

ஒரு சமயம் பாண்டியனது பெரிய பட்டத்து யானை ஓடத் தொடங்குகின்றது. துதிக்கையைச் சுருட்டி நிமிர்த்திக்கொண்டும், மருப்புக்களைத் தூக்கிய நிலையில் வைத்துக்கொண்டும், காதுகளை விரித்துக் கொண்டும் கொம்பன் ஓட்டம் பிடிக்கின்றது. குன்றனைய உடலைக் கொண்ட ஒரு விலங்கு தப்படிகளை (Pace) எட்டி வைத்துத் தரையெல்லாம் அதிரும்படி ஓடுவதைப் பார்க்கும் அனைவரும் கட்டாயம் அஞ்சத்தான் செய்வர். ஆயினும், அந்த ஓட்டத்தின் பெருமிதத்தையும் அழகினையும் கண்டு வியந்து அநுபவியாமல் இருத்தல் முடியாது. கவிஞர் இந்த ஓட்டக் காட்சியில் தமது உள்ளத்தைப் பறிகொடுக்கின்றார். அஃது அழகிய பாடலாக வடிவங் கொள்ளுகின்றது.

"யானையின் தோற்றம் மலையைப் போன்றது; அது பிளிறும் ஓசை கடல் முழக்கத்தையொத்தது; அதனிடமிருந்து கொட்டும் மதநீர் மேகம் மழை பொழிவதை நிகர்த்தது; கடுங்காற்றினும்

விரைந்து செல்லும் நடையினையுடையது; பகைவர்களைக் கொல்லுவதில் எமனும் இதனிடம் பிச்சை வாங்கவேண்டும்!" என்று அவரது உள்ளங் கருதுகின்றது.

இனி, பாடலைப் பார்ப்போம்:

**தோற்ற மலைகட லோசை புயல்கடாஅங்**
**காற்றி னிமிர்ந்த செலவிற்றாய்—கூற்றுங்**
**குறியெதிர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே யெங்கோன்**
**எறிகதிர்வேல் மாறன் களிறு.**

விளக்கம்: தோற்றம், மலை; கடல், ஓசை; புயல், கடாஅம் - என்று பிரித்துப் பொருள் உரைக்க. ஓசை - (பிளிறும்) ஒலி. புயல் - மேகம். கடாஅம் - மத நீர். காற்றின் நிமிர்ந்த செலவிற்றாய் - காற்றைவிட விரைவாகச் செல்லக்கூடியதாய். கூற்று - எமன். குறியெதிர்ப்பு - 'ஒரு சொல்; அளவு குறித்து வாங்கி அவ் வாங்கியவாறே எதிர் கொடுப்பது' என்பர் பரிமேலழகர் (குறள்—221இன் உரை); இரவல் என்பது இதன் பொருள். தகைமைத்தே - தன்மையுடையது. எறிகதிர்வேல் மாறன் - ஒளி உமிழும் வேலைக் கையகத்தேயுடைய பாண்டியனின் ஆண் யானை.

பாண்டியனின் படைவீரன் ஒருவன் மற்றொரு வீரனுக்கு யானையின் செயலை எடுத்தியம்பும் முறையில் பாடல் வடிவம் கொண்டுள்ளது. அது யானையின் ஓட்டத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டுகின்றது. அச்சம், அழகு என்ற இரண்டு பாவங்களும் அருமையாய்க் கலந்துள்ளன. (9)

# யானைக்கும் நாணம்!

போர் மும்முரமாக நடைபெறுகின்றது. கணக்கற்ற வீரர்கள் மடிந்து சாய்கின்றனர். பிளிறுகின்ற மாறனின் களிற்றின்முன் மாண்ட மாவீரர்களின் தொகை மிகப் பெரியது.

பாண்டியனின் பட்டத்து யானை சினத்தால் பிளிறிக்கொண்டு புறப்படுகின்றது. தன்னை அணுகியவர்களைக் கொல்லும் பல்வேறு பொறியமைப்புக்களையும் பொருட்படுத்தாமல் அவற்றைக் கொண்ட மதிலை நெருங்கி அதனை நொறுக்கத் தொடங்குகின்றது. சிறிது நேரத்தில் மதிலும் நொறுங்கி மாற்றார் கோட்டையும் தூள் தூளா கின்றது. இச்செயலில் அழகாய் நீண்டிருந்த யானையின் கொம்புகள் முறிந்து விடுகின்றன. எனினும், அது பகை மன்னர்களை நெருங்கி அவர்கள்மீது பாய்ந்து அவர்களைக் கீழே தள்ளிக் குத்திக் கிழிக்கின் றது. மாற்றாரின் குடல், ஒடிந்த கொம்புகளில் உறைபோல் மாட்டிக் கொள்ளுகின்றது. கொம்புகளில் குடல் தொங்கும் நிலையில் வேலை முடிந்து திரும்புகின்றது யானை. இந்த நிலையைக் கவிஞர் எண்ணு கின்றார். நிகழ்ச்சிக்கு வடிவங் கொடுக்க விழைகின்றது அவரது கவிதையுள்ளம்; அங்ஙனமே அமைக்கின்றார்.

இந்த நிகழ்ச்சியை மாவீரன் ஒருவன் மற்றொரு வீரனுக்குக் கூறுவதுபோல் பாடல் அமைகின்றது. போர் முடிந்ததும் வீரர்கள் தமது காதலிமாரைக் காண வீடு நோக்கி விரைவதாகக் கவிதை புனைவது இலக்கிய மரபு. சங்க இலக்கியங்களில் இம் மரபினைக் காணலாம். போர் முற்றிய யானையும் அங்ஙனமே தன் பிடியைக் காணப் புறப்படுவதாகக் கற்பனை செய்கின்றார் கவிஞர். ஒடிந்த கொம்புகளைக் கண்டு பிடி யானை தன்னை இழிவாக நினைக்குமே என்ற காரணத்தால்தான் ஆண்யானை குடலால் கொம்புகளை மறைத்துக் கொண்டு வருகின்றது என்று தன் குறிப்பை ஏற்றிப் பேசுகின்றார்.

கவிஞரின் உள்ளத்தில் உருப்பெற்ற பாடலைக் காண்போம்:

அடுமதில் பாய வழிந்தன கோட்டைப்
பிடிமுன் பழகழிதல் நாணி — முடியுடை
மன்னர் குடரால் மறைக்குமே செங்கனல்வேற்
றென்னவர் கோமான் களிறு.

விளக்கம்: அடு மதில் - தன்பால் நெருங்கி வருவோரை அழிக்கும் பொறியமையப்பெற்ற மதில்; யானை அழிக்கத்தொடங்கிய மதில் எனவும் அமையும். அழிந்தன கோட்டை - முறிந்துபோன கொம்புகளை. கோடு - கொம்பு. பிடி - பெண் யானை. பிடி முன்பு அழகு அழிதல் நாணி - முறிந்த கொம்புகள் அழகினை இழந்தமையால் பெண் யானை தன்னை இழிவாகக் கருதுமே என்று வெட்கி. இவ்வாறு கூறுதல் தற்குறிப்பேற்ற அணி. மறைக்குமே - முறிந்து சேதப்பட்ட தந்தங்களை மறைக்கும். செம் கனல் வேல் - செம்மையை உமிழும் வேலைக் கொண்ட. தென்னவர் கோமான் - பாண்டியன். களிறு - ஆண் யானை.

மேகநாதனைக் கொன்ற இலக்குவன் மேகநாதனின் தலையுடன் சென்று இராமனைக் காண்பதுபோல் ஆண் யானை பகைவரின் குடலுடன் தன் பிடியைக் காணப் புறப்பட்டுவிடுகின்றது. (10)

(பா - வே.) 1. அடிமதில்; 3. வழிந்ததன்; 10. குடையால்.

[ 12 ]

# போர்க்களக் காட்சி

நம்மில் பெரும்பாலோர் போர்க்களத்தைப் பார்த்ததே இல்லை. பண்டைக்காலத்தில் போர் நடப்பதற்கென்று ஓர் இடம் இருந்தது. அறப்போரும் நடந்தது. இன்று அப்படி இல்லை அல்லவா? இது தூங்குபவன் தொடையில் கயிறு திரிக்கும் காலம்; ஏமாந்தவனை எதிர்த்து வீழ்த்தும் காலம். ஆனால், கம்பராமாயணம், வில்லி பாரதம், கலிங்கத்துப் பரணி போன்ற நூல்களைப் படித்தவர்கள் போர்க்களம் இன்ன தென்பதை நன்கு அறிவர்.

ஒரு சமயம் பாண்டிய நாட்டில் கடும் போர் ஒன்று நிகழ் கின்றது. எங்குப் பார்த்தாலும் ஒரே குருதி வெள்ளம்! வீரர்கள் பலர் குத்துண்டு வீழ்ந்து கிடக்கின்றனர். அவர்களோ அருந்திறல் மிக்கவர்கள். நல்ல வீரர்களாக இருப்பவர்களுடன்தானே பாண்டி யனின் படைகள் எதிர்த்து நிற்கும்? வாய்மடித்துக் கிடக்கும் வீரர் களது நிலையும், இறந்த பின்னரும் புருவமுரிவுடனும் செங்கண் ணுடனும் திகழும் வீரர்களுடைய நிலையும் பார்ப்பவர்கட்கு அச்சம் விளைவித்து நிற்கின்றன.

இந் நிலையில் ஊனுண்ணவேண்டும் என்ற நோக்கத்துடன் நரிக் கூட்டங்கள் போர்க்களத்திற்குத் திரண்டு வருகின்றன. ஆனால், அவைகள் களத்தில் குற்றுயிரும் குலையுயிருமாகக் கிடந்த சில வீரர்களைக் கண்டு அருகில் வர அஞ்சுகின்றன. நெருங்கிச் சென்றால் அவ்வீரர்கள் தம்மைக் குத்திக் கொன்றுவிடுவர் என்று நினைத்து நடுக்கங்கொண்டு நெடுந்தொலைவிலேயே நிற்கின்றன.

அந்த நரிக்கூட்டத்தில் ஒரு நரி மட்டும் சற்றுத் துணிவு கொண்டு முன் நோக்கி வருகின்றது. வருங்கால் தன்னுடன் துணைக்கு வருமாறு வேறொரு நரியை அழைக்கின்றது. ஆயினும், அதுவும் அச்சத்தாலும் முழுத்துணிவின்மையாலும் அருகில் நெருங்கிப்போக இயலாமல் தவிக்கின்றது. என்னதான் கூவியழைத்தும் துணைக்கு ஒரு நரியும் வரவில்லை ; கூவியழைத்ததுதான் மிச்சம் !

இக்காட்சியை எடுத்துரைக்கும் கவிஞரின் பாடலைக் காண்போம்:

> வெருவரு வெஞ்சமத்து வேலிலங்க வீழ்ந்தார்
> புருவ முரிவுகண் டஞ்சி—நரிவெரீஇச்
> சேட்கணித்தாய் நின்றழைக்குஞ் செம்மற்றே தென்னவன்
> வாட்கணித்தாய் வீழ்ந்தார் களம்.

இது களம் உரைத்தது.

**விளக்கம் :** வெருவரு - அஞ்சத்தக்க. வெஞ்சமம் - கொடிய போர். இலங்க - விளங்க. புருவ முரிவு - சினத்தால் ஏற்படும் புருவ வளைவு. அஞ்சி - பயந்து. வெரீஇ - நடுங்கி. சேட்கணித்தாய் - சேண் இடத்ததாய். இங்கு சேண் - தூரம்; கண் - இடம். கணித்து - குறிப்பு வினைமுற்றுப் பொருளில் வந்தது. வாட்கணித்தாய் - வாளுக்கு அணித்து ஆய்; வாளிடத்து ஆய் எனலும் பொருந்தும்.

'சேய்த்தணித்தாய்' என்ற பாடத்தைக் கொண்டால் 'சேய்மையிடத்ததும் அண்மையிடத்ததும்' என்று பொருள்படும். இறந்து கிடக்கும் வீரனுடைய பக்கத்திற்குப் போன நரி தொலைவிலுள்ள ஒரு நரியைத் துணைக்கு அழைக்கின்றது. ஆனால், தொலைவில் நிற்கும் நரி 'வேண்டாம், போகாதே !' என்று வீரன் பக்கத்திற்குப் போய் நிற்கும் நரியைக் கூவுகின்றது. இப்படியாக ஒன்றையொன்று மாறி மாறிக் கூவுகின்றது என்று பொருள் கொள்ள வேண்டும்.

இப் பாடலை மீட்டும் மீட்டும் நாம் படிக்கும்பொழுது நம்மிடமும் அச்சச்சுவை எழுவதைக் காணலாம். (11)

(பா - வே.) 9 சேய்த்தணித்தாய்.

# களிற்றினத்தின் சோக உணர்ச்சி

கலிங்கப்போருக்குப் பிறகு அசோகச் சக்கரவர்த்தி நிலேயாமை உணர்ச்சி மேலிட்டு மனநிலே மாறிப் புத்த சமயத்தில் ஈடுபட்டார் என்று வரலாறு கூறுகின்றது. போரில் ஒரு பக்கத்திற்கு நிச்சயம் வெற்றி கிடைக்கின்றது என்பது உண்மைதான். கூர்ந்து நோக்கிஞல் அந்த வெற்றி, துயரத்தில் தோய்ந்தே கிடப்பது புலனுகும்.

ஒரு சமயம் பாண்டியன் பகை வேந்தர்களுடன் போர் புரிய நேர்கின்றது. அதில் களிற்றியானே நிரைகள் ஏராளமாக அழிந்து படுகின்றன ! அவை யாவும் பகையரசர்கட்குச் சொந்தமானவை. அங்ஙனமே பகை மன்னர்களும் பலர் வீழ்ந்து மடிகின்றனர். இறுதியில் பாண்டியனுக்கு வெற்றி கிடைக்கின்றது. இப்பொழுது போர்க்களத்தில் அமளி குறைந்து அமைதி நிலவுகின்றது.

பாண்டியனின் படை வீரர்கள் வீடு திரும்பிக்கொண்டிருக்கின்றனர். பாண்டியனும் நகரை நோக்கி விரைகின்ருன். அங்ஙனம் வந்துகொண்டிருக்கும்பொழுது சோகக்குரல் அவனது காதில் விழுகின்றது; அவலககாட்சியும் அவனது கண்ணில் படுகின்றது. "எங் கணவர் கிடந்த இடம் எங்கே? எங்கே?" என்று பகைவர்களின் மனேவியர் தேடித் திரிகின்றனர். அவர்கள் உடல்களேக் கண்டதும் அவற்றிற்கு எரி மூட்டித் தாங்களும் காந்தருடன் அந்தக் கனல் அமளியில் புகுந்து கற்பினே நிலேநாட்டுகின்றனர். இக் காட்சியைக் காணும் பாண்டியனின் உள்ளம் உருகுகின்றது; அவஞல் தன் சோக உணர்ச்சியைத் தாங்கமுடியவில்லே. ஆகவே, அவன் தன் மேலாடையின் முன்ருனேயால் தன் கண்களே மூடிக்கொள்ளுகின்ருன்.

இன்ஞெரு பக்கம் மற்ருெரு சோகக் காட்சி தென்படுகின்றது. பகைவர்களின் களிறுகள் இறந்ததால் அவற்றின் பிடிகள் பொலிவிழந்து புலம்புகின்றன. இந்தச் சோகம் நிறைந்த காட்சியைக் காணும் பாண்டியனின் களிறுகளும் அதைப் பார்க்கச் சகியாமல் தம் கண்களே மூடிக்கொள்ளுகின்றன.

இந்தச் சோகக் காட்சிகளைக் கவிஞர் தன் அழகிய சொல்லோவியத்தில் காட்டுகின்றார். ஒரு வீரன் மற்றொரு வீரனுக்கு இக் காட்சிகளை உணர்த்துவது போன்ற சொல்லோவியம் இது :

ஏனைய பெண்டி ரெரிமூழ்கக் கண்டுதன்
றானையாற் கண்புதைத்தான் தார்வழுதி—யானையெலாம்
புல்லார் பிடிபுலம்பத் தாங்கண் புதைத்தவே
பல்யானை யட்ட களத்து.

இதுவும் களத்தின் நிலைமையைக் கூறும் பாடலே.

**விளக்கம்:** ஏனைய பெண்டிர் - பகைவரது மனைவியர். எரி மூழ்க - தீக்குளிக்க. தானையால் - முன்றானையால். கண்புதைத்தான் - கண்களை மூடிக்கொண்டான். யானையெலாம் - (பாண்டியனுடைய) ஆண் யானைகள் எல்லாம். புல்லார் - பகைவர். பிடி - பெண்யானை. அட்ட - இறந்த.

அவலச் சுவை நிறைந்த பாடல். (12)

(பா - வே.) 1. ஏனையார்; 8 யானையும்; 11 தன் கண்; 12 புதைத்தது; 13 பல்வாயார்; 14 பட்ட.

[14]

# ஓகை உயர் மாடத்தில் கூகை!

பாண்டியனின் பகைப் புல வேந்தர்கள் பல்லடுக்கு அரண் மனைகளில் ஆடம்பரமாகத்தான் வாழ்ந்தனர்; செல்வச் செருக்கில் திளைத்தனர். அவர்களும் மற்ற அரசர்களை வென்று வாகைமாலை சூடி வந்தவர்கள்தாம்! வாகை மாலை சூடி அரியணையில் வீற்றிருக்கும்பொழுது எத்தனையோ களியாட்டங்கள் நடைபெற்றன. மகிழ்ச்சியின் அலைகள் எம்மருங்கும் கொந்தளித்தன. அவர்கள் வாழ்ந்த இடங்கள் ஓகை உயர்மாடங்களாகப் பொலிந்தன!

இன்று அவற்றின் நிலை என்ன? பாண்டியனுக்குப் பணியாது அவனோடு வீணாகப் போரிட்ட காரணத்தால் அவர்கள் யாவரும் மடிந்து மண்ணோடு மண்ணாய் மக்கி மறைந்து விட்டனர். அவர்கள் அரசிருந்து வாழ்ந்த மேன் மாடங்களில் இப்பொழுது கோட்டான்கள் குடியிருக்கின்றன; ஆந்தைகள் அலறுகின்றன. அம்மாடங்களில் வாழும் கிழப்பேய்கள் உறங்குவதற்காகக் கூகைகள் பாட்டயர்கின்றன; கூவுகின்றன.

பகைப் புலக்காட்சியைக் காணும் கவிஞர் அந்நிலையை அழகிய சொல்லோவியமாகத் தீட்டுகின்றார்.

அந்தப் பாடலைப் பார்ப்போம்:

வாகை வனமாலை சூடி யரசுறையும்
ஓகை யுயர்மாடத் துள்ளிருந்து—கூகை
படுபேய்க்குப் பாட்டயரும் பண்பிற்றே தென்னன்
விடுமாற்றங் கொள்ளாதார் நாடு. *

(பா - வே.) 6 யுறைமாடத். 15 வீடு. * இப்பாடலை 66-ஆம் பாடலுடன் ஒப்பிடுக.

இது பகைப்புலம் பழித்தல்.

**விளக்கம்:** வாகை வனமாலை - வாகைப் பூப்போல் பொன்னால் செய்யப்பெற்ற அழகிய மாலை; வாகைப்பூவும் என்று கொள்ளினும் அமையும்; இது வெற்றி மாலை. அரசு உறையும் - அரியணையில் அரசர்கள் வீற்றிருக்கும். ஓகை - மகிழ்ச்சி; உவகை என்பதன் திரிபு. ஓகை உயர்மாடத்து - கொண்டாட்டங்களுக்காக அமைத்த உன்னதமான மண்டபத்தில். கூகை - பெருங்கோட்டான். படுபேய்க்குப் பாட்டு அயரும் பண்பிற்றே - முது பேய் உறங்குவதற்குப் பாட்டுப் பாடும் தன்மையுடையதாக மாறிவிட்டது. தென்னன் - பாண்டியன். விடுமாற்றம் - அரசன் தூதனிடம் சொல்லிவிட்ட சொல்.

பகையரசரது ஊரும் நாடும் பாழ்பட்டுப்போயின என்ற செய்தியைப் பாட்டு அழகிய வேகத்துடனும் பாவத்துடனும் காட்டுகின்றது. (13)

[15]

# திறை செலுத்தாத நாடு

அக்காலத்தில் பாண்டிய நாடு ஒரு பேரரசாகத் திகழ்ந்தது. பாண்டியனுக்குக் கீழ்ப் பல சிற்றரசர்கள் வாழ்கின்றனர். அவர்கள் யாவரும் குறிப்பிட்ட நாட்படி, குறிப்பிட்ட கணக்குப்படிப் பாண்டியனுக்கு ஒழுங்காகத் திறை செலுத்தி வாழ்கின்றனர். யாரோ ஓர் அரசன் அரிதாகக் கப்பம் கட்டத் தவறினுல் பாண்டியன் அவன் மீது முறைப்படி நடவடிக்கைகளை எடுப்பது வழக்கம்.

முதலில் அவன் ஒரு தூதனை அனுப்பி முறைப்படி திறை செலுத்துமாறு எச்சரிக்கை செய்வான். அதற்கும் அவன் அசையாவிட்டால் அச் சிற்றரசனின் ஆநிரைகளை யெல்லாம் கொண்டுவரச் செய்வான். அப்படிச் செய்தும் அச் சிற்றரசன் வழிக்கு வரவில்லையெனில், போர்* தொடங்குவான். ஆநிரைகளைக் கவருதல் போர் தொடங்குவதற்கு அறிகுறியாக அமைந்தது அக்காலத்தில். போர்ப் பறையின் முழக்கத்தைக் கேட்டு அந்நாட்டுப் பெண்கள் தமக்கேற்ற புகலிடங்களைத் தேடிக்கொள்வர். முதியரும் பிணியாளரும் சூல் கொண்ட பெண்டிரும் நாட்டைவிட்டு அகன்று, தத்தமக்கேற்ற இடங்களைச் சென்று அடைவர். அதன் பிறகு போர் தொடங்கும்.

பாண்டியனிடம் பெரிய யானைப்படை இருந்தது. அதிலுள்ள ஒவ்வொரு யானையும் முரட்டுத்தனம் உடையது. அதனுல் அது வெளியில் செல்லும்பொழுது அதன் முதுகில் பெரிய முரசினை வைத்து அடித்துக்கொண்டு செல்வது வழக்கம் : தீயணைக்கும் பொறி செல்லுங்கால் கண்டாமணியை அடித்துக்கொண்டு போவதுபோல. இந்த யானைப்படைகளை ஏவி அச்சிற்றரசனுடைய நாட்டினைப் பாழாக்கி விடுவான் பாண்டியன். பிறகு அச்சிற்றரசனது நாட்டில் பேய்கள் தாம் வாழும். எல்லாம் சுடுகாட்டு மயமாகிவிடும்.

இந்த நிலையைக் கவிதையில் காண்போம் :

பறைநிறை கொல்யானைப் பஞ்சவற்குப் பாங்காய்த்
திறைமுறையி னுய்யாதார் தேயம்—முறைமுறையின்
ஆன்போ யரிவையர்போ யாடவர் யாயீன்ற
ஈன்பே யுறையு மிடம்.

இதுவும் பகைப்புலம் பழித்தல் ஆகும்.

விளக்கம்: பறையறை கொல் யானை - மன்னனுடைய கொல் யானை களை நீர்த்துறைக்குச் செல்ல விடுங்கால் முன்னர் அதன் வருகையைப் பறை யறைந்து அறிவித்தல் வழக்கம். இந்த முறையினை,

'நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்
பறையறைந் தல்லது செல்லற்க என்னு
இறையே தவறுடை யான்'

என்ற குறிஞ்சிக் கலியாலும் (குறிஞ் - 20) அறியலாம்.

பஞ்சவர் - பாண்டியர். பாங்காய் - முறையாக; ஒழுங்காக. திறை முறையின் உய்யாதார் - தம் முன்னோரும் தாமும் இதற்கு முன்னர் செலுத்தி வந்ததுபோல் செலுத்தாதவர்கள். முறை முறையின் - ஒன்றன் பின் ஒன்றாக. ஆன்போய் - ஆநிரைகள் அகன்று. அரிவையர் - பெண்கள். ஆடவர் - ஆண்கள்; இவர்கள் போரில் இறந்தோ அல்லது காடு நோக்கிச் சென்றோ இல்லாது ஒழிவர் என்றவாறு. இங்ஙனம் எல்லோரும் அகன்ற பிறகு அந்த இடத்தில் இளம் பேய்கள் உறையும் என்பதைக் குறிக்கவே 'ஈன்பேய் உறையும் இடம்' என்றார்.

தாய்ப்பேய்களும் ஆண் பேய்களும் போர்க்களத்தில் இறந் தொழிந்தோரது ஊனினை உண்ணச் சென்று விடுகின்றன வாதலின், இளம் பேய்கள் மட்டிலும் தங்கியிருக்கின்றன. சிற்றரசனின் நாடும் ஊரும் அவ்வளவு பாழாய்ப்போய்விடுகின்றன. இச் செய்தியைப் பாடல் அரிய வேகத்தோடும் பாவத்தோடும் காட்டு கின்றது. (14)

(பா. வே.) 1 பறைநின்ற; 3 பஞ்சவர்க்குப்; 11 யாடவர்; 12 யாயின்றே; போயின்றே; யாயிற்றே.

# வீரத்திற்கு முன்னர் சோகம்

ஒரு சமயம் திறை கட்ட மறுத்த அரசர்களுள் சிலர் தென்னவனை வந்து எதிர்க்கின்றனர். போர் கடுமையாக நடைபெறுகின்றது. எம்மருங்கு நோக்கினும் வீர வுணர்ச்சி பொங்கி வழிகின்றது. பகைவர்களும் அதி மும்முரமாகப் போர் புரிகின்றனர். நெளிந்த புருவமும் சிவந்த கண்ணும் கடித்த எயிறும் மடித்த உதடும் சுருட்டிய நுதலும் கொண்டவராகக் கையில் அயில் வேலுடன் அவர்கள் பாண்டியப் படைகளை எதிர்க்கின்றனர். இந்நிலையில் பாண்டியனது வேற்படையினர் மீதூர்ந்து வந்து மாற்றார் படையினர்மீது வேலோச்சி விடுகின்றனர். வேலேற்ற மாற்றார் அனைவரும் அருகில் வெட்டுண்டு கிடக்கும் யானைகளின்மீது சாய்ந்து விடுகின்றனர். இத்துடன் போரும் முடிவுபெருகின்றது.

பாண்டியன் களங் காண வந்துகொண்டிருக்கின்றான். களத்தில் ஒரு காட்சி அவன் கண்ணில் படுகின்றது. மாற்றார் பக்கத்தில் வேற்படை தாங்கி வந்த வீரன் ஒருவன் பழுதுபட்ட விழிகளுடன் பக்கத்தில் வெட்டுண்டு கிடக்கும் களிற்றியானையின்மீது சாய்ந்து கிடக்கின்றான். அவன் வெஞ்சமர் புரிய வெஞ்சினத்துடன் வாய் மடித்த நிலையில், சிவந்த கண்களுடனும் மேலேறிய இமைகளுடனும் மேலேறி வந்த பொழுது தென்னவன் படைவீரனால் கொல்லப்பட்டவன். இச் சோகக் காட்சியைக் காணும் பாண்டியனின் மனம் நிலை குலைகின்றது; நெஞ்சம் விம்முகின்றது. அந்த வீரன் கையிலே தாங்கியிருந்த ஓச்சும் நிலையிலுள்ள வேலைக் கண்டு, 'வென்றிலேன், வென்றிலேன்' என்று ஓலமிட்ட நிலையில் நிற்கின்றான். கலிங்கப் போருக்குப் பின்னர் அசோகருக்கு ஏற்பட்ட மனநிலை பாண்டியனுக்கும் வந்து விடுகின்றது. இதைத்தான் கவிஞர் தம் சொல்லோவியத்தால் நமக்கு அறிவிக்கின்றார்.

இனி, பாடலைக் கண்போம் :

> கொடித்தலைத்தார்த் தென்னவன் தோற்ருன்போல் நின்ருன்
> மடித்தவாய் சுட்டிய கையாற்—பிடித்தவேற்
> கண்ணோரா வோச்சிக் களிறணையாக் கண்படுத்த
> மண்ணோரா மன்னரைக் கண்டு.

இது பாண்டியனின் வென்றியினை விளம்புவது.

*விளக்கம் :* கொடித்தலைத்தார் - உச்சியில் வெற்றிக்கொடி கட்டிய வேலாயுதத்தையுடைய. தென்னவன் - பாண்டியன். தோற்ருன்போல் - வென்றும் வெல்லாதது போல். தேற்ருன்போல் - என்பது பாடமாயின், 'தெளியாதவன் போல், அஃதாவது ஒன்றும் புரியாதவன் போல்' என்று பொருள் கொள்க.

சுட்டிய கையால் பிடித்த வேல் - குறி பார்த்து கையிற் பிடித்த வேல். கண் நேரா ஓச்சி - எதிரியின் கண்ணுக்கு நேராக ஓங்கி. களிறு அணையா - யானையே சாய்வதற்கேற்ற பொருளென அறிந்து. கண்படுத்த - கண் மூடிக் கிடந்த. இத்தகைய பெருவீரன் இறந்தும் இறவாதவன் ஆகலின், 'இறந்த' என்னுது, 'கண்படுத்த - தூங்க' என்று கூறியுள்ள நயம் உணர்ந்து மகிழத் தக்கது. மண் நேரா - மண்ணை அடையாத.

போர்க்களத்தில் பகை மன்னர் பட்டிறந்ததையும் பாண்டியனது முழு வெற்றியினையும் பட்டவர்த்தனமாக எடுத்துக் காட்டுகின்றது இப்பாட்டு. அத்துடன் பகைவரின் வீரத்தைப் பாராட்டும் பண்பு பாண்டியனிடம் இருப்பதையும் புலனுக்குகின்ருர் கவிஞர். (15)

(பா - வே.) 1 கொடுத்தலத்தார்த்; 3 தேற்ருன்போல்; 11 களிறணையாற்.

[17]

# சினம் போக்கும் மருந்து

ஒரு சமயம் அறிவின்மையால் ஒரு சில அரசர்கள் பாண்டியனை எதிர்த்துப் போர்புரிய வந்து விடுகின்றனர். ஆழந் தெரியாமல் காலை விட்டு மாட்டிக்கொள்வது போல், போர் செய்து வெற்றிபெற முடியாது அவர்கள் திண்டாடுகின்றனர். எப்படியாவது தப்பிப் பின் வாங்கிவிடலாம் என்ற எண்ணந்தான். என்ன செய்வது? பாண்டியன் வீண் போர் புரியான்; வந்து விட்ட போரையும் விடமாட்டான். வெற்றி காணும்வரை மெய்வருத்தம் பாரான்; பசி நோக்கான்; கண் துஞ்சான். இது பாண்டியனின் மறப் பண்பு.

இந் நிலையில் பாண்டியனின் பண்பினைக் கேள்வியுற்ற ஒருவன் அவ்வரசர்கட்கு யோசனைகூற முன் வருகின்றான். பகைவர் சார்பிலுள்ள ஒருவனை நோக்கி இவ்வாறு பேசுகின்றான்: " 'தென்னவன் இன்னும் சீற்றம் தணிந்தவனாகத் தெரியவில்லை. அறியாமையினால் கிளப்பி விடப்பெற்ற சினத்திற்கு மருந்தும் உண்டு. சினம் பொங்கும் அவன் கண்ணிலுள்ள சிவப்பைப் போக்க வேண்டுமாயின் உங்கள் மன்னர்களின் தேவிமார் தம் மக்களை இட்டு வந்து அவன் முன் நிறுத்தி மண் இரத்தல் செய்யவேண்டும். இல்லையெனில், அவர்கட்கு மண்ணுலகில் வாழ்வில்லை. விண்ணாடு ஏக வேண்டுயதுதான்'! என்று பெரியோர் கூறுவர்" என்கின்றான்.

இந்த நிகழ்ச்சிகளைக் கவிஞர் தனது அரிய சொல்லோவியத்தால் மிக அழகாகப் பெற வைக்கின்றார்.

இனி, பாடலைப் பார்ப்போம்:

**தொழில்தேற்றாப் பாலகனை முன்னிறீஇப் பின்னின்**
**றழலிலைவேல் காய்த்தினார் பெண்டிர் — கழலடைந்து**
**மண்ணிரத்த லென்ப வயங்குதார் மாமாறன்**
**கண்ணிரத்தந் தீர்க்கு மருந்து.**

(பா - வே.) 9. மண்ணரந்த்தல்; 13 கண்ணந்த்தல்.

இதுவும் பாண்டியனின் வென்றியினை விளக்குவதுவே.

விளக்கம் : தொழில் தேற்றாப் பாலகனை - எச்செயலையும் தானாக உணர்ந்து மேற்கொள்ளத் தெரியாத விளையாட்டுப் பருவத்திலுள்ள சிறுவனை. முன்னிறீஇ - முன்னால் நிற்கச் செய்து. பின்னின்று - பின்னால் தாம் (தாய் மார்கள்) நின்று. அழல் இலைவேல் காய்த்தினார் - நெருப்புப்போல் ஒளிர்கின்ற இலை வடிவமைந்த வேலுக்குச் சீற்றத்தை உண்டாக்கினவருடைய. பெண்டிர் - மனைவியர். கழல் அடைந்து - காலில் விழுந்து. மண் இரத்தல் - 'மண்ணுலக வாழ்வு வேண்டும்' என்று வேண்டி நிற்றல். தார் - மாலை. கண்ணிரத்தம் – கண்ணிலுள்ள சிவப்பு ; சிவப்பு சீற்றத்தைக் குறிக்கும். 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள' என்று தொல்காப்பியம் கூறும்.

இது தென்னவனின் கருணையை எடுத்துக்காட்ட வந்த பாட்டு. விளையாட்டுச் சிறுவன் செய்யும் செயல் யாரையும் உருக்கி விடும். பாண்டியன் அதற்கு உருகுவது உறுதி. (16)

# பாண்டியனுக்குப் பாமாலை

மெய்யுணர்வு பெற்ற பெரியோர்கள் பண்டிருந்து இன்று வரை இரண்டு உண்மைகளை வலியுறுத்தி வருகின்றனர். ஒன்று, மெய்ப்பொருள் உண்மை; அதாவது கடவுள் இறுதியில்லாத இடமெங்கும் பரவி நிற்கின்றான் என்பது. மெய்ஞ்ஞானச் செல்வர்கள் யாவரும் இந்த உண்மையில் திளைத்துக் களித்தவண்ண மிருக்கின் றனர். மற்றொன்று, வழிபாட்டுக்குரிய உருவத்தில் ஈடுபட்டு, 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மானிலத்தே' என்று கூறுமளவுக்குப் பேரானந்தம் கொள்ளுவது. உலகிலுள்ள எல்லாச் சமயங்களிலும் இந்த இரண்டு செய்திகள் அமைந்திருப்பதைக் காணலாம்.

பண்டைத் தமிழர்கள் முதலில் குறிப்பிட்ட உண்மையிலும் இரண்டாவதாகக் குறிப்பிட்ட அடையாளத்திலும் தம்மைப் பறி கொடுத்து அவற்றை நன்கு அனுபவித்திருக்கின்றனர். இந்த இரண்டும் அடங்கியது முருகன் வழிபாடு. பண்டிருந்து இன்று வரை இந்த வழிபாடு தமிழர்களின் இதயத்தைக் கொள்ளை கொண் டிருக்கின்றது. * எல்லை காணாத நீலவானத்தை நீலத்தோகை விரித்தாடும் மயில் என்றும், வானம் எங்கும் நீக்கமற நிறைந்திருக் கும் கடவுள் உண்மையை முருகன் என்றும் உருவகப் படுத்தினர் பண்டையோர். இந்த உருவத்தின்மீது ஈடுபட்டு அடியார்கள் பாடியருளிய பாடல்கள் எண்ணிறந்தவை. எடுத்துக்காட்டு:

பணிப்பகை மயிலும் சேவற்
　　பதாகையும் பன்னி ரண்டு
மணிக்குழை களுமோ ராறு
　　வதனமும் வாகை வேலுந்

* முருகன் வழிபாட்டைப் பற்றிய செய்திகளை ''முருகன் அல்லது அழகு'' [திரு.வி.க.] என்னும் நூலால் ஓரளவு விரிவாக அறியலாம்.

தணிப்பசுங் கடப்பந் தாருந்
 தண்டையந் தாளு நாளுங்
கணிப்பருஞ் செந்தி லாயென்
 கருத்தைவிட் டகன்றி டாயே. ‡

முருகன் வழிபாட்டில் அருணகிரியாரின் பாடல்கள் மிகவும் குறிப்பிடத் தக்கவை.

முத்தொள்ளாயிர ஆசிரியர் முருகன் வழிபாட்டில் ஈடுபட்டவர்; நாடோறும் கந்தனை வழிபடுகின்றவர். முருகனுக்குக் கடம்பம் பூ சிறந்ததாதலின் அப் பூவை மாலையாகத் தொடுத்து அவனுக்கு அணிவார்; அம்மலர்களால் அருச்சனை செய்து அவனைத் தொழு தேத்துவார். இவ்வாறு முருகனது அருளில் மூழ்கி யிருக்கும் கவிஞர் ஒரு சமயம் பாண்டியனை வாழ்த்த நேரிடுகின்றது. அவனை எழிலுடன் போற்ற எண்ணுகின்றார்.

பகைவரைத் தொலைத்து வாகை சூடி வெற்றி வேலைக் கையில் தாங்கியிருக்கும் பாண்டியன், இரு வினைகளையும் கெடுத்து தலைமீ துள்ள அயன்கையெழுத்தையும் அழிக்கவல்ல முருகனாகத் தோன்று கின்றான். 'கந்தனுக்குக் கடம்ப மாலை சூட்டுகின்றோம். தென்ன வனுக்கு என்ன மாலை சூட்டுவது?' என்று யோசிக்கின்றார் கவிஞர். 'தார்மாறனுக்குத் தமிழ் மாலை சூட்டுவோம்' என்று முடிவு கட்டுகின் றார். தாம் தொடுத்து அணியும் கடம்பம் பூ மாலையை முருகன் மகிழ்ந் தேற்றுக் கொள்வதைப்போலவே, முத்தமிழைப் போற்றி வளர்க்கும் பாண்டியன் தமது பாமாலையை விரும்பி யேற்றுக் கொள்வான் என்றும் கருதுகின்றார்; கடம்பம்பூ மாலை கந்தனுக்கே சிறந்தாற் போல, தமது தமிழ்ப் பாமாலை தென்னவனுக்கே சாலச் சிறந்தது என்று எண்ணுகின்றார். இந்த எண்ணம் அவரது உள்ளத்தில் ஓர் அழகிய பா வடிவம் கொள்ளுகின்றது.

‡ சுவாமிநாத தேசிகர்: திருச்செந்திற் கலம்பகம் செய் - 88

இனி, பாடலைப் பார்ப்போம் :

மடங்கா மயிலூர்தி மைந்தனை நாளுங்
கடம்பம்பூக் கொண்டேத்தி யற்றால் — தொடங்கமருள்
நின்றிலங்கு வென்றி நிறைகதிர்வேல் மாறனை
இன்தமிழால் யாம்பாடும் பாட்டு.

இது பாண்டியனது புகழ் கூறுவது. இதனை அடுத்து வரும் ஐந்து பாடல்களும் புகழைப்பற்றியனவே.

விளக்கம் : மடங்கா - முடிவே இல்லாத. மைந்தனை - முருகனை. ஏத்தி அற்றால் - பாடிப் புகழ்ந்தது மாதிரிதான். தொடங்கு அமருள் - பகைவர் களுடன் தொடங்கும் போரில். நின்றிலங்கு வென்றி - நிலைபெற்று விளங் கும் வெற்றியைத் தரக்கூடிய. நிறைகதிர்வேல் மாறன் - போர்க்களம் எங்கும் நிறைந்த கூரிய வேற்படையை யுடைய பாண்டியன். மாறன் - பாண்டியன். பாண்டியனைப் பாமாலையால்போற்றுவது முருகனைப் பூமாலையால் வழிபடுவ தற்கொப்பாகும் என்பது கருத்து.

இறை வழிபாட்டில் பண்பட்டுத் திளைக்கும் கவிஞரின் உள்ளம் முறை செய்து காப்பாற்றும் மாறனை மக்கட்கு இறை என நினைத்துப் போற்றுகின்றது. (18)

# மாறன் அடிமிசை மாற்றரசர்களின் மலர்கள்

ஒரு சமயம் பாண்டியன் அமைச்சர் தானைத் தலைவர் முதலியோர் புடைசூழ அத்தாணி மண்டபத்தில் கொலுவீற்றிருக்கின்றான். பல சிற்றரசர்கள் அவனை வந்து வணங்கி அவரவர்தம் இருக்கையில் அமர்கின்றனர். அவர்கள் தலைதாழ்த்தி வணங்கும்பொழுது தத்தம் முடிகளில் அணிந்திருந்த தம் நாட்டுப்பூக்கள் பாண்டியனின் காலடி யில் விழுகின்றன. இந்தப் பூக்களைக்கொண்டே எந்தெந்த நாட்டு மன்னர்கள் வந்துள்ளனர் என்பதை அறிந்து கொள்ளலாம். பூக்கள் வீழ்ந்த காட்சி கவிஞரின் சிந்தனையைப் பெரிதும் கவர்கின்றது. தென்னவன்பால் பெருமதிப்புக்கொண்டவராதலால் அவனைப் புகழ எண்ணுகின்றார்.

அவரது மனம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தபொழுது பாரதத்தி லுள்ள ஒரு வரலாறு அவரது நினைவுக்கு வருகின்றது. ஐவர்க்கும் நூற்றுவர்க்கும் நடைபெற்ற கடும்போரில் அருச்சுனனுக்குப் பேரதிர்ச் சியைத்தரும் நிகழ்ச்சி ஒன்று ஏற்பட்டு விடுகின்றது. அருச்சுனனின் அருமை மகன் அபிமன்னன் போர்த்திறம் மிக்க வீரன். பகைவர் சேனையைப் பதின்மூன்று நாட்களாகப் படுகொலை செய்து வருகின் றான். மாற்றார் அவனை எப்படியாவது கொன்று விடவேண்டுமென்று சதி செய்கின்றனர். பதின்மூன்றாம் நாள் அருச்சுனன் வேறோர் இடத்தில் போர் புரிந்துகொண்டிருக்கும்பொழுது கன்னன், துரோ ணன், சயத்திரதன் முதலிய மாபெரும் வீரர்கள் பல கோடிக்கணக் கான வீரர்களுடன் அபிமன்னனை வளைத்துக்கொண்டு முறைமை யின்றிப் போர் செய்து அவனை மாய்த்து விடுகின்றனர். சயத்திர தனின் வாளுக்கு இரையாகிவிடுகின்றான் வீர அபிமன்னன்.

வேறிடத்தில் போர் செய்துகொண்டிருந்த பார்த்தன் மீண்டு வந்ததும் தன் மகன் மரித்ததை அறிகின்றான். அடியற்ற நெடுமரம் போல் தேரிலிருந்து சாய்கின்றான். அவனால் புத்திர சோகத்தைத் தாங்கமுடியவில்லை. கல்லும் புல்லும் நின்றுருகக் கண்ணீர்விட்டு அரற்றுகின்றான். 'நாளை அந்திபடு வேளைக்குள் சயத்திரதனின்

ஆவியைக் கவரேனேல் வெந்தழலில் வீழ்வன் ; இதுமறை மொழி என்று சூளுரைக்கின்ருன். உணவு உண்ணவும் அவன் மனம் செல்ல வில்லை. கண்ணனும் அருச்சுனனும் அன்றிரவு முடிவதற்குள் கயிலைப் பொருப்பனைக் கண்டு வரச்செல்லுகின்றனர்.

வழியில் அருச்சுனன் மிகவும் அயர்ச்சியடைகின்ருன். கனியும் நீரும் அருந்திப் பசியையும் விடாயையும் போக்கிக்கொள்ளுமாறு தூண்டுகின்ருன் கண்ணன். 'கண்ணுதலோதனைப் பூசனை புரிய வில்லையே, எங்ஙனம் உண்பது ?' என்று மறுமொழி கூறுகின்ருன் பார்த்தன். பார்த்தசாரதியும் 'என் முடிமீது கானக மலரினைத்தூவி பூசனைபுரிக ; யானும் அரனும் ஒருவரே என்பதை அருவரையடைந் ததும் காண்பாய்' என்கின்ருன். அங்ஙனமே தனஞ்செயனும் மன்றலந்துழாய் முடி மாயனை சிவாகம உரையினால் மலர்தூவி வணங் கிக் கனியுண்டு அயர்ச்சி நீங்குகின்ருன். பிறகு கண்ணனுடன் கருடன்மீது ஏறிக் கயிலையங்கிரிக்குச் சென்று கண்ணுதலோனைப் பணிகின்ருன். தான் கண்ணனின் முடியிலேற்றிய மலர்கள் கண்ணு தலோனின் அடித்தலத்தில் கிடத்தலைக் கண்டு இறும்பூது அடை கின்ருன். பின்பு பரமனிடம் படைக்கலம் பெற்று வந்து பகையறுக் கின்ருன். இந்த வரலாற்றை எண்ணுகின்ருர் கவிஞர்.

உடனே கவிதையும் உருவாகி வடிவமும் பெற்றுவிடுகின்றது. இனி, பாடலைக் காண்போம்:

செங்க ணெடியான்மேற் றேர்விசய னேற்றியபூப்
பைங்கண் வெள் ளேற்ருன்பாற் கண்டற்ருல்—எங்கும்
முடி மன்னர் சூடியபூ மொய்மலர்த்தார் மாறன்
அடிமிசையே காணப் படும். *

இதுவும் பாண்டியனின்புகழ் பாடியதே.

தீர்த்த னுலகளந்த சேவடிமேற் பூந்தாமம்
சேர்த்தி யவைவே சிவன்முடிமேற் ருன்கண்டு
பார்த்தன் றெளிந்தொழிந்த பைந்துழா யான்பெருமை
பேர்த்து மொருவராற் பேசக் கிடந்ததே.

என்ற திருவாய் மொழியையும் (2 : 8—6) ஈண்டு எண்ணி மகிழ்க. மேலும்,

விளக்கம்: செங்கண் நெடியான் – செந்தாமரைக் கண்ணனாகிய கண்ணன்; தேர் விசயன் - அருச்சுனன். ஏற்றிய - அருச்சித்த. பைங் கண் - நீர்நயத்துடன் ஒளிரும் கண்களையுடைய. வெள்ளேற்றான் தாள் - வெண்ணிறக் காளையை வாகனமாகக்கொண்ட சிவபெருமானுடைய அடி. கண்டற்றால் - கண்டதைப்போல மொய் மலர்த்தார் மாறன் - வண்டுகள் மொய்க்கின்ற மலர் மாலையணிந்த பாண்டியன். மாறன் - பாண்டியன். அடி மிசை - பாதத்தின்மீது.

இது அருமையான பெருமிதச் சுவையுடைய பாடல். (18)

48-ஆம் பக்கத்தின் தொடர்ச்சி (19-ஆம் பாட்டின் அடிக்குறிப்பு) :
நக்கீரதேவ நாயனாரின்,

கதையிலே கேளீர் கயிலாயம் நோக்கிப்
புதையிருட்கண் மாலோடும் போஒய்—சிதையாச்சீர்த்
தீர்த்தன்பாற் பாசுபதம் பெற்றுச் செருக்களத்திற்
பார்த்தன்போர் வென்றிலனோ பண்டு. *

என்ற பாடல் (கைலைபாதி - காளத்தி பாதி அந்தாதி - செய்.13.) ஈண்டு நினைவுக்கு வருகின்றது. இன்னும் இத்தகைய கருத்தினைப் போன்ற ஒரு கருத்தினைக் கொண்ட திருமழிசையாழ்வாரின்,

குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்பெய்து
மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி கறைகொண்ட
கண்டத்தான் சென்னிமேல் ஏறக் கழுவினான்
அண்டத்தான் சேவடியை யாங்கு.

என்ற பாசுரத்தையும் (நான்முகன் திருவந்தாதி - 9) ஈண்டு நினைத்தல் தகும்.

# யாங்கு ஒளித்தாய் ?

முறைதவறாது ஆட்சிபுரியும் அரசனை மக்கள் 'இறைவன்' என்றே கருதி மதிப்பு தரும் வழக்கம் பண்டைய நாளில் இருந்தது. இத்தகைய அரசனைத் திருமாலுடன் ஒப்பிட்டுப்புகழும் முறையும் ஏற்பட்டது. இதனை இலக்கண ஆசிரியர்கள் 'பூவை நிலை' என்று குறிப்பிடுவர். தொல்காப்பியரும்,

> 'மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்
> தாவா விழுப்புகழ் பூவை நிலை...' *

என்று கூறுவர். நம்மாழ்வாரும் 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே' † என்று நவில்வர்.

ஒரு சமயம் தென்னன் அத்தாணி மண்டபத்தில் கொலு வீற்றிருப்பதைக் கவிஞர் காண்கின்றார். அவரது கண்களுக்குத் தென்னன் திருமால் போலவே காட்சி யளிக்கின்றான். அக் காட்சி அவருடை உள்ளத்தைத் தூண்டுகின்றது; பாடலும் உருப்பெறத் தொடங்குகின்றது. எக்களிப்பில்,

> 'தென்னவனே ! தேர்வேந்தே !
> தேறுநீர்க் கூடலார்
> மன்னவனே !'

என்று மாறனை விளிக்கின்றார் கவிஞர். தான் கண்டுபிடித்துவிடக் கூடும் என்று திருமால் பாண்டியன் வடிவில் வந்திருப்பதாகக் கருதுகின்றார். மாறனின் ஆட்சி முறையே அவனை மால் என்று பறைசாற்றுகின்றதே என்றும் எண்ணுகின்றார்.

'திருமாலுக்குத்தான் ஓர் அடையாளம் இருக்கின்றதே!' என்று தான் அவரைக் கண்டுபிடித்து விட்டதாக நினைக்கின்றார்.

* தொல் - பொருள் - புறத் - நூற். 5 (இளம்.) † திருவாய் - 4 : 4 - 8.

அவனது மார்பில் மறு ஒன்று உண்டு. கண்ணன் சிறுவனாக இருந்த பொழுது கம்சன் அனுப்பிய வஞ்சகஅரக்கன் குதிரைவடிவில் அவனைக் கொல்ல வந்தபொழுது கண்ணன் அவ்வரக்கனின் வாயைக் கிழித்து அவனைக் கொன்றபொழுது அம்மறு இருந்தது. அதன் பிறகு தன் மகள் உழையின்பொருட்டு வாணனால் சிறைவீடு செய் யப்பெற்ற காமனின் மகன் அநிருத்தனை மீட்கச் சென்ற கண்ணன் மண்ணாலும் உலோகத்தாலும் செய்யப்பெற்ற குடங்களைக்கொண்டு கூத்தாடியபொழுது அம்மறு காணப்பட்டது. மற்றும், ஏழு கொல் லேறுகளைத் தழுவி அடக்கி நப்பின்னைப் பிராட்டியைக் கண்ணன் மணந்த காலத்திலும் அம்மறு தென்பட்டது. இப்பொழுதும் அம்மறு பாண்டியன் வடிவாக வந்துள்ள திருமாலிடம் இருக்கவேண்டும் என்று ஊகம் செய்கின்றார் கவிஞர். அவனையே கேட்டு விடலாம் என்று அவரது மனம் எண்ணுகின்றது. இந்த நிலையில் பாட்டும் வடிவம் பெற்றுவிடுகின்றது.

இனி, பாடலைக் காண்போம்.

**கூந்தன்மா கொன்று குடமாடிக் கோவலனாய்ப்**
**பூந்தொடியைப் புல்கிய ஞான்றுண்டால்—யாங்கொளித்தாய்**
**தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்**
**மன்னவனே மார்பின் மறு. ***

இது மாறனை மாலாகவே புகழ்வது.

(பா. வே.) 5. பூந்தொடையைப்.

* குருந்த மொசித்தஞான் றுண்டா லதனைக்
கரந்த படியெமக்குக் காட்டாய்—மரம்பெரு
போரிற் குருகுறங்கும் பூம்புன னீர்நாட
மார்பிற் கிடந்த மறு.

என்ற பாடலும் இக் கருத்து பற்றியே வந்தது. (தொல்காப்பியப் புறத்திணையியல் - நூற்பா 5. நச்சினார்க்கினியருரை மேற்கோள்.)

விளக்கம்: கூந்தல்மா - பிடரி மயிர் நிறைந்த குதிரை. இது கம்சன் ஏவிய அரக்கன் குதிரை வடிவுகொண்டு கண்ணனைக் கொல்லவந்தபொழுது கண்ணன் அவ்வரக்கனைக் கொன்ற வரலாற்றினைக் குறிக்கின்றது. குடமாடி-அநிருத்தனை மீட்கச் சென்றபொழுது கண்ணன் ஆடிய குடக்கூத்தினைச் சுட்டுகின்றது.† கோவலன் - ஆவினங்களைக் காப்பவன் பூந்தொடி - பூப் போன்ற வளையலை அணிந்தவள்; இது அன்மொழித்தொகைப் பொருளில் நப்பின்னையை உணர்த்துகின்றது. யாங்கு ஒளித்தாய் - எங்கு மறைத்து வைத்துக்கொண்டாய். தென்னவன் - பாண்டியன். தேறுநீர் - தெளிந்த நீர். கூடல் - மதுரை.

பெருமிதச் சுவை நிறைந்த பாடல். பெரிதாக ஒன்றைக் கண்டு பிடித்து விட்டதாகக்கொண்டு, "யாங்கொளித்தாய்!" என்று பேசும் பாவம் நம் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளுகின்றது. (19)

† இது 51-ஆம் பக்கத்தின் தொடர்ச்சி (20-ஆம் பாடலின் அடிக்குறிப்பு).

'வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீணிலம் அளந்தோன் ஆடிய இடமும்'

என்ற சிலப்பதிகார அடிகளாலும் (கடலாடு காதை—வரி. 545—46,)

'கோலால் நிரைமேய்த்து ஆயனாய்க்
குடந்தைக் கிடந்த குடமாடி'

என்ற ஆண்டாளின் திருவாக்காலும் (நாச்சியார் திருமொழி—13 : 2.),

'பாரோர்க ளெல்லாம் மகிழப் பறைகறங்கச்
சீரார் குடமிரண் டேந்திச்—செழுந்தெருவே
ஆரார் எனச்சொல்லி ஆடும் அதுகண்டு'

என்ற நாலாயிரம் - சிறிய திருமடல் (வரி. 23—25) பகுதியாலும்,

கொட்டாய் பல்லிக்குட்டி, குடம்ஆடி உலகளந்த
மட்டார் பூங்குழல் மாதவனைவரக்
கொட்டாய் பல்லிக் குட்டி

என்ற நாலாயிரம் - பெரிய திருமொழி (10 : 4) யாலும் அறியலாகும்.

[21]

# பல்வளம் செறிந்த பாண்டிநாடு

கவிஞர் பாண்டி நாடு முழுமையும் சுற்றிப் பார்த்துப் பல்வளங்களையும் பாங்குற அறிந்தவர். அரசன் அருகிலேயே இருந்து பல செய்திகளைத் தெரிந்தவர். அத்தாணி மண்டபத்தில் அரசன் வீற்றிருக்கும்பொழுது நடைபெறும் பல நிகழ்ச்சிகளை அவர் நேரிலும் கண்டறிந்திருக்கின்றார்.

மாறனின் மண் இயற்கைவளஞ் செறிந்தது ; கனி (Mine) வளம் மிக்கது. எப்பக்கம் அகழ்ந்தாலும் செம்பொன் காணப்பெறும் ; தோண்டத் தோண்டத் தங்கம் கிடைக்கும். பல பகுதிகளிலிருந்தும் தங்கக் கட்டிகள்—பாளங்கள்—வந்த வண்ண மிருக்கின்றன. பூமியில் கிடைப்பதெல்லாம் பொன்தானோ என்று வியக்கின்றார் கவிஞர்.

தலை நகரமாகிய மதுரையில் முத்தமிழ்ப் பண்ணை செழித்திருக்கின்றது. இயல்,இசை,நாடகங்களைப் பல புலவர்கள் கண்ணுங் கருத்துமாகக் கவனத்துடன் வளர்த்து வருகின்றனர். சங்க இலக்கியக் கருவூலம் என்பது சாமானியமா? அதனை ஆராய ஆராய அது வற்றாத கருத்துச் செல்வத்தை யல்லவா கொடுத்துக்கொண்டிருக்கின்றது ?

பாண்டி நாட்டைச் சுற்றியுள்ள கடலின் வளமும் சொல்லுந் தரமன்று. கைவளையல்களுக்கேற்ற சங்கின் குவியல்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. கொஞ்சம் ஆழ்ந்து மூழ்கினாலோ ஆரத்திற் கேற்ற அழகு முத்துக்கள் அளவுக்கு மீறிக் கிடைக்கின்றன.

நாட்டிலுள்ள மலைப்பகுதிகளில் களிற்றியானை நிரைகள் பல்கிப் பெருகிவருகின்றன. யானைப்படைகளுக்குரிய யானைகளைப் பணங் கொடுத்து வாங்கவேண்டிய அவசியமே பாண்டிய நாட்டில் இல்லை.

இவ்வளவு செல்வ வளத்தினைக் கண்டு பொறாமைப்பட்டோ அல்லது பேராசைப் பட்டோ பகைவர்கள் படையெடுத்து வந்தால் அவர்களுடைய மார்பங்களைக் கிழித்தெறிவதற்குப் பாண்டியனின் கையில் ஒளி பொருந்திய வேல் இருக்கின்றது. இந்த நிலையில் மாறனார்

அவனை எப்படித் துணிந்து எதிர்க்க முடியும்? ஆகவே, அனைவரும் அவனுடன் உறவுபூண்டே ஒழுகுகின்றனர்; பணிந்தே நடக்கின்றனர்.

இங்ஙனம் பாண்டியனது வளனையும் வீரத்தையும் புகழையும் கூறும் கவிஞரின் பாடல் இது:

> பார்படுப செம்பொன் பதிபடுப முத்தமிழ்நூல்
> நீர்படுப வெண்சங்கும் நித்திலமும்—சாரல்
> மலைபடுப யானை வயமாறன் கூர்வேற்
> றலைபடுப தார்வேந்தர் மார்பு.

இது மாறனின் வளம், வீரம், புகழ் ஆகியவற்றைக் கூறுவது.

**விளக்கம்:** பார் - பூமி. செம்பொன் - தங்கம். பதிபடுப முத்தமிழ் - ஊர்களில் காணக்கிடப்பது முத்தமிழைப் பரிபாலிப்பது. நீர்படுப - கடலில் காணக்கிடப்பது. நித்திலம் - முத்து. சாரல் மலைபடுப யானை - வளமான மலைச்சாரல்களில் காண்பது யானை நிரைகள். கூர்வேல் தலைபடுப – கூர்மையான வேல் முனையிற் காண்பது. தார் வேந்தர் மார்பு - பகை மன்னர்களின் மாலை யணிந்த மார்பு. தார் - மாலை.

பாண்டியனது வீரவேல் பகைமன்னர்களின் மார்பில் ஊடுருவி நிற்கும் காட்சியை நம் மனக்கண்முன் நிறுத்துகின்றார் கவிஞர். (20)

## [22]

# பகைவரும் பாம்பும்

பாம்பின் தலையில் மணி உண்டாகும் என்று சொல்வது இலக்கிய மரபு. அதனை 'நாகரத்தினம்' என்று வழங்குவர். பாம்பு மின்னலைக் கண்டு நடுங்கும். ஆகவே, அது கார் காலத்தைக் கண்டவுடன் புற்றினை நாடும். வானத்திலிருந்து இடியோசை கேட்டால் அதன் உயிர் ஊசலாடும். இடியைக் கேட்டால் அவ்வளவு அச்சம் அதற்கு.

இங்ஙனமே பகைவர்கள் பாண்டியனைக் கண்டு அஞ்சுகின்றனர். அவனது வேலைக் கண்டு ஓடி ஒளிந்து கொள்கின்றனர். அவர்கள் உறங்கும்பொழுதும் வேலினைக் கனவில் கண்டு நடுங்குகின்றனர். பகைவருக்குப் பாம்பை உவமையாக்கி, இடிக்கு அவனது வேலை உவமையாக்கிப் பாண்டியனது வீரத்தைப் பாட்டில் புகழ்ந்து பேசுகின்றார் கவிஞர்.

இதோ பாடல்:

> அருமணி யைந்தலை யாடரவம் வானத்
> துருமேற்றை யஞ்சி யொளிக்கும்—செருமிகுதோட்
> செங்கண்மா மாறன் சினவேல் கனவுமே
> அங்கண்மா ஞாலத் தரசு.

இது பகைவரின் நிலையைப் பகர்ந்து பாண்டியனது வீரத்தைப் புகழ்வது.

விளக்கம்: அருமணி - பெருமையாகப் பேசப் பெறும் நாகரத்தினம். ஐந்தலை - ஐந்து தலையையுடைய. ஆடரவம் - படம் எடுத்து ஆடும் பாம்பு. அரவம் - பாம்பு. உருமேற்றை அஞ்சி - இடிக்கு முன்னதாகத் தோன்றும் மின்னலைக் கண்டு பயப்பட்டு. செரு மிகுதோள் - மற்போரினால் திடங் கொண்ட திரண்ட தோளையுடைய. மாறன் - பாண்டியன். சினவேல் - அச்சுறுத்துவது போல் ஒளிரும் வேல். கனவுமே - கனவில் கண்டு கண்டு அஞ்சுவர். அங்கண்மா ஞாலத்து அரசு - அழகிய பரந்த நிலத்திலுள்ள மன்னர்கள்.

புற்றினுள் உறங்கும் பாம்பு இடி முழக்கத்தை எண்ணி எண்ணி நடுங்குவது போல் பகைவர்கள் கனவிலும் பாண்டியனது சின வேலைக் கண்டு கண்டு அஞ்சுவார்கள் என்பது குறிப்பு. (21)

(பா - வே.) 2. யந்தலை ; 11. சினவே ; 12. லகவுமேல்.

[23]

# ஒன்றாரும் உவந்தாராதல்

பகைவரின் நாட்டில் தொடர்ந்து போர் நடைபெறுகின்றது. மாறனின் படைகள் மாற்றாரின் மதிலை வளைத்துக்கொண்டு போர் புரிகின்றன. பகைவர்கள் கோட்டை வாயிலை இறுக மூடிக்கொண்டு உள்ளே அடைந்து கிடக்கின்றனர். போர் நிலைக்கு ஏற்பப் பகைவர் கள் தேர், யானை, குதிரைப் படைகளை அணி செய்து நிறுத்தியிருக் கின்றனர். இந்நிலையில் ஒளி நூல் வல்லான்—சோதிடன்—பாண்டி யனின் முன் வந்து வணங்கி, 'மன்னர் பெருமானே, இன்று உத்தி ராடத் திருநாள்' என்று கூறுகின்றான். உத்திராடம் பாண்டியனது பிறந்த நாள். உடனே போர் நிறுத்தக் கட்டளை பிறந்து விடுகின்றது.

பாண்டியனின் படைத்தலைவன் பகைவர்களை நோக்கிக் கூறு கின்றான்: 'பகையோரே, இன்று எம் மன்னர் பிறந்த நாள்; திரு உத்திராடத் திருநாள். ஆகவே, போர் இன்று நடைபெறாது. அஞ்சாது கதவுகளைத் திறமின். யானை, தேர், குதிரை இவற்றின்மீது அமைத் துள்ள இருக்கைப் பண்களையும் களைந்து விடுங்கள்' என்று அறிக்கை விடுகின்றான். திருவிழா மகிழ்ச்சியினால் ஒன்னாரையும் உவந்தாராக்கும் உயர்ந்த பண்பினைப் பாண்டியனிடம் காண்கின்றார் கவிஞர். பாண்டியனின் போர்ப் பண்பு—யுத்த தருமம்—கவிஞ ருக்குப் பேருவகை தருகின்றது. அந்த உவகையில் அழகிய பாடல் ஒன்று உருப்பெறுகின்றது.

இனி, பாடலைக் காண்போம்:

> கண்ணார் கதவந் திறமின் களிறொடுதேர்
> பண்ணார் நடைப்புரவி பண்விடுமின்—நண்ணாதீர்
> தேர்வேந்தன் தென்னன் திருவுத்தி ராடநாட்
> போர்வேந்தன் பூச லிலன்.

(பா - வே.) 4 களிறொடுதார்; 8 நண்ணார்தம்; நண்ணாத.

* இது தொல் - பொருள் - புறத்திணையியல் 36-ஆம் நூற்பாவின்,

இது மாறனின் போர் மாண்பினைப் புகழ்வது.

விளக்கம் : கண்ணார் கதவம் - கோட்டைக்கு வெளியேயுள்ள அகன்ற கதவுகள். களிறு - ஆண் யானை. பண்ணார் நடைப்புரவி - இசைக்கு ஒத்த நடையினையுடைய குதிரை. பண் விடுமின் - அணிசெய்து உலா வரச் செய்யுங்கள். நண்ணாதீர் - பகைவர் காள் (விளி); பாண்டியனுடன் இணங் காது எதிர் நிற்கின்றவர்கள் என்றவாறு. தேர் வேந்தன் தென்னன் - பல தேர்களைக்கொண்ட பாண்டியன். திருவுத்திராடம் - ஒரு விண்மீன்; இதனை யுடைய நாளில் பாண்டியன் பிறந்தான். போர் வேந்தன் - போரினை மேற் கொண்ட அரசன். பூசல் இலன் - போர் செய்யமாட்டான்.

பாண்டியனின் பகைமறக்கும் பண்பினைக் கூறும் இக் கவிதையில் நாம் திளைக்கும்போது கோசல நாட்டுடை வள்ளலின் பெருங்குணமும் அறத்தின் உருவம் போன்ற தருமபுத்திரனின் உயர்குணமும் நமது நினைவுக்கு வருகின்றன. (23)

56-ஆம் பக்கத்தின் தொடர்ச்சி. (23-ஆம் பாடலின் அடிக்குறிப்பு):

‘சிறந்த நாளணி செற்ற நீக்கிப்
பிறந்த நாள்வயிற் பெருமங் கலமும்’

என்பதனுள் செருவொழிந்ததற்கு நச்சினார்க்கினியர் காட்டிய மேற்கோள்.

## [24]

# இனப் பற்று !

பண்டைக்காலத்தில் சங்கினுல் வளையல்களைச் செய்வது வழக்கம். இன்றும் இராமேச்சுவரம், கன்னியாகுமரி போன்ற இடங்களில் இத்தகைய சங்கு வளையல்கள் விற்கப்பெறுவதையும் யாத்திரிகர்கள் அவற்றை ஆர்வத்துடன் வாங்கி அணிந்து கொள்வதையும் நாம் காணலாம். சங்குகளை வட்டம் வட்டமாக அறுத்து, அவற்றின் மீது செதுக்கு வேலைகளையும் செய்துள்ள வளையல்களை மகளிர் ஆர்வத்துடன் அணிந்துகொள்வர். இந்த வளையல்கள் கையில் இளக்கமாகவே இருக்கும்; இறுக்கமாக இரா. இவற்றை மிக்கக் கவனத்துடன் போற்றிப் பாதுகாத்தல்வேண்டும். சற்று மெய்மறந்திருப்பின், அவை கீழே விழுந்து உடைந்துவிடும். இராமேச்சுவரத்திலிருந்து திரும்பும் சில யாத்திரிகர்கள் இத்தகைய வளையல்களை அணிந்து கொண்டுவந்த பழக்கம் இராமையினுல் புகைவண்டிகளிலேயே உடைத்து விடுவதையும் அதனுல் அவர்கள் முகத்தில் ‘ அசடு ’ தட்டுவதையும் நாம் காணலாம்.

வைகைக்கு நீராடச் சென்ற நங்கையொருத்தி வைகைக் கரையில் வழுதியைக் காண நேரிடுகின்றது. அவன்மீது காதல் கொள்ளுகின்றுள். பாண்டியனே அவளைப் பார்க்கவும் இல்லை; அவளை விரும்பவும் இல்லை. ஆனுல், இவள் அவன் தன்னை விரும்பினதாக நினைத்துக்கொண்டு காதலால் வாடுகின்றுள். தோள்கள் மெலிகின்றன. அவள் கையில் அணிந்திருந்த சங்கு வளையல்கள் கழன்று கீழே விழுந்து உடையத்தக்க நிலையிலுள்ளன. இந்த நிலையில் அவள் வீட்டிலிருக்கின்றுள்.

பாண்டியன் உலாப் புறப்படுகின்றுன். அவனது வருகையைச் சங்கொலி அறிவிக்கின்றது. அந்த வலம்புரிச்சங்க முழக்கம் காதில் பட்டவுடன் நங்கைக்கு உடல் சிலிர்க்கின்றது. உடலும் உள்ளமும் பூரிக்கின்றன. பாண்டியனே தன்னருகில் வந்து விட்டதாகக் களிப்படைகின்றுள். கைகள் உப்புவதால் கழன்ற நிலையிலிருந்த வளையல்களும் கழலாமல் தடைப்பட்டு நின்று விடுகின்றன. இவ்வாறு கழலாத நிலை எங்ஙனம் தன்னிடம் ஏற்பட்டது என்று சிந்திக்கின்றுள் நங்கை.

'செய்யார் எனினும் தமர் செய்வர்' என்ற பழமொழி அவள் நினைவிற்கு வருகின்றது. "தெரிந்து கொண்டேன்; இந்த வளையல்கள் கீழே விழுந்து உடையுமென்றுதான் பாண்டியனின் வலம்புரி ஒலித்திருக்கின்றது. அந்த ஒலியைக் கேட்டுத்தானே இவைகளும் நின்றன. இந்த வளையல்களுக்கு அந்த வலம்புரி உறவு அல்லவா? இன உறவு எப்பொழுதாவது உதவுமல்லவா?" என்று அவள் தன் தோழியிடம் வாய் விட்டுப் பேசுகின்றாள்.

இந்த நங்கையின் உணர்ச்சியையும் மனநிலையையும் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது:

**செய்யா ரெனினுந் தமர்செய்வ ரென்னுஞ் சொல்**
**மெய்யாதல் கண்டேன் விளங்கிழாய்—கையார்**
**வரிவளை நின்றன வையையார் கோமான்**
**புரிவளை போந்தியம்பக் கேட்டு.**

இது கைக்கிளை. இதனைத் தொடர்ந்து வரும் பாண்டியனைப் பற்றிய பாடல்கள் யாவும் இப்பொருளுடையனவே.

விளக்கம்: 'செய்யார் எனினும் தமர் செய்வர்' என்ற பழமொழியை பழமொழி நானூற்றிலும்* காணலாம். தமர் - உறவினர். மெய்யாதல் கண்டேன் - பழமொழியின் உண்மையை இப்பொழுது அறிந்து கொண்டேன். விளங்கு இழாய் - ஒளிபொருந்திய அணிகளை அணிந்த தோழியே. கையார் வரி வளை-கையிலுள்ள செதுக்கு வேலைப்பாடுடைய கீற்று வளைகள். நின்றன - (நெகிழ்ந்து விழாது) நின்றன. வையையார் கோமான் - பாண்டியன். புரிவளை போந்து இயம்பக் கேட்டு - திருகிய சங்கின் ஒலி வந்த காரணமாக.

புரிவளை வரிவளைக்குத் துணை செய்தது என்ற நயத்தை எண்ணி மகிழ்க. சங்கு வளையல்கட்கு எச்சரிக்கை செய்வதாக அமைந்த பாவம் நம் இதயத்தைத் தொடுகின்றது. (23)

(பா - வே.) 11. வையத்தார்.

* மெய்யா உணரிற் பிறர் பிறர்க்குச் செய்வதெவன்
மையார் இருங்கூந்தல் பைந்தொடி! எக்காலும்
செய்யார் எனினும் தமர்செய்வர் பெய்யுமாம்
பெய்யா தெனினும் மழை.

என்ற பாடலில் இதனைக் காண்க.

# தச்சனை வாழ்த்தும் தையல்

அந்தக் காலத்தில் கதவுகளுக்கு மரக்கட்டையினுல்தான தாள அமைப்பது வழக்கம். அந்தத் தாளின்கீழ் ஒரு பெரிய வட்டமான துளை இருக்கும். அந்தத் துளை வழியாகத்தான் ஒருவளைந்த இரும்பை விட்டு மரத்தாளைத் தள்ளித் திறப்பர். இத்தகைய அமைப்பினை இன்றும் சிற்றூர்களிலுள்ள பழைய வீடுகளில் காணலாம்.

செவிலித்தாய் ஒருத்தி பருவம்நிரம்பின தன் மகள் பாண்டியனின் எழில் நலத்தைக் காணின், அவள் நைந்துருகி நலன் அழிவள் என்று கருதுகின்ருள். ஒரு நாள் பாண்டியன் உலா வரும் செய்தி அவள் காதுக்கு எட்டுகின்றது. உடனே ஓடோடி வந்து தன் மகளை உள்ளே இருக்கச் செய்து கதவுகளை அடைத்துத் தாளிட்டு வெளியே சென்று விடுகின்ருள். என்ன செய்வாள் அந்தப் பெண்? இனி எப்படி அவள் வழுதியைக் காணமுடியும் ? நமக்கே அவள்மீது இரக்கம் பிறக்கின்ற தல்லவா ?

தாளிட்ட கதவை உற்று நோக்குகின்ருள் நங்கை. ஒரு பெரிய துளை அதில் தெரிகின்றது. அவள் எல்லையற்ற இன்பத்தில் திளைக் கின்ருள். சிறிது நேரத்திற்குள் தென்னவனும் அவளது வீட்டிற்கு நேராக வந்து விடுகின்ருன். கதவின் துளை வழியாகக் காவலனின் எழில் நலத்தைக் கண்டுகளிக்கின்ருள் காரிகை. தனக்காகத்தான் தாளினை அமைத்த தச்சன் துளையையும் வைத்துப் போயினன்போலும் என்று அவனை வாழ்த்துகின்ருள் அத்தையல். காலத்தினுற் செய்த இந் நன்றிக்குத் தான் என்ன கைம்மாறு செய்யமுடியும் ? ஞாலமுழு வதும் கொடுத்தாலும் இவ்வுதவிக்குச் சாலாதே என்று எண்ணு கின்ருள் அந்த நங்கை.

து நேரத்திற்கெல்லாம் அவளது தோழி கதவைத் தட்டு நங்கை உள்ளிருந்து கொண்டு தன் அன்னை செய்த ித் துளையின் வழியாகத் தன்னுடன் பேசுமாறு ாழியும் துளையின் வழியாக நங்கையைக் கண்டு

"தோழி, சிறைக்குள் அடைப்பட்ட மான்போ லானேன். ஆயின், இக்கதவினைச் செய்த தச்சன் எனக்கு ஒரு வழியமைத்துத் தந்துள் ளான். இதன்மூலம் உன்னைக் காணமுடிகின்றது. சற்று நேரத் திற்குமுன்னர் காவலனையும் இதன் மூலம்தான் கண்டு மகிழ்ந்தேன்" என்கின்றாள் நங்கை.

இந் நிகழ்ச்சியினைக் காட்டும் கவிஞரின் பாடல் இது:

**காப்படங்கென் றன்னை கடிமனை யிற்செறித்**
**தியாப்படங்க வோடி யடைத்தபின்—மாக்கடுங்கோன்**
**நன்னலங் காணக் கதவந் துளைதொட்டார்க்**
**கென்னைகொல் கைம்மா றினி.**

இது கைக்கிளை; தலைவி தோழியிடம் கூறுவது.

விளக்கம்: காப்பு அடங்கு – எம் காவலுக்கு அடங்கு; இது வெளியே செல்லக்கூடாது என்று அன்னை தன் மகளுக்குப் பிறப்பிக்கும் கட்டளை. கடி மனை - பாதுகாப்பான வீடு. இற்செறித்து - வீட்டிற்குள் இருத்தி. இற்செறித் தல் என்பது, அகப்பொருளில் ஒரு துறை; வயது வந்த தன் மகளை அன்னை 'இங்குப் போகக்கூடாது, அங்குச் செல்லக்கூடாது' என்று 'கெடு பிடி' செய்யும் நிலையை அகப்பொருள் இலக்கணம் 'இற்செறிப்பு' என்று குறிப்பிடும்.

யாப்பு அடங்க - (கதவுகளின் விளிம்பு) இசைப்புப் பொருந்த. ஓடி அடைத்தபின் - அவசர அவசரமாக ஓடி அடைத்தபின்னர். மாக்கடுங் கோன் - பாண்டியன்; இது பாண்டியனுக்குரிய பெயர்களுள் ஒன்று. நன் னலம் - சிறந்த அழகு. துளை தொட்டார் - துளையை அமைத்தவர்.

கதவிலுள்ள துளை கதவுகளைத் திறப்பதற்கும் மூடுவதற்கும் வாய்ப்பாக அமைக்கப்பெற்றது. ஆனால், நங்கை தன் பொருட்டே தச்சன் அத்துளையை அமைத்ததாக எண்ணுகின்றாள். 'தாய் அடைப்பாள், மகள் பார்ப்பதற்கு வழி வேண்டுமே' என்று தச்சன் முன்யோசனையுடன் துளையை அமைத்ததாக மயக்கம். 'என்னை கொல் கைம்மாறினி?' என்பதில் நங்கையின் எக்களிப்பு பாய்ந்துகொண்டு வருகின்றது. கவிதை அனுபவம் நிறைந்த பாடல் இது. (24)

(பா - வே.) 2 றென்னை.

# இரக்கம் வேண்டும்!

சிறுவர்களின் விளையாட்டில் தோன்றும் ஒருவிதக் கற்பனையைப் பாவனை (Make-believe) என்று வழங்குவர் உளவியலார். சிறுவர்களது விளையாட்டில் நாற்காலி கப்பலாகும்; செங்கற் பொடி வெடி மருந்தாகும்; ஊசற் பலகை புகை வண்டியாகும்; கோல் தானியங்கி ஆகும். அவர்களது விளையாட்டில் விலங்குகளும் பேசும். அவர்கள் மரம்பாச்சியை வைத்துக்கொண்டு அதனிடம் அதிக நேரம் இல்லாததும் பொல்லாததுமான பேச்சினைப் பேசிக்கொண்டிருப்பதை நாம் பார்த்திருக்கின்றோம். இத்தகைய பாவனை - ஆற்றல் பருவமடைந்த மகளிரிடத்தும் இருத்தல் உண்மை. இத்துடன் காதல் வெறியோ பக்தி வெறியோ கலந்து விட்டால் பேச்சின் வேகத்தைப்பற்றி நாம் எடுத்தியம்பவேண்டியதில்லை. பக்தி வெறியில் திளைத்த ஆண்டாளின் பாக்களில் இத்தகைய பாவனை நிரம்பிய பாக்கள் பலவற்றைக் காண்கின்றோ மல்லவா?

ஒரு நாள் மாறன் உலா வருகின்றான். மதம் நிறைந்த களிற்றியானையின்மீது வருதலினும் பிடியின்மீது வருதல் நன்றென்று கருதி அதன்மீது ஏறி வருகின்றான். வழுதியின் உலாவினைக்காணும் நங்கையொருத்தி அவன்மீது ஆராக்காதல் கொண்டுவிடுகின்றாள். யானையின் அழகிய நடையும், அதன்மீது இவர்ந்து வந்த அரசனது கம்பீரமான தோற்றமும் அவளது மனத்தை விட்டு அகலவில்லை. அரசனது உருவம் அவளது உள்ளத்தில் இடம் பெற்றது வியப்பு அன்று; அவன் ஏறிவந்த யானையின் உறுப்புக்கள் ஒவ்வொன்றும் அப்படி அப்படியே அவளது மனத்தில் நிற்கின்றன; அவற்றில் தன் உள்ளத்தைப் பறிகொடுத்து விடுகின்றாள். "யானையின் கால் உடுக்கையைப் போலல்லவா இருக்கின்றது! செவியோ தோலினுற் செய்த கேடயம்போல் இருக்கின்றது. துதிக்கை கண்ணையும் கருத்தையும் ஈர்க்கும் முறையில் எப்படி யெல்லாமோ ஆடுகின்றது. வாய் தொங்குகின்ற அழகோ தனிச் சிறப்புடையது!" என்றெல்லாம் யானையைக் கண்டு அனுபவிக்கின்றாள்.

மறுநாள் இந்த நங்கை நீராடப்போயிருந்த இடத்திற்கு அந்த யானை வந்திருந்தது. அரசனும் நீராட வந்திருந்தான். அப்போது அந்த யானையை நோக்கி ஏதோ கூற எண்ணுகின்றாள். சற்றுத் தடுமாற்றத்தில் வாய்பேசாது வாளா நிற்கின்றாள்; பிறகு சொல்லியே விடுகின்றாள். "யானையே, நறுமணம் கமழும் மாலையை அணிந்து கொண்டு சந்தனம் பூசிய மன்னனைத் தாங்கி எம் வீதிப்பக்கம் வருவாயல்லவா? அப்போது எம் வீட்டுச் சாளரத்தை ஒட்டி நடந்து செல்வாயாக. அப்போதுதான் அவன் என்னைப் பார்ப்பான்; நான் மகிழ்வேன். நீ என்னை யொத்த பெண்பால் ஆயிற்றே என்றுதான் இதை உன்னிடம் சொல்லுகின்றேன். என்மீது இரக்கம் காட்டுவாயாக!" என்று கூறுகின்றாள் அவள். தான் சொல்லுவது யானைக்குப்புரியுமா என்றும், புரிந்துகொண்டு அது தன் விருப்பத்தினை நிறைவேற்றுமா என்றும் அவள் நினைத்துப்பார்க்கவில்லை. காதல் வெறி அவளது நினைவை மறைத்து விடுகின்றது. அரசனைத் தன் கண்குளிரப் பார்த்து விடவேண்டும் என்ற துடிப்பு அப்படி இருக்கின்றது அவளுக்கு.

மேற்குறிப்பிட்ட மகளின் மன நிலையைக் கவிஞர் காட்டும் சொற்படம் இது:

> **துடியடித் தோற்செவித் தூங்குகைந் நால்வாய்ப்**
> **பிடியேயா னின்னை யிரப்பல்—கடிகமழ்தார்ச்**
> **சேலேக வண்ணனொடு சேரி புகுதலுமெஞ்**
> **சாலேகஞ் சார நட.**

இது கைக்கிளை; தலைவி பிடியை நோக்கிப் பேசுவது.

விளக்கம்: துடி - உடுக்கை. தோல் - கேடகம். தூங்குகை - தொங்கும் தும்பிக்கை. நால்வாய் - தொங்கும் வாய். நாலுதல் - தொங்குதல். பிடி - பெண்யானை. இரப்பல் - வேண்டுகின்றேன்; கெஞ்சிக்கேட்டுக்கொள்ளுகின்றேன் என்றவாறு. கடிகமழ்தார் - மணம் கமழும் மாலை. சேலேக வண்

(பா - வே.) 7. யிரப்பன்; 12. புகுதலுமே.

ணன் - செந்தூரம் போன்ற நிறத்தையுடையவன்; செங்நிறத்தன் என்றவாறு. சேலேகம் - செந்துரம்; சந்தனம் எனினும் அமையும். சேரி புகுதலும் - ஊருக்குள் நுழையவும்; அதாவது மன்னன் ஙீராடி உன்மீது ஏறி ஊருக்குள் நுழையும்போது. எம் சாலேகம் சார நட - எங்கள் வீட்டுச் சாளரத்தை யொட்டி நடந்துவரவேண்டும். சாலேகம்-சாளரம்; பலகணி. வடமொழியில் ஜாலகம் என்ற சொல் பல கணித்துளையைக் குறிக்கும். அச்சொல் இங்கு சாலேகம் எனத் திரிந்து வந்து சாளரம் எனப் பொருள் பட்டது.

நங்கையின் உள்ளக் கிழியில் அமைந்த ஓவியத்தை அப்படியே காட்டுகின்றது இப்பாடல்.

> செய்ய சடைமுடியென் செல்வனையான் கண்டெனது
> கையறவும் உண்மெலிவும் யான்காட்டப்—பையவே
> காரேறு பூஞ்சோலைக் காளத்தி யாள்வார்தம்
> போரேறே இத்தெருவே போது.*

என்ற நக்கீரதேவ நாயனாரின் பாடலையுங் காண்க. இரண்டையும் ஒப்பிட்டு மகிழ்க. (25)

* கைலைபாதி - காளத்தி பாதி அந்தாதி- செய்-78.

[27]

# பெண்ணுக்கு இது தகுமா?

பண்டைக்காலத்தில் அரசர்கள் போருக்கு ஆண்யானையையும் இவர்ந்து செல்வதற்குப் பெண்யானையையும் வைத்துக்கொள்வது வழக்கம். ஒரு சமயம் பாண்டியன் பெண்யானைமீது உலாவந்து கொண்டிருக்கின்றான். அதனை நங்கை யொருத்தி காண்கின்றாள்; அரசன்மீது காதல்கொள்ளுகின்றாள். அவனைக் கண்குளிரக் கண்டு அனுபவிக்கவேண்டும் என்று நினைக்கும் அவளுக்கு வாய்ப்பு கிட்ட வில்லை. யானை வேகமாக நடந்து சென்று விடுகின்றது. யானையின் மீது அவளுக்குக் கோபம். அதனைப் பார்த்து இவ்வாறு பேசுகின்றாள்:

" இளமை வாய்ந்த பெண் யானையே, நீ என் தோழியல்லவா? யான் நின்பால் நடைகற்றுக்கொண்டபொழுது மெதுவாய் நடந் தாயே! இப்பொழுது மதுரை மன்னன் பாண்டியன் நின்மீது இவர்ந்து உலாப்போகின்றான். நானும் பார்த்துக்கொண்டுதான் இருக்கின் றேன். 'இது உலாவாயிற்றே! பைய ஊர்ந்தல்லவா செல்லவேண்டும்' என்று உனக்கு ஏன் தெரியாமற்போயிற்று? இங்ஙனம் முறைதவறி நின் இயல்பிற்கு மாறுபட்டு நடப்பதைக் கவனித்தால் உன் பெண் தன்மை குறித்து ஐயப்படவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கின்றது. இது உனக்குத் தகுமோ?'' என்கின்றாள்.

பெண்ணின் மனநிலையைக் கவிஞர் இந்தச் சொல்லோவியத் தால் வெளிப்படுத்துகின்றார்:

> எலாஅ மடப்பிடியே யெங்கூடற் கோமான்
> புலாஅ னெடுநல்வேல் மாறன்—உலாஅங்காற்
> பைய நடக்கவுந் தேற்றாயால் நின்பெண்மை
> ஐயப் படுவ துடைத்து.*

இது கைக்கிளை; இதுவும் பிடியுடன் பேசுவதே.

* இப்பாடலை 70-ஆம் பாடலுடன் ஒப்பிடுக.

விளக்கம் : எலா அ - தோழி; இது தோழியை விளிக்கும் முன்னிலைப் பெயர். மடப்பிடியே - இளம் பெண்யானையே. கூடற்கோமான் - மதுரைக்கு மன்னன். புலால் நெடு நல் வேல் மாறன் - மாமிசம் தோய்ந்த நீண்ட நல்ல வேலை ஏந்திய பாண்டியன். உலாங்கால் - உலாவ வரும் பொழுது. பைய - மெல்ல; மெதுவாக. தேற்ருயால் - தெளியாமல் இருக்கின்ருய்; ஆல் - அசை. பெண்ணுகப் பிறந்தவள் மெல்ல நடக்க வேண்டும் என்பதைக்கூடத் தெரிந்து கொள்ளாமல் இருக்கின்ருயே என்றவாறு. பெண்மை - பெண்தன்மை. ஐயப்படுவதுடைத்து - சந்தேகிக்கும் தன்மையுடையது. யானை மெல்ல நடந்து சென்ருல்தான், மாறனது அழகைக் கண் குளிரக் காணலாமே என்பது நங்கையின் நோக்கம்.

பாட்டினுள்ள எலா அ, புலா அல், உலா அங்கால் என்ற மூன்று அளபெடைகளும் பெண் யானை மெல்லப்போகவேண்டு மென்ற நங்கையின் விருப்பத்தைத் தொனிக்கச் செய்கின்றன. இது தொனிப்பொருள் நிறைந்த அரிய பாடல். (26)

[28]

# அவா நிறைந்த அணங்கு

பாண்டியன் குதிரைமீதாயினும் யானைமீதாயினும் ஏறிக் கொண்டு உலாப்போதல் வழக்கம். அங்ஙனம் போகுங்கால் அவனைக் காணும் எல்லோரும் வணக்கம் செலுத்துவர். மகளிர் நாணத்துடன் வாயிற் கதவைச் சிறிது மூடிய வண்ணம் வைத்து அதன் மறைவி லிருந்துகொண்டு அவனைத் தொழுவர்.

ஒரு சமயம் பாண்டியன் குதிரைமீது உலாப்போகுங்கால் அவ னைப் பார்க்கும் நங்கையொருத்திக்கு அவன்மீது அளவுக்குமீறிய காதல் ஏற்பட்டுவிடுகின்றது. அவன் ஏறிச்செல்லும் குதிரையோ அழகுமிக்கது; போர்த்தொழிலிலும் அது நன்கு பழகியிருந்தது. அந்தக் குதிரை உலாவில் மிக வேகமாகப் பாய்ந்து வருகின்றது. அவா நிறைந்த அந்த அணங்கு குதிரையுடன் பேசுகின்றாள்:

"பாய்ந்து செல்லும் பரியே, போர்க்களத்தில்தான் உனக்கு இத்தகைய வேகம் தேவை. அங்கு இங்ஙனம் ஓடுவது சரியே. ஊருக் குள்ளுமா இங்ஙனம் ஓடவேண்டும்? இங்குத்தான் பகைவர்கள் இல்லையே. மெதுவாக நட. கதவருகே நின்று நோக்கும் யாம் மாறனது மார்பினைக் கண்டு வணங்கவேண்டும்" என்று இயம்பு கின்றாள்.

இந்த நிலையைக் கவிஞரின் சொற்படம் காட்டுகின்றது:

> **போரகத்துப் பாயுமா பாயா துபாயமா**
> **ஊரகத்து மெல்ல நடவாயோ—கூர்வேல்**
> **மதிவெங் களியானை மாறன்றன் மார்பங்**
> **கதவங்கொண் டியாமுந் தொழ.**

இது **கைக்கிளை**; மகள் மாவை நோக்கிப் பேசுவது.

(பா - வே) 3-4 பாயாது பாயுமா.

*விளக்கம் :* மா - குதிரை. 'பாயுமாறு பாயாது' என்பது பாயுமா பாயாது' என்று திரிந்தது. உபாயமா - மெதுவாக. குதிரை என்று தோன்று எழுவாய் இங்கு வருவிக்கப்பட்டது. பாயுமா - பாயும் குதிரை எனப் பொருளுரைத்தது அண்மை விளியாகவும் கொள்ளலாம். இப்பொழுது 'பாயுமா, போரகத்துப்போல பாயாது உபாயமா நடவாயோ?' என்று பொருள்கொள்ளல் வேண்டும். மதிவெங்களியானை - அறிவுடைய கொடிய மதயானை. மதி - அறிவு. வெம்மையாவது, திரிதல்; அறிவு திரிந்த மத யானை என்றவாறு. மாறன்றன் மார்பம் - பாண்டியனது மார்பை. கதவங் கொண்டு யாமும் தொழ - கதவின் இடுக்கில் நின்றுகொண்டு யான் தொழும் படி. யாம் - நான்; ஒருமை பன்மை மயக்கம்.

இந்தக் கவிதை, பெண்ணின் கூற்று என்பது வெளிப்படையாகத் தெரியவில்லை. பெண் கதவருகில் மறைந்து நிற்பதுபோல் இதுவும் மறைந்து நிற்கின்றது! இப்படிச் செய்தியை மறைவில் வைத்துச் சொல்லுவதில் ஒரு நாண பாவம் உண்டாகின்றது. 'கதவங் கொண்டு யாமும் தொழ' என்ற இறுதியடியைக் குரல் குறைத்துப் பாடும்போது இந்த நாண பாவம் வெளிப்படுவதை அறியலாம். எண்ணத்தின் இந்தப் பிரதிபிம்பத்தைக் கவிதையில் நாம் காணுங்கால் கவிதையனுபவத்தின் கொடுமுடி நமக்குத் தட்டுப்படுகின்றது. (27)

# காதல்வெறிப் பேச்சு

கள்வெறியை விடக் காதல்வெறி உறைப்புடையது; ஆற்ற லுடையது. கட்குடியர்கள் கள்ளை நினைந்து பார்த்தோ அல்லது அதனை நேரில் கண்ணால் கண்டோ மகிழ்ச்சி அடைவதில்லை; அதனை உண்டால்தான் அவர்கட்கு மகிழ்ச்சி ஏற்படும். காதலுக்கு உரிய வரை நினைத்தாலும், அவரைக்கண்டாலும் அவர்மீது காதல் கொண்ட வர்கட்கு எல்லையற்ற மகிழ்ச்சி யுண்டாகின்றது. காதல் உணர்ச்சி முற்றி வெறிநிலை எய்திவிட்டால் அதன் விளைவு தனிச்சிறப் புடையது.

மாவூர்ந்து வருகின்றான் மாறன்; உலாப் போகின்றான். அவன் இவர்ந்து வந்த புரவி வேகமான நடையினை உடையது. அவன்பால் காதல் கொண்ட நங்கையர் அவனைக் காண்கின்றனர். அவர்கள் அவனது அழகில் ஈடுபட்டு மெய்மறந்து நிற்கின்றனர். இதற்குள் புரவலன் ஏறிவந்த புரவி விரைந்து அடுத்த தெருவிற்குச் சென்று விடுகின்றது. தெருப்புழுதி முகத்தில் அள்ளித் தெளிக்கும் வேகத்தில் புரவிபோகின்றது.

கதவருகில் நின்றிருந்த காரிகையொருத்தி பாண்டியன் அணிந் திருந்த பூமாலை, இவர்ந்து வந்த குதிரை முதலியவற்றை யெல்லாம் நினைக்குந்தோறும் அப் பொருள்கள் அவளது காதலை மிகவும் வளர்க் கின்றன; எரிகின்ற நெருப்பில் எண்ணெய் ஊற்றியதுபோலாகின் றது. காதல் வெறியால் அவளுக்கு என்ன செய்வது என்றே தோன்ற வில்லை. ஓடிச்சென்று புரவியைக் கட்டித் தழுவிக்கொள்ளலாமென் றால், குதிரை எளிதில் கைக்குக் கிடைக்கக்கூடிய பொருளா? அப்ப டிக் கிடைத்தாலும், தன்னுடைய காதல் நிலை பிறருக்குப் புலப்பட்டு விடுமே. இந்த நிலையில் அவள் தெருவினை நோக்குகின்றாள். வழுதி யின் புரவி கால்களால் துழாவிய புழுதியைக் காண்கின்றாள். நெஞ்சை நோக்கி இவ்வாறு பேசுகின்றாள்:

"நெஞ்சமே, மடுவில் விழுந்து நீராடுவதைப்போல், வீதியில் கிடக்கும் புழுதியில் விழுந்து புரண்டு புழுதியாடட்டுமா? அல்லது அப்புழுதியை எடுத்து வந்து ஆண்டவனின் 'பிரசாதம்' போல் — திருநீறுபோல் — தலையில் தூவிக்கொள்ளட்டுமா? அல்லது நறுமணமுள்ள நீரில் குழைத்துப் பூ இதழை எழுதுகோலாக்கிக் கொண்டு மார்பிலும் தோளிலும் தொய்யில் எழுதிக்கொள்ளட்டுமா? எதனைச் செய்தால் என் நோய் தீரும்?" என்கின்றாள்.

நங்கையின் மன நிலையை விளக்கும் கவிஞரின் சொல்லோவியம் இது:

ஆடுகோ சூடுகோ வைதாக் கலந்துகொண்
டேடுகோ டாக வெழுதுகோ — நீடு
புனவட்டப் பூந்தெரியற் பொற்றேர் வழுதி
கனவட்டங் கால்குடைந்த நீறு.

இது கைக்கிளை; நெஞ்சொடு கூறல்.

விளக்கம்: ஆடுகோ - மூழ்குவேனோ; கீழே விழுந்து புரளுவேனோ என்றவாறு. சூடுகோ - சூடிக்கொள்வேனோ; திருநீறுபோல் தலையின்மீது தூவிக்கொள்வேனோ என்றவாறு. ஐதா - அழகியதாக. கலந்துகொண்டு - புழுதியை நன்றாகக் குழைத்துக் கொண்டு. ஏடு - பூவிதழ்; இதழையுடைய அரும்பு என்றும் கூறலாம். கோடாக - எழுதுகொம்பாக. எழுதுகோ - அழகாக மார்பிலும் தோளிலும் தொய்யில் எழுதிக்கொள்ளட்டுமா. தொய்யில் என்பது, மகளிர் தம் மார்பிலும் தோளிலும் எழுதிக்கொள்ளும் வரிக் கோலங்கள். நீடு - நீண்ட; பெரிய. புனவட்டப் பூந்தெரியல் - பூந்தோட்டத்திலிருந்து அப்பொழுதுதான் பறித்து வட்டமாகக் கட்டிய மாலை. தெரியல் - மாலை. வழுதி - பாண்டியன். கனவட்டம் - பாண்டியனுடைய குதிரையின் பெயர். கால்குடைந்த நீறு - குளம்புபட்ட தெருவிலுள்ள புழுதி.

இந்தக் கவிதையில் அரிய உணர்ச்சியும் பாவமும் நெளிவது புலப்படும். பாட்டினைப் பாடிப்பாடி இவற்றைக் காண்க. ஆண்டவனிடத்திற் காட்டிலும் அடியார்களிடத்தில் ஈடுபாடுள்ள பட்டினத்

தார், * வாதவூரர், நம்மாழ்வார் ‡ போன்றவர்கள் பக்தி வெறி மீறிற் யுள்ள பொழுது திருவாய் மலர்ந்தருளிய பாடல்களில் இத்தகைய உணர்ச்சியைக் காணலாம். (28)

---

* ஓடுவிழுந்து சீப்பாயும் ஒன்பதுவாய்ப் புண்ணுக்(கு)
இடுமருந்து யானறிந்து கொண்டேன்—கடுஅருந்தும்
தேவாதி தேவன் திருவொற்றி யூர்த்தெருவில்
போவார் அடியிற் பொடி.

[ஓடு - துவாரம்; கடு - விடம்.]

என்ற பட்டினத்தாரின் இறையனுபவப் பாடலைப் பாடி அனுபவித்து மகிழ்க.

‡ 'இவளைப் பெறும்பரி சிவ்வணங் காடுதல் அன்று; அந்தோ
குவளைத் தடங்கண்ணும் கோவைச்செவ் வாயும் பயந்தனள்
கவளக் கடாக்களி றட்டபிரான் திருநா மத்தால்
தவளப் பொடிக்கொண்டு நீரிட் டிடுமின் தணியுமே.'

என்ற திருவாய்மொழியினையும் (4 : 6 - 5) ஈண்டு ஒப்பிட்டு நோக்குக.

# கொம்பனூர் காமம்

மலையருகிலுள்ள ஊர்களில் வாழ்கின்றவர்கள் மாலை நேரங்களில் அடிக்கடி மலையின்மீது நெருப்புப் படலங்களைக் காண்பர்; நெருப்புப்படலத்தில் பல இடங்களில் காடுகள் சுவாலையுடன் கொழுந்துவிட்டு எரிவதும் அவர்கள் கண்ணுக்குப் புலனாகும். இந் நிலையைக் காணும் ஊர் மக்கள் நெருப்பைப்பற்றிப் பேசத்தொடங்கி விடுவர். 'பகலில் அமைதியாக நீல நிறத்துடன் கண்ணுக்குக் குளிர்ச்சியை நல்கின மலை, மாலை நேரத்தில் புதிய தொரு நிலையைப் பெற்றிருக்கின்றது!' என்று தம் வியப்பையும் புலப்படுத்துவர்.

மேற்கூறிய காட்சியுடன் இன்னொரு செய்தியையும் நாம் நினைவு கொள்ளவேண்டும். தற்காலத்தில் நாம் இரவு நேரங்களில் வெளியே போக நேர்ந்தால் மின்சார 'டார்ச்சு' விளக்கினையோ (Torch light) அல்லது மண்ணெண்ணெய் விளக்கினையோ (Hurricane lamp) எடுத்துக்கொண்டு செல்லுகின்றோம். இந்தவசதி இல்லாத பண்டைக் காலத்தில் அகல் விளக்கினைத்தான் பயன் படுத்தி வந்தனர். காற் றடிக்கின்ற காலத்தில் வெளியே போக நேர்ந்தால் காரிகையார் அதனைக் குடத்தினுள் வைத்து மிகத்திறமையாகக்கொண்டு செல்வர். அவர்கட்கு மட்டிலும் ஒளி தெரியுமேயன்றி பிறருக்கு ஒளி இருப் பதே தெரியாது. வெளியே ஒளி தெரியாவிட்டால், குடத்தினுள்ளே ஒளி இல்லை யென்று சொல்லமுடியாதல்லவா?

பருவமங்கையர் பாண்டியன்மீது வைத்துள்ள காதல் புறத்தார்க் குப்புலனாகாது. அக்காதல் அம்மகளிர் இதயத்தில் மட்டிலும் குடத்து விளக்குபோல் மறைந்தே இருக்கும். ஆனால், மாலையில் மாறன் தெரு வழியாக உலா வருகின்றபொழுது அஃது அந்திக் காலத்தில் மலை யில்மீது தோன்றும் நெருப்பைப்போலப் பலர் அறிய வெளிப்பட்டு விடும்; அஃதாவது ஊரார் எல்லோரும் அறிவதற்கு வாய்ப்பினைத் தந்துவிடும்; மக்கள் அதைப்பற்றிப் பேசுவதற்கு இடமும் ஏற்பட்டு விடும்.

இந்த நிலையை அணியிழையாரின் இயல்பை அறிந்தோர் கூறுவதுபோல் கவிஞர் அமைத்த சொல்லோவியம் இது :

குடத்து விளக்கேபோற் கொம்பன்னுர் காமம்
புறப்படா பூந்தார் வழுதி—புறப்படின்
ஆபுகு மாலை யணிமலையிற் றீயேபோல்
நாடறி கௌவை தரும்.

இது கைக்கிளை ; பொது மக்கள் கூற்று.

*விளக்கம்* : கொம்பு அன்னுர் - பூங்கொம்பு போன்ற இடையினையுடைய மகளிர். புறப்படா - வெளிப்படையாகத் தெரியாது. பூந்தார் வழுதி - பூமாலை சூடிய பாண்டியன். புறப்படில் - உலா வருவதற்காகப் புறப்பட்டுவிட்டால். ஆபுகு மாலை - பசுக்கள் மேய்புலங்களிலிருந்து ஊருக்குள் புகும் மாலைக் காலம். அணி மலை - அழகிய மலை ; அருகிலுள்ள மலை என்றும் கூறலாம். தீ - நெருப்பு. நாடறி கௌவை தரும் - நாட்டார் எல்லாரும் அம்மகளிரின் காதல் நோயை அறிந்து அலர் தூற்றலுக்கு ஏதுவாகிவிடும். கௌவை - அலரின் முதிர்ச்சியாகிய ஆரவாரம் ; பழிச்சொல். 'ஊரவர் கௌவை எருவாக' (குறள் - 1147) என்பது திருக்குறள்.

'ஊரவர் கவ்வை எருவிட்டு அன்னைசொல் நீர்படுத்து
ஈரநெல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள்'...

என்ற திருவாய்மொழிப் பகுதியும் (5 : 3 - 4) ஈண்டு உளங்கொள்ள

அடக்கிவைத்துள்ள மகளிரின் காதல்விருப்பத்திற்குக் கு விளக்கும், பாண்டியனைக் காணுங்கால் அது வெளிப்படுதற்கு மலைத் தீயும் முறையே உவமைகளாக வந்தன. காலையரு பகலெலாம் போதாகி மாலை அலரும் இயல்புடைய காமத்தை விளக்கும் இந்த இரண்டு உவமைகளும் பாட்டிற்குப் பொலிவைத் தருகின்றன. (29)

[31]

# வேலியே பயிரைத் தின்ருல்?

அக்காலத்தில் நெல்லை மாவட்டத்திலுள்ள கொற்கை என்ற ஊர் பாண்டியன் ஆட்சியிலிருந்தது. அந்த ஊரிலுள்ள அனைவரும் மிகவும் நல்லவர்கள்; அரசனுக்கு அடங்கி நடப்பவர்கள். பாண்டியன் அங்குத் தங்கியிருக்கும் காலத்திலும் வழக்கம்போல் மாலையில் உலா வருதல் வழக்கம்.

ஒரு நாள் பாண்டியன் உலா வருங்கால் எல்லோரும் மன்னனைக் கண்டு வணங்கி மரியாதை செலுத்துகின்றனர். பருவம் வந்த நங்கை யொருத்தியும் அவனைக் கண்டு தொழுகின்ருள்; அவன்மீது மையலும் கொண்டுவிடுகின்ருள். அந்த நாள்முதல் அவள் யாரிடமும் பேசுவதில்லை; சரியாக உண்ணுவதும் இல்லை; நன்ருக உறங்குவது மில்லை. இதனைக் கண்ணுற்ற தோழி அவளைத் தனிமையாக நெருங்கி அவளது நிலைக்குரிய காரணங்களை வினவுகின்ருள். தலைவி இவ்வாறு பதிலிறுக்கின்ருள்:

"பாண்டியன் உலா வந்தான். எல்லோரும் வணங்கினர்; யானும் தொழுதேன். அவ்வளவுதான்; வேருென்றும் செய்யவில்லை. உடனே என் நெஞ்சம், நாணம், பெண்மை நலன், தோளின் அழகு முதலிய அனைத்தையும் அவன் கவர்ந்து சென்று விட்டான். அன்று முதல் எனக்கு மன அமைதி இல்லாது போய்விட்டது. உணவும் இறங்கவில்லை; உறக்கமும் வரவில்லை. என் துயரத்திற்கு ஏற்ருற்போல இக் கடலும் 'ஓ' வென்று ஒலித்துக்கொண்டிருக்கின்றது; என்னை நைந்து உருகச்செய்கின்றது. இந்தக் கரிய கடலுக்கும் அதனுல் சூழப்பட்ட இக் கொற்கையம்பதிக்கும் அரசனும் அவன் தானே. என் குறையை யாரிடம் போய் முறையிடுவது? காத்தலை விட்டுக் கவர்தலை மேற்கொண்டவனிடம் சொல்லிப் பயனென்ன? வேலியே பயிரை மேய்ந்தால் என்ன செய்வது? என் நிலைமைக்கு என்ன செய்வேன்?" என்கின்ருள். தன் ஆற்ருமையைக் கூறி அலமருகின்ருள்.

இந்நிலையைக் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் :

வழுவிலெம் வீதியுண் மாறன் வருங்கால்
தொழுதேனைத் தோணலமுங் கொண்டான்—இமிழ்திரைக்
கார்க்கடற் கொற்கையார் காவலனுந் தானேயால்
யார்க்கிடுகோ பூச லினி.

இது கைக்கிளை ; தலைவி தோழிக்கு உற்றதுரைத்தது ; நெஞ்சிற்கு உரைத்ததாகவும் கொள்ளலாம்.

விளக்கம் : வழு - குற்றம், மாறன் - பாண்டியன். தோள் நலமும் கொண்டான் - நெஞ்சம், நாணம், கைவளை இவற்றுடன் தோளின் வனப்பையும் கவர்ந்துகொண்டான். இமிழ் திரை - ஒலிக்கின்ற அலை. கார்க்கடல் - கரிய கடல். கொற்கை - கடற்கரைக்கு அருகிலுள்ளதும் முத்துக்குளிக்கும் துறையையுடையதுமான பாண்டியரது பட்டினம். காவலன் - அரசன் ; மக்களைப் பாதுகாத்து நீதியை வழங்குபவன் என்ற பொருளில் வந்தது. யார்க்கு இடுகோ பூசல் இனி - இனிமேல் யாரிடத்தில் சென்று குறையைச் சொல்லி முறையிடுவது, கள்வனும் காவலனும் ஒருவராக இருக்கும் பொழுது !

'யார்க்கிடுகோ பூசல் இனி?' என்ற நங்கையின் நளினக் குரலில் ஏக்க பாவம் தொனிக்கின்றது. இந்த அடியினைத், திரும்பத் திரும்ப ஈனக்குரலில் பாடி இப்பாவத்தை அறிக. (30)

# இது முறையோ?

ஒரு நாட்டையாளும் மன்னன் மக்கள் யாவரையும் காக்கும் மாண்புடையவன். குடிபுரந்தொழுகிக்கோலோச்சும் பொறுப்புள்ள வன். ஏற்றத்தாழ்வின்றி எல்லார்க்கும் நல்லனவற்றை நல்கும் பெருந்தகை. ஒரு கண்ணுக்கு வெண்ணெயும் மற்ருெரு கண்ணுக் குச் சுண்ணும்பும் வைக்கும் ஒருபாற் கோடியொழுகும் உயர்குண மின்மை செங்கோல் வேந்தனிடம் காணப்பெருத பண்பாகும். எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பது தான் அவனது குறிக்கோளா கும். இங்ஙனம் முறை செய்து காப்பாற்றுவதனுல்தான் மக்கள் அவனை இறை—கடவுள்—என்று போற்றும் வழக்கமும் எழுந்தது.

x x x

பருவம் எய்திய பெண் ஒருத்தி தென்னவன்பால் காதல் கொள்ளுகின்ருள். காதல் முற்றிப் பெரிதும் கலங்குகின்ருள். தன் தோழியை நோக்கி இவ்வாறு கூறுகின்ருள்: “தோழி, செங்கோல் மன்னன், நம் தென்னவன், மன்னுயிர்க்கெல்லாம் காவலனல்லவா? அவ்வுயிர்களுள் யானும் ஒருத்தியன்ருே? எல்லா உயிர்களையும் சரிசமமாக நினைப்பதுதானே முறை செய்து காப்பாற்றுவதற்கு அழகு? ஏனையோரெல்லோரும் உண்டு, உறங்கி, மகிழ்ந்து உவப்புட னிருக்கவும் யான் ஒருத்தி மட்டிலும் மனம் உடைந்து வருந்திப் புழுங்கிச் சாகவும் முறை செய்வது சரியா? இஃது ஒரு வரிசையில் உண்போருக்குப் பாலை வார்த்து மற்ருெரு வரிசையில் உண்போருக்கு நீரை ஊற்றுவது போலல்லவா இருக்கின்றது? இது பாண்டியன் மனத்திற்குத் தக்கதோ? தென்னவனின் குலப்பெருமைக்கு இது முறையோ? மன்னனே மாண்புக்குறைவுடைய செயலை மேற் கொள்ளின் அவன்கீழ் வாழும் நாம் என்ன செய்ய முடியும்? சொல்” என்கின்ருள்.

இந்த நங்கையின் மனநிலையைக் காட்டும் கவிஞரின் சொல் லோவியம் இது:

மன்னுயிர் காவல் தனதான வவ்வுயிருள்
என்னுயிரும் எண்ணப் படுமாயின்—என்னுயிக்கே
சீரொழுகு செங்கோற் செழியற்கே தக்கதோ
நீரொழுகப் பாலொழுகா வாறு.

இது கைக்கிளை ; தலைவி தோழியிடம் கிளத்தல் ; நெஞ்சினிடம் நவில்வதூஉமாம்.

விளக்கம்: மன் உயிர் காவல் - நிலைபேறுடைய உயிர்களைப் பாது காத்தல். தனது ஆன - தன்னுடையது ஆகும். என்னுயிரும் எண்ணப்படுமா யின் - நானும் ஒருத்தி என்று கருதப்பெறுமானால். என் உயிர்க்கே - என்னைப் பொறுத்த மட்டிலும்; என் சம்பந்தமாக மாத்திரம். சீரொழுகு செங்கோல் - நீதியில் நின்று செங்கோல் ஓச்சும் . செழியன் - பாண்டியன். நீர் ஒழுகப்பால் ஒழுகா ஆறு - பாரபட்சமாயும் பராமுகமாயும் இருத்தல்.

'நீரொழுகப் பாலொழுகா வாறு'—என்பது, 'ஒரு பக்கம், நீரொழுகப் பாலொழுகுமாறு' என்ற பழமொழியின் சுருக்கம். * தாய் ஒருத்தி தனது ஒரு குழந்தைக்குத் தன்னிடத்திலிருந்து பால் சுரந்து மற்றொரு குழந்தைக்கு நீர் சுரந்தாற்போல, மன்னுயிர்களைப் புரக்கும் மன்னன் தனது காவலுக் உட்பட்ட உயிர்களிடையே வேறுபாடு காட்டுகின்றான் என்பதை விளக்கு கின்றது இப்பழமொழி.

உள்ளத்தை உருக்கும் பாடல். காதல் மயக்கம் குற்றமற்ற வனையும் குற்றமுடையவனாக எண்ணச் செய்கின்றது. (31)

---

(பா - வே.) 4. விவ்வுயிருள்.

* முறைதெரிந்து செல்வர்க்கும் நல்கூர்ந் தவர்க்கும்
இறைதிரியான் நேரொக்க வேண்டும்—முறைதிரிந்து
நேரொழுகா னாயின் அதுவாம் ஒருபக்கம்
நீரொழுகிப் பாலொழுகு மாறு.

—பழமொழி நானூறு—245.

# காதலின் ஏக்கம்

மாறன்பால் மனத்தைப் பறிகொடுக்கின்ருள் மங்கை யொருத்தி. இவனது மனம் ஒரு நிலையில் இல்லை; எதை எதையோ எண்ணுகின்றது. மாறனது ஏற்றத்தையும் தனது தாழ்ந்த நிலையை யும் ஒப்பிட்டு நோக்குகின்ருள். அது மலைக்கும் மடுவிற்குமுள்ள வேற்றுமையிலும் மிகுதியாக உள்ளது. என்ன செய்வாள்? தோழி யிடம் இவ்வாறு சொல்லுகின்ருள்:

"தோழியே, மாறனைப்பற்றி யாது மொழிவதெனத் தோன்ற வில்லை. பாண்டியனே தன்னேரில்லாத் தனிக்குடையின் கீழிருந்து கொண்டு செங்கோலோச்சுபவன்; யாருக்கும் உட்படாதவன்; மன் னர் மன்னன். வானத்திற்கு எதிராகப் பொருந்திய இந்த உலகை யெல்லாம் கட்டி ஆள்பவன்; இந்த நிலப்பரப்பு முழுவதும் அவ னுடைய ஆட்சியிலுள்ளது. யானே மிகவும் எளியவள்; அதிலும் பெண்ணகப் பிறந்துவிட்டவள். அபலையாகிய என்னல் என்ன செய்யமுடியும்? எப்பொழுதும் குளிர்ச்சி பொருந்திய மாலையை யணிந்த மாறன் தானக மனம் இரங்கி என்பால் தண்ணளி செய் தால் பயன் உண்டு; அங்ஙனம் அவன் என்பால் இரக்கம் காட்டி அருளாவிடில், அவனே ஆற்றுப்படுத்துபவர் யாவர் உளர்? ஒருவரு மில்லையே. ஏழையேன் என் செய்கேன்?" என்கின்ருள்.

இந்த நங்கையின் மனநிலையைக் காட்டும் முகத்தான் நம்மனத்தை உருக்கும் முறையில் கவிஞர் புனைந்த சொல்லோவியம் இது:

> தானேற் றனிக்குடைக் காவலனுற் காப்பதுவும்
> வானேற்ற வையக மெல்லாமால்—யானே
> எளியேனேர் பெண்பாலே னீர்ந்தண்டார் மாறன்
> அளியானே லன்றென்பா ரார்.

---

(பா - வே.) 9. எளியதனேர்; 13. அளியனே.

இது கைக்கிளை; தலைவி தோழியிடம் கூறுவது; நெஞ்சொடு கிளத்தலுமாம்.

விளக்கம்: தானேல் தனிக்குடைக்காவலனால் - அவனைக் கூர்ந்து நோக்கினால், அவன் தனியரசு புரியும் மன்னவன். ஆல் - அசை. தனிக் குடை - ஒப்பற்ற குடை; ஒருவருக்கும் உட்படாத வெண் கொற்றக்குடை. காப்பதுவும் - தான் ஆளுகின்ற எல்லைப் பரப்பும். வானேற்ற வையகம் எல்லா மால் - வானவெளி எல்லாவற்றிற்கும் எதிராக இருக்கும் இப் பூவலயம் முழுவதும். எளியேன் - வலிமையற்றவள் என்றவாறு. ஈர்ந்தண்தார் மாறன் - குளிர்ச்சியான ஈரமுள்ள மாலையை அணிந்த பாண்டியன். மாறன் - பாண்டி யன். அளியானேல் - அருள் செய்யாவிட்டால்; கருணை கூர்ந்து என்னைக் காதலிக்காவிட்டால். அன்று என்பார் ஆர் - மறுத்துச் சொல்லக்கூடியவர் கள் யாவர்.

'அளியானேல் அன்றென்பார் ஆர்' என்ற இறுதியடியில் காதலின் துடிப்பும் ஏக்கமும் நன்குய்த் தொனிக்கின்றன. பாடலைப் பன்முறைப் பாடிப் பாடி இந்த அடிக்கு அழுத்தங்கொடுத்தால் இவை நம் மனத்திற்கும் தட்டுப்படும். (32)

[34]

# கனவிலும் காதல்!

தென்னவன்பால் உள்ளத்தைப் பறிகொடுத்த தெரிவை யொருத்தி உறங்குகின்றாள்; அவளுக்கு நல்ல தூக்கம் பிடிக்க வில்லை. ஆனால், ஊர் முழுவதும் நல்ல உறக்கத்திலிருக்கின்றது. நடு நிசியில் இவள் திடீரென்று படுக்கையை விட்டு எழுகின்றாள். அருகில் ஏதோ ஒன்றைத் தடவிப் பார்த்தவண்ணம் இருக்கின்றாள். அருகில் உறங்கின தோழி வளையல் ஒலியைக் கேட்டுத் திடுக்கிட் டெழுந்து, "என்ன தேடுகின்றாய், இந்நேரத்தில்?" என்று வினவு கின்றாள்.

தலைவி என்ன செய்வாள், பாவம்? மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் திகைக்கின்றாள். சொல்லக்கூடிய செய்தியா அது? ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு இறுதியில் சொல்லியே விடுகின்றாள்: "தோழி, சொல்லுவதற்கு என் மனம் நாணப்படுகின்றது. யானைப்படைகளையுடைய பாண்டியன் வந்து என்னை நெருங்கினான்; அன்பால் எனக்குக் காதலின்பம் தருபவன் போல் கொஞ்சிப்பேசினான். யான் அதனை உண்மையென்று கருதி அருகில் என் காந்தள் விரல்களால் தடவிப் பார்த்தேன். ஆளில்லை; திடுக்கிட்டு எழுந்தேன். அந்தக் கனவு நிலையிலேயே திரும்பவும், படுக்கையைத் துழாவினேன்! என் தனிமைத் துயர் ஒழிந்தபாடில்லை. எனது நிலை இது!" என்கின்றாள்; நாணப்படுகின்றாள்.

தலைவி தான் கனவில் ஏமாற்றம் அடைந்த நிலையை உள்ளம் உருகும்படியாகத் தோழியிடம் கூறியதாகக் கவிஞர் புனைந்த சொல் லோவியம் நம்மையும் மனம் உருகும்படி செய்துவிடுகின்றது.

கவிஞரின் சொல்லோவியம் இது:

> களியானைத் தென்னன் கனவின்வந் தென்னை
> யளியா னளிப்பானே போன்றான்—றெளியாதே
> செங்காந்தண் மெல்விரலாற் சேக்கை தடவந்தேன்
> என்காண்பே னென்னலால் யான்.*

* தொல் - பொருள் - புறத்திணையியல் 28-ஆம் நூற்பாவின் உரையில் நச்சினார்க் கினியர் காட்டிய மேற்கோள்.

இது கைக்கிளை; தோழிக்குரைத்தது; நெஞ்சொடு கூறலுமாம்.

விளக்கம்: களியானைத் தென்னன் - போர் வெறிகொண்ட யானையையுடைய பாண்டியன். அளியான் - தண்ணளியால்; அன்புகொண்டு. அளிப்பானே போன்றான் - காதலிப்பவனாக அருகில் படுத்துக்கொண்டான். என்னை அளியானாயினான்; ஆனால் அளிப்பானே போன்றான் என்றும் பொருள் கொள்ளலாம். தெளியாதே - கண் மூடியிருந்ததன் காரணமாக ஒன்றுந் தெரியாமல். செங்காந்தள் மெல்விரலால் - செங்காந்தல் அரும்பு போன்ற எனது மெல்லிய விரலால். சேக்கை - படுக்கை. தடவந்தேன் - தடவினேன். என் காண்பேன் என்னலால் யான் - என்னைத் தவிர அங்கு வேறு ஒருவரையும் காண்கிலேன்; என் உடலை யானே தடவிக்கொண்டேனே என்றவாறு.

உளவியலார் கூறும் பாலூக்கம் (Sex instinct) கனவிலும் படுத்துகின்ற பாட்டைக் கவிதை நயமாக எடுத்துரைக்கின்றது! (33)

[35]

# குவளை மலரின் தவப் பயன்!

ஒரு சமயம் தென்னவன் மேளதாளத்துடன் தேர்மீது உலா வருகின்றான். மேளதாள முழக்கத்தைக் கேட்ட நங்கையொருத்தி உள் வீட்டிலிருந்து புறவாயிற்கதவு வரையில் வந்து கதவு ஒதுக்கத்திலிருந்துகொண்டு உலாவைக் கவனிக்கின்றாள். தேரும் அவள் வீட்டுக்கு நேரே வந்து நிற்கின்றது. தேர்த்தட்டில் அமர்ந்திருக்கும் தென்னவனைத் தன் இரு கண்களாலும் குளிர நோக்குகின்றாள். அவன்மீது காதல்கொண்டு தன் உள்ளத்தைப் பறிகொடுக்கின்றாள்.

சிறிது நேரத்தில் தேரும் அவள் வீட்டைக் கடந்து சென்று விடுகின்றது. ஆயினும், அவள் மனத்தை விட்டுப் பாண்டியன் அகலவில்லை. அவன் மார்பில் அணிந்திருந்த நறுமணமுள்ள மாலைகள் அவளது மனக்கண்ணைவிட்டு மறையவில்லை. அவற்றினிடையே புரண்டுகிடந்த குவளை மலர் மாலை அவளது கவனத்தை அதிகமாக ஈர்த்தலால், அதனை அவளால் மறக்கவே முடியவில்லை. குவளை மலர் கூடப் பாண்டியனின் மார்பினைத் தன் வயப்படுத்திக்கொண்டிருக்கின்றதே என்றும், அத்தகைய பேறு தனக்குக் கிட்டவில்லையே என்றும் ஏங்குகின்றாள். மேலும், அவன் கையில் பிடித்திருந்த கூரிய வேலும் தேரில் பூட்டப்பெற்றிருந்த தாவிப் பாயும் குதிரைகளும் அவளது நெஞ்சை விட்டு அகலவில்லை. அன்றிரவு முழுதும் பாண்டியனின் நினைவாகவே இருக்கின்றாள். இரவு கழிகின்றது.

மறுநாள் காலையில் அவள் குளத்திற்கு நீராடச் செல்லுகின்றாள்; அங்கு ஒற்றைத்தாளில் மலர்ந்து நிற்கும் குவளை மலர்களைக் காண்கின்றாள். இப்பொழுது குவளை மலர்கட்குக் கிட்டியுள்ள பேற்றினுக்குக் காரணம் புலனாகின்றது. "மாரிக் காலத்தில் நீரின் நடுவிலும் கோடையில் தீயின் நடுவிலும் நின்று தவம் செய்தல் இயல்பு என்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கின்றேன். கார் காலத்தில் நீர் நிலையில் ஒற்றைத்தாளுன்றி நின்று தவம் செய்வதால்தான் இக்குவளை மலர்

மாறனின் மார்பில் அணியும்படியான பேறு பெற்றது போலும்!'' என்று காரணத்தை அறிகின்றாள். தடாகத்தை நோக்கியவண்ணம் தன் நெஞ்சொடு பேசுகின்றாள்.

இங்ஙனம் நங்கை நெஞ்சொடு பேசுவதாக அமைந்த கவிஞரின் பாடல் இது:

> கார்நறு நீலங் கடிக்கயத்து வைகலும்
> நீர்நிலை நின்ற தவங்கொலோ—கூர்நுனைவேல்
> வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியாற்
> கொண்டிருக்கப் பெற்ற குணம்.*

இது கைக்கிளை; நெஞ்சொடு கிளத்தல்.

விளக்கம்: கார் நிறு நீலம் - இருண்ட நீல நிறமும் நறுமணமும் உள்ள குவளை மலர். கார் - என்பதற்குக் கார் காலத்தில் என்று பொருளும் கொள்ளலாம். கடிக்கயத்து - நறுமணங்கமழும் தடாகத்தில். வைகலும் - நாள் தோறும்; எத்தனையோ நாட்களாக. நீர் நிலை நின்ற தவங்கொலோ - நீருக்குள் அசையாது ஒரு தண்டில் நின்று தவம் செய்ததால்தானே. கூர்நுனை வேல் - கூரிய நுனியினைக்கொண்ட வேலினையுடைய. வண்டிருக்க நக்கதார் - வண்டுகள் வந்து இருப்ப அதனாலே மலர்ந்த மலர்களால் கட்டிய மாலை; வண்டுகள் வந்து மொய்க்கும்படியாக மிக்க தேனோடு மலர்ந்த மலர்மாலை எனினும் பொருந்தும். இத்தகைய மாலை குதிரைகளின் கழுத்தில் தொங்குகின்றது. வாமான் - தாவுகின்ற குதிரை, வாவுதல் - தாவுதல். வழுதியால் கொண்டிருக்கப்பெற்ற குணம் - பாண்டியனால் அதற்குக் கிடைத்த பேறு.

இயல்பாக நீர்த்தடாகத்தில் மலர்ந்திருக்கும் குவளை மலரை ஒற்றைத் தாளூன்றித் தவம் செய்வதாகக் கவி தன் குறிப்பை ஏற்றிக் கூறுதலால் இது தற்குறிப்பேற்ற அணி.

தடாகத்திற்குச் சென்ற நங்கை குவளை மலரைக் கண்[illegible] முதல் நாள் மாலையில் தான் கண்ட காட்சி முழுதும் மனக்க[illegible] வந்து நிற்கின்றது. அவளும் ஏதோ புதிய காரணம் கண்டறிந்து விட்டதாக மன நிறைவுகொள்ளுகின்றாள்[illegible]

(பா - வே.) 3. கடியகத்து; 10. நக்காதார்; 13. கொண்[illegible]

* இது யாப்பருங்கலவிருத்தி ஒழிபியலில் 'மெய் வாழ்[illegible] காட்டாகக் காட்டப்பெற்றுள்ளது.

# அது யாருக்குத் தெரியும்?

மதுரையார் கோமான்பால் மனத்தைப் பறிகொடுத்த மங்கை யொருத்தி அவனை அடைவதற்கு வழிவகை காணுமல் பன்னெடு நாட்களாக உள்ளங் கவன்றவண்ணமிருக்கின்ருள். 'ஆசை வெட்க மறியாது' என்று சொல்லுவர். அதிலும் காதல் துறையில் சொல்லவா வேண்டும்? அவள் உள்ளத்தை அறியாத தாயரும் செவிலியரும் தம் மகள் மன்னனைக் காணுவண்ணம் பாதுகாத்து வருகின்றனர். இதனுல் அந்த மங்கை மிகவும் வருந்துகின்ருள்; ஆத்திரப்படுகின்ருள். இந்த நிலையில் தோழியைப் பார்த்து இவ்வாறு பேசுகின்ருள்:

"தோழியே, மதுரை மன்னன் எனக்கு மணாளனுவதற்கு உரிய முறையில் உறுதுணை புரிய யாவர் உளர்? அங்ஙனம் துணைசெய்ய யாரேனும் இருப்பின், அவர் வழியாகவேனும் முயன்று தென்னனை அடையலாமே. ஒரு நாளைக்காகிலும் அவனை அணைவதற்கு நெறி காட்டுபவர் இருக்கின்றனரா? தெரிந்தால் சொல்வாயாக. அதனுல் என் மனக்கவலையைப் போக்கிக்கொள்ளலாம். அன்றியும், வீட்டிலும் ஒரே 'கெடு பிடி'யாக உள்ளது! யான் புறத்தே போகாமல் என்னைக் கட்டிக் காக்கின்றனர்; இற்செறிப்பு தாங்கமுடியாத அளவில் உள்ளது. அவனை அடைவதற்கு வாய்ப்பு கிட்டுமாயின், வீட்டுக் காவலையும் கடந்து வெளியேறிவிடமுடியும்" என்கின்ருள்.

காரிகையின் காதல் துடிப்பைக் கவிஞர் அழகிய சொல் லோவியத்தால் காட்டுகின்ருர். அச் சொல்லோவியம் இது:

அறிவாரார் யாமொருநாட் பெண்டிரே மாகச்
சுறிவார் தலைமே னடந்து—மறிதிரை
முரிஞ்சும் மதுரையார் கோமானைக்
[1]வொருநாட் பெற.

---

[1] ஒருநாள்.

இது கைக்கிளை; தோழியிடம் கூறியது.

**விளக்கம் :** அறிவார் யார் - என் உள்ளக் கிடக்கையை அறிந்தவர்கள் யாவர். பெண்டிரே மாக - மனைவியராக. செறிவு - வீட்டில் அடைத்து வைக்கும் காவல். செறிவார் தலைமேல் நடந்து - இற்செறித்து வைப்பவருடைய கட்டுக் காவலையும் கடந்து. மதுரையார் கோமானை அடையும் வழிவகையை அறிந்து விட்டால் எம்மைக் காப்பவரின் தலைமேல் நடந்து செல்லும் காலமும் வரும் என்றவாறு. 'எப்படியும் மதுரையார் கோமானுக்கு மனைவியாக ஆவேன். இப்பொழுது என்னை இற்செறிப்போர் எமது எதிர்கால நிலையை அறியாதுள்ளனர். எம்மைக் காப்போரைக் கடந்து செல்லும் காலமும் வரும்' என்று தலைவி கூறியதாகக் கொள்ளினும் அமையும். தலைமேல் நடத்தல் - இகழ்ந்து காவலையும் கடந்து செல்லுதல். தலைமேல் மிதித்தல் - இழிவு படுத்தல். * 'அலரெடுத்த, ஊராரை உச்சிமிதித்து' † என்ற கலிப்பாட்டடியையும் காண்க.

மறிதிரை - மடங்கி மடங்கித் திரைத்துத் திரைத்து வருகின்ற அலைகள். மாடம் உரிஞ்சும் - பெரிய மாடங்களில் உராய்ந்து கொண்டு செல்லும். கோமான் - அரசன். கூட ஒரு நாள் பெற - ஒரு நாள் கூடப்பெறுவதற்கு என்றவாறு.

'ஆரறிவார் யாம் ஒரு நாள் பெண்டிரேமாக'—என்பதில் நங்கையின் காதல் துடிப்பும் மன உறுதியும் புலனாகின்றன. (35)

* நாலடி - 61. † கலி - 104

[37]

# இன்னும் என்ன வேண்டுமோ?

காதல் வெறி எத்தனையோ விதமாக உருவெடுக்கும். காரண மின்றி மகிழ்ச்சியும் எக்களிப்பும் உண்டாகும்; துயரமும் துன்பமும் தலைகாட்டும்; ஆறுதலும் ஆதரவும் தோன்றும். இன்னும், என் னென்னமோ செய்யும்.

மங்கையொருத்தி மாறன்மீது மனம் செலுத்தி அவனை நினைந்து நினைந்து ஏங்குகின்றாள். காதல் முற்றிக் கனிந்து விடுகின்றது. தோள்களும் உடலும் வாடி மெலிவடைகின்றன. பாண்டியனுடைய தொடர்பும் அவளுக்குக் கிட்டினபாடில்லை. 'கிட்டாதாயின் வெட் டெனமற' என்ற முதுமொழியை அவள் தனது வாழ்க்கையில் கைக் கொள்ள முடியாது திண்டாடுகின்றாள். தனது நிலையை நினைந்து பார்க்கின்றாள். தனக்கு எல்லா நலன்களும் ஏற்பட்டிருந்தும் ஒன்றே ஒன்று குறைவாக உள்ளது என்பதைச் சிந்திக்கின்றாள். தான் ஆறுதல் பெறுவதற்காகத் தன் நிலையைத் தோழியிடம் இவ்வாறு கூறுகின்றாள்:

"தோழியே, யான் அணிந்துகொண்டுள்ள எல்லாப் பொருள் களுமே தண்டமிழ் வளர்க்கும் தார்வேந்தன் நாட்டிலுள்ளவையே. என் கைகள் அணிந்திருப்பவை பாண்டியனது கடலிலிருந்து எடுக் கப்பெற்ற சங்க வளையல்கள்; மார்பில் பூண்டுள்ள முத்துமாலையி லுள்ள முத்துக்களும் முத்தமிழ் வளர்த்தானின் கடலிலிருந்து வந்த வையே; என் மேனியில் பூசியுள்ள நறுமணச் சந்தனமும் பாண்டிய னுக்குச் சொந்தமான பொதிய மலையில் விளைந்த பொருளே. இவற் றைக் கொண்டே என் தோள்கள் ஆறுதல் பெறலாம். அவையெல் லாம் என்னுடலிலிருந்தும், அவற்றைக் கவனியாமல் வேறு எதனையோ நினைந்து என் தோள்கள் வாடுகின்றனவே. அஃது என்ன வாக இருக்குமோ?" என்கின்றாள்.

இங்ஙனம் காதல் நிறைவேறப்பெருத காரிகையின் உள்ளத் துடிப்பை எடுத்துக்காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது :

கைய தவன்கட லுட் சங்கமாற் பூண்டதுவுஞ்
செய்யசங் கீன்ற செழுமுத்தான்—மெய்யதுவு
மன்பொரு வேன்மாறன் வார்பொதியிற் சந்தனமால்
என்பெரு வாடுமென் ேறேள்.

இது கைக்கிளை ; தலைவி தோழிக்குரைத்தது ; நெஞ்சிற்குரைத் தலுமாம்.

விளக்கம் : கையது அவன் கடலுள் சங்கமால் - கையிலுள்ள வளையல்கள் பாண்டியனுடைய கடலிலிருந்து எடுக்கப்பெற்ற சங்குகளால் ஆனவை. பூண்பது - கழுத்தில் அணிவது. செய்ய சங்கு ஈன்ற செழுமுத்தால் - சூல் நிறைந்த சிப்பிச் சங்கு ஈன்ற முத்தாலானது. மெய்யதுவும் - மேனியில் பூசப் பெற்றுள்ள சந்தனமும். மன்பொரு வேல் மாறன் - பகைமன்னனைப் போர் செய்து அழிக்கும் வேலினையுடைய பாண்டியன். வார் பொதியில் சந்தனமால் - நெடிய பொதியமலையில் விளைந்த சந்தனம். சங்கமால், செழுமுத்தால், சந்தனமால் - இந்த மூன்றிலும் வரும் ' ஆல் ' என்பன அசைகள். என் பெரு வாடும் என்தோள் - எதனைப்பெருது என் தோள் வாடுகின்றதோ

பெண்ணின் உள்ளத்தில் நிகழும் உண்மையான பாவனைகள் நிறைந்த பாடல். பாண்டியனது வன்ேறேளின் முயக்கம் அவாவி அது பெருமையின் நங்கையின் மென்ேறேள் மெலிகின்றது என்பது குறிப்பு. ' என்பெரு வாடும் என் தோள் ' என்ற அடியில் நங்கையின் காதல் குறிப்பு தொனிக்கின்றது ! (36)

(பா - வே.) 9. மன்பொருவேன் ; 10. மாறன்றன்.

# வழி தெரியவில்லையே!

வழியமான் வழுதியினிடத்துக் காதல் கொள்ளுகின்றாள் வனிதை யொருத்தி. காதல் நோய் அவளைப் பெரிதும் வெதுப்புகின்றது. உடல் மெலிந்து உள்ளமும் சோர்வடைகின்றது. கையிலுள்ள வளை யல்களும் நெகிழ்கின்றன. இந்நிலையைக் கண்ட தோழி, "உடம்புக்கு என்ன? வரவரக் கீழே போய்க்கொண்டிருக்கின்றாயே?" என்று வினவுகின்றாள். தலைவி தான் பாண்டியன்மீது கொண்ட காதலையும், அவன் உலா வருதலையும் பார்க்கக்கூடாது என்ற அன்னையரின் காவலையும் வெளியிடுகின்றாள்.

ஒருநாள் மாலை. அன்னையரின் காவல் இல்லாத நேரம். இது தலைவிக்குத் தெரியாது. இந்நிலையில் பாண்டியன் உலா வருகின்றான். தோழி தலைவியிடம் ஓடோடியும் வந்து, "அன்னையரின் காவல் நெகிழ்ந் துள்ளது. பாண்டியன் உலா வருகின்றான். அவனை வந்து காண்பா யாக! காற்று உள்ளபோதே தூற்றிக்கொள்க. இச்சமயம் தவறினால் வேறு நல்ல சமயம் வாய்ப்பது அரிது!" என்று கூறுகின்றாள். தலைவிக்கு என்னது செய்வது என்று புரியவில்லை; மனம் ஒருபக்க மும் செயற்பட முடியாது திண்டாடுகின்றது. வீட்டின் உள்ளேயும் இருப்பதற்கு முடியவில்லை; வெளியில் வந்து பாண்டியனைக் காண்ப தென்றாலோ நாணம் தடையாக இருக்கின்றது! தன் மனநிலையைத் தோழியிடம் இங்ஙனம் வெளியிடுகின்றாள்:

"தோழியே, யான் பாண்டியனைப் பார்க்காமல் இருந்தால் என் கை வளையல்கள் நெகிழ்கின்றன; அவன் உலா வருங்கால் பார்ப்ப தற்கு முயன்று முன்னின்று காணத் தொடங்கினால், நாணம் பெருந் தடையாக அமைந்துவிடுகின்றது. நாணத்தை இழந்தால் பெண்மை நலனே அழிந்து விடும். உயிரினும் சிறந்ததல்லவா நாணம்? நாணத் தையும் விடக்கூடாது; பெண்மை நலனும் அழியக் கூடாது. கை வளையும் சோரக் கூடாது; அவனைக் காணாதும் இருத்தலாகாது.

இதற்கு வழி தெரியவில்லையே! ஒரு தடை அகன்றால் வேறொரு தடை வந்து குறுக்கிடுகின்றதே. என் துன்பம் தீரும் வழியில்லையே. என்செய்வேன்?'' என்கின்றாள்.

நங்கையின் மனநிலையைக் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது:

> நாணுக்காற் பெண்மை நலனழியு முன்னின்று
> காணுக்காற் கைவளையுஞ் சோருமால்—காணேனான்
> வண்டெவ்வந் தீர்தார் வயமான் வழுதியைக்
> கண்டெவ்வந் தீர்வதோ ராறு.

இது கைக்கிளை; தலைவி தோழிக்கு உரைத்தது.

விளக்கம்: நாணுக்கால் - நாணத்தை விலக்கி உறுதியோடு பார்ப்போம் என்றால். பெண்மை நலன் - பெண் தன்மைக்குரிய பண்புகள். காணுக்கால் - பார்க்க வேண்டாம் என்று இருந்து விட்டால். கைவளையும் சோருமால் - கையிலுள்ள வளையல்கள் கழன்றுவிடுகின்றன. ஆல் - அசை. வண்டு எவ்வம் தீர்தார் - வண்டுகளினுடைய பசித்துன்பத்தைத் தீர்க்கும் அளவிற்குத் தேன் நிறைந்த மலர் மாலையை அணிந்த. எவ்வம்-துன்பம். வயமான் - வலிய குதிரை. வழுதி - பாண்டியன். கண்டு எவ்வம் தீர்வதோர் ஆறு - சந்தித்துக் காதல் துன்பத்தை நீக்குவதற்கான வழியை. ஆறு - வழி. காணேன் நான் - என்ற தனிச் சீரினைக்கொண்டு முடிக்க.

'காணுக்கால் கைவளையும் சோருமால்' என்று தலைவி சொல்லுவதில் எவ்வளவோ ஏக்கம் பொதிந்து கிடக்கின்றது. பன்முறை சொல்லிச் சொல்லிப் பார்த்தால் இந்த ஏக்கம் நமக்கும் புலனாகும். 'காணேன் நான்' என்ற தனிச்சீரில் திகைப்புப் பாவம் கொப்புளிக்கின்றது. அது பாட்டுக்குள்ளும் பாய்ந்து வழிகின்றது; பாட்டைப் பாடும் நம் இதயத்தையும் அது நிரப்பி விடுகின்றது. (37)

[39]

# மங்கையின் மனநிலை

மாலை நேரம். மாறன்பால் மனம் போக்கிய மங்கையொருத்தி மேன் மாடத்தில் நிலா முற்றத்தில் சோர்ந்து அமர்ந்துகொண்டுள்ளாள். அவள் தென்னவனை நினைந்து உருகுகின்றாள். இதனால் அவளது கொங்கைகள் விம்மிப் புடைக்கின்றன. அவள் அவற்றின் வனப்பினைக் காண்கின்றாள். மோக வெறியில் இவ்வாறு அவள் தன் நெஞ்சுடன் பேசுகின்றாள் :

"நெஞ்சமே, தென்னவன்பால் நான் காதல் கொண்டேன். அதனால்தான் இங்ஙனம் மனமுருகி அழிகின்றேன். கூரிய கொம்புகளையுடைய பட்டத்து யானையைக் கொண்டவன் பாண்டியன். அவன் தன்மார்பில் குளிர்ச்சியினைத் தரும் நறுஞ்சாந்தினைத் தடவிக் கொண்டுள்ளான். அத்தகைய மார்பினைத் தழுவி அழுந்தத் தோய்ந்து தம் உச்சி, அடிப்பரப்பு முதலியவற்றினிடத்து அப்பிக்கொள்ளாதுள்ளனவே என் கொங்கைகள் ! இக் கொங்கைகளோ ஓங்கியுயர்ந்த பனையில் அரும்புகின்ற இளங்காய்களைப் போன்று அழகாக உள்ளன. அப்படி அழகாக இருந்தாலும், இவற்றால் பயன் ஒன்றுமில்லையே. இவையும் சாந்தினை அப்பிக்கொள்ளவில்லை ; அதனால் யானும் பயனை அடைந்திலேன். என் செய்வேன் ?" என்று இரங்குகின்றாள்.

தெரிவையின் நிலையினைக் காட்டும் பாவலரின் சொல்லோவியம் இது :

> வாருயர் பெண்ணை வருகுரும்பை வாய்ந்தனபோ
> லேரிய வாயினு மென்செய்யுங்—கூரிய
> கோட்டானைத் தென்னன் குளிர்சாந் தணியகலங்
> கோட்டுமண் கொள்ளா முலை. †

---

(பா - வே.) 1. வாரிய ; 3. வருகுருப்பை ; 4. வாய்த்தனபோல்.

† சிலப்பதிகாரம்—காடு காண்காதை 129-ஆம் அடியின் அடியார்க்கு நல்லார் உரையிலும், தொல் - பொருள் - செய்யுளியல் 74, 105-ஆம் நூற்பாக்களின் பேராசிரியர் உரையிலும் மேற்கோளாகக் காட்டப்பெற்றுள்ளது.

இது கைக்கிளை; தலைவி நெஞ்சொடு கிளத்தல்.

**விளக்கம்:** வாருயர் பெண்ணை-நீண்டு உயர்ந்த பனை. வருகுரும்பை - அரும்புகின்ற குரும்பை (வினைத்தொகை). குரும்பை - இளங்காய். சாதாரண மாகக் கவிஞர்கள் மகளிரின் கொங்கைகட்குப் பனையின் குரும்பைகளை உவமையாகக் கூறுவது இலக்கிய மரபாக இருந்து வருகின்றது. ஏரிய ஆயினும் - வனப்பு வாய்ந்தனவாக இருப்பினும். ஏர் - அழகு; எழுச்சி. என் செய்யும் - என்ன பயன். கூரிய கோட்டு ஆனைத் தென்னன் - கூர்மையான கொம்புகளையுடைய பட்டத்து யானையின்மீது பவனி வரும் பாண்டியனின். குளிர் சாந்து அணியகலக் கோட்டு மண் - அழகிய மார்பிலே பூசியுள்ள குளிர்ச்சியைத் தரும் சந்தனத்தின்மீது எழுதப்பெற்றுள்ள குங்குமச் சாந்தை. கொள்ளா முலை - எடுத்துக்கொள்ளாத கொங்கைகள்.

கோட்டுமண் கொள்ளல்: காதலி, காதலனது மார்பினைத் தழுவித் தன் கொங்கைகளால் உழுது அங்குள்ள சாந்தம், கலவை முதலிய நறும்பொருள் களைத் தன்னகத்தே கொண்டு விளங்குதல்.

'தோட்டுவண் டொலியல் மாலைத் துடியிடை மகளி ராய்ந்த
மோட்டுவெண் முத்தம் மின்னும் முகிழ்முலை உழுது சாந்தங்
கோட்டுமண் கொண்ட மார்பங் கோதைவாள் குளித்து மூழ்கிக்
கோட்டுமண் கொள்ள நின்றுன் குரிசில்மண் கொள்ள நின்றுன்'

என்ற சிந்தாமணிப் பாடலால் கோட்டுமண் கொள்ளலைப்பற்றி அறியலாம். இது சீவகனது தோழருள் ஒருவனுன சலநிதி என்பான் கட்டியங்காரனது சேனையுடன் பொருததைக் கூறுகின்றது. மகளிர் தம் முலைகளால் உழுது கோட்டுமண் கொண்ட மார்பினைச் சலநிதியின் மாலையணிந்த வாள் துளைத்துத் தன் நுனியில் தசையைக் குத்திக் கோட்டு மண்ணை எடுத்தது என்றவாறு. (38)

* சீவகசிந்தா—2294.

# இருவகையிலும் துன்பம்!

தமிழ் நாட்டில் தீர்த்தங்களுக்குக் குறைவு இல்லை. ஆறு, கடல், குளம் எல்லாம் அங்குத் தீர்த்தங்கள்தாம். இராமேச்சுவரம், திருச் செந்தூர், கன்னியாகுமரி இவையெல்லாம் தீர்த்தங்கள்; இவ்விடங் களில் கடல் தீர்த்தமாக அமைகின்றது. பொருநை, காவிரி, குற்றாலம் போன்ற இடங்களில் ஆறுகள் தீர்த்தங்களாக அமைகின்றன. சாதா ரணமாக ஆறுகளையும், கடல்களையும் அரசர்களை யொட்டிப் பாராட் டும் வழக்கம் நினைப்பிற்கெட்டாத நெடுங்காலமாகவே தமிழ் நாட்டில் இருந்து வந்துள்ளது. காவிரியைச் சோழனோடும், வைகையைப் பாண்டியனோடும் ஒட்டி வழங்குவதை மகளிர் நன்கு அறிந்திருந்த னர். வைகைநீர் வழுதிமயம் என்று ஒருத்தி சொன்னால் அதில் வியப்பு ஒன்றும் இல்லை. இந்த உணர்ச்சி எல்லோரும்—குறிப்பாகப் பெண்கள் — அறிந்த ஒன்றே.

x x x

பெண்ணொருத்தி, பாண்டியன்மீது மனம் போக்கி மதியிழந் திருக்கின்றாள். எச்செயலையும் காலத்தில் செய்து முடிக்கும் பழக்கம் அவளிடம் இல்லாது போய் விடுகின்றது. அவள் ஒருசமயம் செவிலி யருடன் வைகையாற்றிற்கு நீராடச் செல்லுகின்றாள். தன்னையே மறந்து அவள் நீண்டநேரம் நீரில் குடைந்து குடைந்து ஆடுகின்றாள். இதனால் அவள் 'வாயின் சிவப்பை விழி வாங்க, மலர்க்கண் வெளுப்பை வாய் வாங்க'க் * காதலனுடன் கூடிய காதலியின் நிலையை அடையக் கண்ட செவிலியர் அவளைக் காலந் தாழ்த்தின மைக்காகக் கடிகின்றனர். மறுநாள் அவள் நீராடச் சென்றபொழுது ஆற்றில் இறங்காமல் கரையின்கண்ணே திகைத்து நிற்கின்றாள். இப்பொழுது செவிலியர் நீரில் இறங்காமல் காலந்தாழ்த்தியமைக்குக் கடிகின்றனர். இரண்டு முறையிலும் செவிலியர் கடிந்ததைத் தலைவி வேறுவிதமாகப் பொருள் படுத்திக் கொள்ளுகின்றாள்.

* கலிங்கத்துப் பரணி - தாழி. 61.

இவற்றை அவள் தோழியிடம் இவ்வாறு கூறுகின்ருள் : " தோழியே, வைகையாற்றில் யான் ஓயாது மூழ்கி நீராடினுல் வழுதி யின்பால் வைத்த ஆராக் காதலாலல்லவா இப்படி ஆடுகின்ருள் என்று கூறி என்னைத் துன்பத்தில் ஆழ்த்துகின்றனர் என் அன்னை மார். நீரில் மூழ்காமல் கரையின்மீது சோர்ந்து உட்கார்ந்திருந்தாலோ தென்னவன்பால் வைத்துள்ள தீராக் காதலை மறைப்பதற்குத்தான் இவ்வாறு இருக்கின்ருள் என்பது அவர்களின் நினைப்பு. இங்ஙனம் நீராடலும் துன்பம்; ஆடாதிருத்தலும் துன்பம். பெண்ணுகப் பிறந்தால் இருவகையிலும் துன்பம் ! இதற்கு என் செய்வது ? " என்கின்ருள்.

இந்தப் பெண்ணின் மன நிலையைக் காட்டும் கவிஞரின் சொல் லோவியம் இது :

> **ஏற்பக் குடைந்தாடி லேசுவ ரல்லாக்கால்**
> **மாற்றி யிருந்தா ளெனவுரைப்பர்—வேற்கண்ணுய்**
> **கொல்யானை மாறன் குளிர்புனல் வையைநீ**
> **ரெல்லா மெனக்கோ ரிடர்.**

இது கைக்கிளை ; தலைவி தோழிக்குரைத்தது.

**விளக்கம்** : ஏற்பக் குடைந்து ஆடில் - பொருந்தும் வகையாகத் திளைத்து நீராடினுல். குடைந்தாடுதல் என்பது, நீரினுள் துதைந்து துதைந்து மூழ்குதல். அதாவது, தண்ணீரைக் கையால் எற்றி எற்றி அணைத்து மூழ்குதல். ஏசுவர் - கடிவர்; தூற்றுவர். அல்லாக்கால் - நீராடாது இருந் தால், மாற்றியிருந்தாள் - தன் காதலை மறைத்து இருக்கின்ருள். வையை யார் கோமானின் ஆற்றுநீரில் குளித்தாலும் பொல்லாதது; குளியாமலிருந்தா லும் பொல்லாதது ! கொல் யானை - கொல்லுகின்ற யானை மாறன் - பாண்டியன். இடர் - துன்பம்.

காதல் வெறியை வையை நீரில் வைத்துக் காட்டியது உயர்ந்த கவிதை நெறியைச் சார்ந்தது; மிக உன்னதமான பாவனைப் பண்பை யொட்டியது. * (39)

* ' வெற்பென்று வேங்கடம் பாடும் ' என்ற பேயாழ்வாரின் பாசுரத்தில் (மூன்ரும் திருவந்தாதி-69) காதல்வெறி எங்ஙனம் நீருடன் கலக்கின்றது என்பதைக் காண்க.

# காதல் பகுத்தும் பாடு!

ஒருவருக்கு ஒரு செயலில் ஈடுபாடு அதிகப்பட்டுவிட்டால் அச்செயல் வெற்றியாகவேண்டுமே என்று சதா கவலைப்பட்டுக் கொண்டேயிருப்பர். சோதிடரைக்கொண்டு ஆராய்வோமா, ஆரூடக்காரரைக் கண்டு கேட்போமா, பூ வைத்துப் பார்ப்போமா என்றெல்லாம் எண்ண அலைகள் தோன்றும். அதிலும் காதல்பற்றிப் பெண்களுக்கு அக்கறை ஏற்பட்டுவிட்டால் சொல்லவேண்டிய தில்லை. குறத்தியிடம் குறி கேட்பர்; குறத்தி கிடைக்காவிட்டால் தாமே ஒருவகையில் மணலில் சுழித்துக் குறிபார்த்துக்கொள்வது அவர்களது வழக்கம்.

இஃது அவர்களின் செயல்: தம்முன் மணலை ஒழுங்காகப் பரப்பிக்கொள்வர். கண்களை மூடிக்கொண்டு வலக்கை ஆள் காட்டி விரலால் மணலில் ஓரிடத்தில் சுழிக்கத் தொடங்கிச் சிறுசிறு சுழிகள் வருமாறு வட்டமாகப் போட்டுக்கொண்டே செல்வர். இங்ஙனம் செய்வதில் முதற் சுழி கடைசிச் சுழியுடன் பொருந்தக் கூடினால் காரியம் கைகூடிவிடும் என்பது குறிப்பு; கூடாது தவறினால் காரியம் தோல்வி என்பது பொருள். இவ்வாறு குறிபார்க்கும் செயல் 'கூடல் * இழைத்தல்' என்று வழங்கப்பெறுகின்றது.

x x x

மாறனைக் கண்டு மையலுற்ற மங்கையொருத்தி அவனை எப்பொழுது அடைய முடியுமோ என்று நினைத்து ஏங்குகின்றாள்; நெகிழ்ச்சி அடைகின்றாள். அவனுடன் கூடும் பேறு கிட்டுமோ கிட்டாதோ என்ற ஐயப்பாடு நாளுக்கு நாள் அவளிடம் வளர்ந்து கொண்டேவருகின்றது. மன அமைதியின்றித் திண்டாடுகின்றாள் அவள். குறி பார்க்க எண்ணுகின்றாள்; அப்படிச் செய்தால் தன் நினைவு பிறர்க்குப் புலனாகிவிடுமே என்றும் அஞ்சுகின்றாள். இறுதியில் தானே கூடலிழைத்துக் குறி பார்க்க முடிவு செய்கின்றாள்.

---

* கூடல் - மணலில் போட்ட முதற்சுழியும் இறுதிச் சுழியும் ஒன்றாகக் கூடுதல். இதனை 'நாச்சியார் திருமொழி' (4) உரையாலும், திருச்சிற்றம்பலக் கோவையாலும் (செய் - 186), அம்பிகாபதிக் கோவையாலும் (செய் - 322) அறியலாம்.

மணலில் உட்கார்ந்து அதனைச் சரியாக அவள் ஒழுங்குபடுத்திக் கொள்ளுகின்ருள். 'சுழியே, நான் பாண்டியனைக் கூடுவது உறுதி யானுல் நீ கூடு' என்று சொல்லிக்கொண்டே சுழிக்கத்தொடங்கு கின்ருள். சுழித்துக்கொண்டே இருப்பவள் திடீரென்று சுழிப்பதை நிறுத்திவிடுகின்ருள். 'ஒருவேளை சுழி வட்டங்கள் சரியாகப் பொருந்தாவிட்டால் பாண்டியன் வரமாட்டானே' என்ற எண்ணம் அவளிடம் எழுகின்றது. இந்த மயக்க உணர்வு அவள் சுழிப்பதைத் தடுத்து நிறுத்துகின்றது. பரப்பிய மணலில் கையை வைத்துக் கொண்டு மயங்கிய நிலையிலிருக்கும் அவளை அவளுடைய உயிர்த் தோழி காண்கின்ருள். தோழி தன் செயலை ஒருபால் மறைந்து நின்று பார்ப்பதைக்கூட அவள் காணவில்லை; அவ்வளவு மயக்கம் அவளுக்கு! தோழி அவள் நிலைக்கு இரங்குகின்ருள்.

தலைவியின் நிலையைத் தோழியின் நினைவாகக் கவிஞர் நமக்குத் தன் கவிதையின்மூலம் காட்டுகின்ருர். அவரது கவிதை இது :

> கூடற் பெருமானைக் கூடலார் கோமானைக்
> கூடப் பெதுவனேற் கூடென்று—கூட
> லிழைப்பாள் போற் காட்டி யிழையா திருக்கும்
> பிழைப்பிற் பிழைபாக் கறிந்து.

இது கைக்கிளை ; தோழி தன் நெஞ்சொடு கூறியது.

விளக்கம் : கூடல் பெருமான் - மதுரைமாநகரின் தலைவன். கூடலார் கோமான் - கூடல் நகரிலுள்ளவர்கள் பாராட்டும் பாண்டியன். கூடு என்று - 'சுழியே, நீ கூடுவாய்' என்று சொல்லிக்கொண்டு. கூடல் இழைப்பாள் போல் காட்டி - கூடல் இழைக்கின்ற பாவனையில் இருப்பது போல் காட்டிக் கொண்டு. இழையாது இருக்கும் - சுழியிடும் கருத்தின்றி இருக்கும். பிழைப் பில் பிழைபாக்கு அறிந்து - சுழி கூடாது தவறிவிட்டால் அது காரணமாக நேரிடும் மோசத்தை எண்ணி. பிழைப்பில் - தவறிவிட்டால். பிழைபாக்கு - தவறுதல், அல்லது பிழைத்தல்; காரியம் பிழை பாட்டுக்கு உள்ளாதல் என்றவாறு. (வே பாக்கு - வே குதல் என்பது போல)

மாறனைக் கூடவேண்டும் என்ற மயக்கம் முதல் இரண்டு அடி களில் தொனித்துக்கொண்டே இருக்கின்றது. 'கூடல்' என்ற சொல் மடங்கி மடங்கி வருவதால் மயக்க பாவம் ஒன்று தோன்று கின்றது. (40)

(பா - வே.) 3. கூடலர்; 14. பிழைப்பாற்.

[42]

# சொல்லாமற் சொல்லுக!

அன்று அவள் நெடுநேரம் உறங்கவில்லை. மனக்குழப்பத்துடன் அவள் படுத்துப் படுக்கையில் புரண்டுகொண்டிருக்கின்றாள். அன்று மாலையில் அவள் பட்டத்து யானையின்மீது உலா வந்த பாண்டியனைக் கண்டதுதான் காரணம். யானை விரைவாகச் சென்றதால், அவள் அவனை நன்றாகக் கண்குளிரக் கண்டு களிக்க முடியவில்லை. பாண்டியனும் பொது நோக்காக அவள் இருக்கும் பக்கம் பார்க்கின்றான். அவளும், "நம்மைத்தான் மாறன் நோக்குகின்றான்; நம்மீது காதல் கொண்டு நம்மையே மணந்துகொள்வான்" என்று எண்ணுகின்றாள். அந்தக் காதல் மயக்கமே அவளை உறக்கம் கொள்ளாமற் தொல்லைப் படுத்துகின்றது. அவளது ஆருயிர்த் தோழி, "ஏனம்மா, இவ்வாறு தளர்ந்து இருக்கின்றாய்?" என்று வினவுகின்றாள். அவள் தோழிக்கு உற்றதுரைத்து, அவளைப் பாண்டியனிடம் தூதுபோகுமாறு வேண்டுகின்றாள். பாண்டியனிடம் என்ன சொல்ல வேண்டும்? என்பதை இவ்வாறு அவள் உணர்த்துகின்றாள்.

"தோழி, எனது நிலையைத் தென்னவனிடம் தெரிவிக்க வேண்டும். இன்ன தெருவில் இன்னாருடைய மகள் என்ற என்னைப் பற்றிய விவரங்கள் ஒன்றையும் அவனிடம் சொல்லாதே; அப்படிச் சொன்னால், 'நாணமற்றவள்!' அதற்குள்ளாக இவ்வாறெல்லாம் சொல்லிவிட்டிருக்கின்றாள் என்று அவன் நினைத்தல்கூடும். என் பெயரையும் புலப்படுத்தாதே; புலப்படுத்தினால், 'நானும் அவனைப் பார்த்தேன்; அவளும் என்னைப் பார்த்தாள்; இதற்குள் செய்தி வெளிப்பட்டு விட்டதே; தூதும் வந்து விட்டதே' என்று அவன் எண்ணுதல் கூடும். என் ஊரைப்பற்றியும் உரையாதிருக்கக் கடவாய். ஏனெனில், 'நான் பார்த்தது ஊரெல்லாம் பரவிவிட்டதோ!' என்று கருதி இந்த எண்ணத்தையே கைவிடுதலும் கூடும். நம் அன்னை இன்ன தன்மையள் என்பதையும் சொல்லற்க. சொன்னால், என் காதலை அன்னையும் அறிந்துகொள்ளுமாறு நான் நடந்து

கொண்டதாகக் குற்றம் சாட்டி என்னைப் புறக்கணித்தலும் கூடும். ஆகவே, என்னை நீ அறிந்தவள் என்று காட்டிக்கொள்ளாமலும், அரசன் என்னை விரும்பியிருப்பதைத் தெரிந்துகொள்ளாதவள் போலவும் நீ பேசவேண்டும். 'ஒருத்தி தூங்காமல் ஏங்கிக்கொண்டிருக்கின்றாள்' என்று மட்டிலும் முன்னிலைப் புறமொழியாக உரைத்தால் போதும். அவன் ஒருகால் என்னை மறந்திருப்பான். இவ்வாறு நீ சொன்னவுடன் நினைவு வந்து இங்கு வந்துவிடுவான்" என்கின்றாள்.

இங்ஙனம் சொல்லும்போது கூட நாணம் அடிக்கடி முன்னின்று தடுக்கின்றது. ஆயினும், ஆசை விட்டபாடில்லை. காதல் படுத்தும் பாடு இது!

மங்கையின் மனநிலையைக்—காதல் துடிப்பைப்—புலப்படுத்தும் கவிஞரின் சொல்லோவியம் இது:

> என்னை யுரையலென் பேருரைய லூருரைய
> லன்னையு மின்ன ளெனவுரையல்—பின்னையுந்
> தண்படா யானைத் தமிழ்நர் பெருமாற்கென்
> கண்படா வாறே யுரை.

இது கைக்கிளை; தலைவி தோழிக் குரைப்பது.

**விளக்கம்:** என்னை உரையல் - இன்ன வீட்டைச் சேர்ந்தவள், இன்னாருடைய மகள் என்ற விவரங்களைச் சொல்லாதே.* உரையல் - சொல்லாதே. அன்னையும் இன்னள் - தாயும் காவல் காத்துக்கொண்டே இருப்பவள்; மிகவும் பொல்லாதவள் என்றவாறு. பின்னையும் - ஆயினும். தமிழ்நர் பெருமான் - தமிழை வளர்க்கும் பாண்டியன். கண்படா வாறே உரை - என் கண் உறங்காத நிலைமையை மட்டிலும் சொல். இப்பாடலில் 'உரையல்' என்ற சொல் திரும்பத்திரும்ப வருவதால், இது 'சொற்பொருட் பின்வரு நிலை அணி.'

தலைவி தோழியிடம் தூதுபற்றி உரைக்குங்கால் அவளது மனம் நாணத்தினால் இப்படியும் அப்படியும் தத்தளிக்கின்றது. தத்தளிக்கும் பாவத்தை பாடலின் அடிகளிலுள்ள அசைவுகள் நன்றாகப் புலப்படுத்துகின்றன. (41)

---

(பா - வே.) 8. பின்னையந்

* "ஒருத்தி என்றால் அறியுமோ என்னில், எய்தவன் கை உணராதோ 'இன்ன காட்டிலே மான் பேடை ஏவுடனே கிடந்து உளையா நின்றது' என்று ஊரிலே வார்த்தை பிறந்தால்" என்ற திருவாய்மொழி (1 : 4 - 3) ஈட்டின் வியாக்கியானப்பகுதி இவ்விடத்தில் நினைவிற்கு வருகின்றது.

# கிழவியாகவே பிறந்தாளோ ?

பட்டத்து யானையின்மீது உலா வந்த மாறனை மங்கை யொருத்தி காண்கின்றாள் ; மால் கொள்கின்றாள். அவனைக் கண்ட நாள் தொட்டு அவளது செயல்கள் யாவும் மாறுபடுகின்றன. அன்றிருந்து பாண்டியன் உலா வரும்பொழுதெல்லாம் பட படவென்று வாசல்வரை ஓடுவதும் வேந்தனைக்கண்டு களிப்பதுமாக இருக்கின்றாள். நாளடைவில் காதல் முற்றிவிடுகின்றது. அதனால் அவள் உணவினைச் சரியாக உண்பதில்லை ; நல்ல உறக்கம் கொள்ளுவது மில்லை. ஏதோ பித்துப் பிடித்தவள் போலாகின்றாள்.

தன் மகளது நிலையை அன்னை அறிகின்றாள் ; மால் கொண்ட நிலையை ஊகித்தறிகின்றாள். இனி, பாண்டியனைக் கண்ணாலும் கூடப் பார்க்கக்கூடாது என்று தடையுத்தரவு போடுகின்றாள் ; தெருப் பக்கமே போகக்கூடாது என்று கடிகின்றாள். மகளுக்கு இந்தக் 'கெடுபிடி' சிறிதேனும் பிடிக்கவில்லை. என்ன செய்வாள் ? ஒருநாள் அயலூர் சென்றிருந்த வயதில் தன்னுடன் ஒத்த தோழி யொருத்தி வந்தாள். சாதாரணமாக அவளிடம் இவள் எல்லாச் செய்திகளைப் பற்றியும் உரையாடுவது வழக்கம். வேற்றூரிலிருந்து வந்த கோலத்துடன் தோற்றமளித்த தோழியிடம் இவ்வாறு கூறுகின்றாள் :

"தோழியே, வா. அயலூர் சென்றுவந்த தோற்றமா, இது? புதியவளாக மாறிவிட்டாயே. உன்னுடைய தோள் நீண்டு அழகாக இருக்கின்றது. தோளுக்கேற்ற தோள்வளையம் ! தோளை அஃது ஆசையோடு கட்டிக்கொள்வது போலிருக்கின்றதே. நல்ல பொருத்தம்! நீ கண்ணுக்கு மை தீட்டியதும் மிக அழகாக அமைந்துள்ளது. அமைப்பில் உன்னுடைய கண், வாளையும் வென்றுவிட்டது !'' என்ற பீடிகையுடன் வரவேற்கின்றாள்.

வளையவாய் நீண்டதோள்
வாட்கணாய் !

என்று விளித்து அவளுக்கு வரவேற்பு தருகின்றாள். இருவரும் எதை எதையோ பேசுகின்றனர். பேச்சின் நடுவில் தன் நிலையைத் தோழிக்கு இவ்வாறு உணர்த்துகின்றாள் அந்த நங்கை.

"நான் சொல்லப்போவதில் சுவை மிக்கது ஒன்றும் இல்லை. ஆனால், சோகச் சுவை குறைவின்றி உண்டு. நம்முடைய பாண்டியன் இதழ் விரிந்த மலர் மாலை அணியப்பெற்றவன். மாற்றாரை வென்று மண்கொண்ட மாபெரும் படைகளையுமுடையவன். வீரத்தையே உமிழும் வேலையுடையவன். இத்தகைய மாறனைக் கண்ணெடுத்தும் பார்க்கக் கூடாதென்று என் அன்னை கடிகின்றாள். இளமையுள்ளத்தின் துடிப்பைச் சிறிதும் அறியாதவளாகக் காணப்பெறுகின்றாள் அவள். அவள் இளமைப் பருவ நிலையுடையவளாக ஒரு காலத்தில் இருந்திலளோ? இன்றுள்ள மூப்புத் தன்மையுடன் தான் என்றும் இருந்தாளோ? கண்ணால் பார்ப்பதனால் என்ன கேடு நேர்ந்துவிடும்? இக் கொடுமையை எத்தனை நாட்களுக்குத்தான் பொறுத்துக்கொண்டிருப்பது?" என்கின்றாள்.

நங்கையின் உளத் துடிப்பைக் காட்டும் கவிஞரின் சொல் லோவியம் இது :

> வளையவாய் நீண்டதோள் வாட்கண்ணா யன்னை
> யிளையளாய் மூத்திலள் கொல்லோ—தளையவிழ்தார்
> மண்கொண்ட தானை மறங்கனல்வேல் மாறனைக்
> கண்கொண்டு நோக்கலென் பாள்.

இது கைக்கிளை ; தலைவி தோழிக்குணர்த்துவது.

விளக்கம் : வளை அவாய் - தோள்வளையத்தை ஆவலோடு கட்டிக் கொண்டதாய். வாள்கணாய் – வாள் போன்ற கண்ணையுடையவளே. தளைய விழ்தார் - அரும்புக் கட்டு விரிந்த மலர் மாலை சூடிய (மாறனை) மண் கொண்ட தானை - பல நாடுகளிலும் போர்புரிந்து அந் நாடுகளைப் பாண்டியன் வசமாக்கிய சேனை. தானை - சேனை. மறங்கனல் வேல் - வீரம் உமிழும் வேல்; வீரத்தையே பிரகாசித்துக் கொண்டுள்ள வேல் என்றவாறு. மாறன் - பாண்டியன். நோக்கல் - நோக்காதே (எதிர்மறைப் பொருளில் வந்தது.)

'இளையளாய் மூத்திலள் கொல்லோ ?' என்ற அடியை மீட்டும் மீட்டும் சொல்லிப்பார்த்தால் ஏக்கம், ஏமாற்றம், பரிதாபம், சினம் முதலிய பாவங்கள் கவிதையில் சிறப்பாக அமைந்திருப்பது தெரிய வரும். தலைவியின் சோகம் நிறைந்த காதல் துடிப்பு அதில் தொனிப்பதும் புலனாகும். (42)

(பா - வே.) 12. மாறனைத் தன்.

# [44]

# அது கிட்டுமா ?

அக்காலத்தில் கணவன்மார் நீராடுவதற்கு மனைவிமார் மணப் பொடி இடிப்பது வழக்கம். அரண்மனையின் அந்தப்புரத்திலும் அரசரின் தேவியர் இவ்விதச் செயலை மேற்கொள்ளும் வழக்கம் இருந்து வந்தது. அப்படி இடிப்பதற்குத் தனியான கூடம், நல்ல வயிரத்தாலாகிய மர உரல், தங்கப்பூண்கட்டிய உலக்கை முதலிய எல்லா ஏற்பாடுகளும் இருந்து வந்தன. இடிக்கும்போது பாடுவதற்குப் பாடல்களும் இருந்தன. உலக்கை போடும்போது பாடும் பாட்டு 'வள்ளைப் பாட்டு' என வழங்கி வந்தது. மூவேந்தர்களைப்பற்றியன வாக மிகப் பல வள்ளைப் பாடல்களும், கொடி தேர் முதலிய பத்து உறுப்புக்களைப்பற்றிப் பாடுவதாகிய பாடல்களும் (தசாங்கம்) அக் காலத்தில் மிகுதியாக வழங்கி வந்தன என்பதைச் சிலப்பதிகாரம் போன்ற நூல்களால் அறியலாகும்.* கலித்தொகையிலும் இத்தகைய குறிப்புக்கள் காணக் கிடக்கின்றன. இந்தப் பாடல்களைத் தோழிய ருடன் பாடிக்கொண்டு மனைவியர் சுண்ணம் இடிப்பர்.

x x x

ஒருநாள் மங்கல முழக்கம் கேட்டு வாயிலுக்கு வருகின்றாள் நங்கை யொருத்தி. தெருவில் இப்பக்கமும் அப்பக்கமுமாக நோக்கு கின்றாள். ஒன்றுங் காணப்பெறவில்லை. சோர்வுடன் வீட்டினுள் செல்கின்றாள். திரும்பவும் ஒலி காதில் விழுகின்றது. ஆர்வத்துடன் மீண்டும் வெளியே வந்து தெருவாயிலின் கதவருகிலிருந்துகொண்டு

---

* பாடல்சால் முத்தம் பவள வுலக்கையால்
மாட மதுரை மகளிர் குறுவரே
வானவர்கோன் ஆரம் வயங்கியதோட் பஞ்சவன்றன்
மீனக் கொடிபாடும் பாடலே பாடல்
வேப்பந்தார் நெஞ்சுவக்கும் பாடலே பாடல்.

—சிலப் - வஞ்சிக் - வாழ்த்துக் காதை—27

என்பது பாண்டியனைப்பற்றிய வள்ளைப் பாட்டாகும்.

அங்கு மிங்கும் நோக்குகின்றாள். நெடுந்தூரத்தில் தேரின் கொடி மட்டிலும் அவளது கண்களுக்குப் புலனாகின்றது; வரவரத் தெளி வாகத்தெரிகின்றது கயற் கொடி.

அந்தக் கொடியையே நோக்கிய வண்ணம் நிற்கின்றாள் அந் நங்கை. சிறிதுநேரம் சென்ற பின்னர் பெரிய தேர் ஒன்று தெரிகின்றது. இன்னும் பார்த்துக்கொண்டே நிற்கின்றாள்; தேரும் நெருங்கி வந்து கொண்டிருக்கின்றது. தேரினுள்ளிருக்கும் செம்மல் யார் என்று அவள் நோக்குகின்றாள்; ஆள் அடையாளம் தெரியவில்லை; அவனுடைய மணிமுடி மட்டிலும் அவளுடைய கண்ணில் படுகின்றது; அதனையே நோக்கியவண்ணம் இருக்கின்றாள்; தேரும் அவளுடைய வீட்டருகில் வருகின்றது; உள்ளே தென்னவன் வீற்றி ருக்கின்றான். அவனுடைய மார்பில் மலர் மாலைகள் கிடந்து புரளும் காட்சி அவளது கண்ணில் படுகின்றது. தேர் வீட்டிற்கு நேரே வந்து நின்றவுடன் மாறனுடைய மார்பில் கிடக்கும் முத்தாரங்கள் மிளிர்வது தெரிகின்றது. சிறிது நேரத்தில் தேரும் போய்விடுகின்றது.

அன்று கண்ட காட்சி அந்நங்கையின் மனத்தை விட்டு அகலவே இல்லை. மாறன்பால் மால்கொண்டு மயங்கிய வண்ணம் இருக் கின்றாள் அவள். சரியாக உண்பதுமில்லை; உறங்குவதுமில்லை. இந்நிலையை அவளுடைய அன்னை அறிந்து தன் மகள் வெளியே எட்டிப் பார்க்காத வணணம் காவல் புரியத் தொடங்குகின்றாள். பாவம், அந்நங்கை என்ன செய்வாள்? ஓரிடத்தில் அமர்ந்து கொண்டு அவள் ஏதேதோ எண்ணுகின்றாள்; சிந்தனையில் ஆழ்கின்றாள். அப்பொழுது அண்டை வீட்டிலுள்ள நங்கைமார் சுண்ணம் இடிக்கும் ஒலியும், அவர்கள் பாடும் வள்ளைப் பாட்டொலியும் அவளது காதில் விழுகின்றன. உடனே தான் காதலிக்கும் பாண்டியனைப்பற்றிப் பாடிக்கொண்டு சுண்ணம் இடிக்கவேண்டும் என்ற ஆசை உண்டா கின்றது. ஆனால், தனது இயலாத நிலையை எண்ணித் தன் நெஞ் சுடன் இவ்வாறு சொல்லிக்கொள்ளுகின்றாள்; தலைநாளில் கண்ட காட்சியை நினைந்து பேசுகின்றாள் :

“நான் முதலில் கண்டது கொடி; அடுத்துத் தேரைக் கண்

டேன். அதன்பிறகு தேரினுள் வீற்றிருப்பவன் மாறன் என்றும், * அவன் அணிந்திருப்பது குளிர்ந்த மலர் மாலை என்றும் அறிந்தேன். சிறிது நேரத்தில் மாறனின் மணிமுடியும், மார்பில் இலங்கும் முத்தார மும் எனது கண்ணில் பட்டன. இங்ஙனம் யான் கண்ட காட்சியை, முறை சிறிதும் பிறழாமல் உலக்கையை யோச்சும்போது வள்ளைப் பாட் டால் பாடும் பேறு என்றுவது பெறுவேனோ ?

‘ கொடிபாடித் தேர்பாடிக் கொய்தண்டார் மாறன்
முடிபாடி முத்தாரம் பாடித்—தொடியுலக்கை
..........லோச்சப் பெறுவனோ ’ ”

என்று எண்ணுகின்றாள்.

“பெரிய இல்லமாக இருந்தால் அன்னை அக்கம்பக்கம் போயிருக் கும்பொழுது பாட்டினைப் பாடி உலக்கையைப் போடலாம். அதற்கும் வழியில்லையே. ஆனால், என் வீடோ மிகவும் சிறியது. அன்றியும், அண்டை வீட்டுப் பெண்களுக்குச் சுதந்திரம் உண்டு; அவர்கள் திருமணமானவர்களாதலின் அவர்கட்கு யாதொரு கட்டுப்பாடும் இல்லை. அன்னை எங்காவது போய்த் தொலைவாள் என்று பார்த்தால், அதற்கும் வழியில்லை. என்னை விடாது கட்டிக் காக்கின்றாள் அவள்.

‘ —தொடியுலக்கை

கைமனையி லோச்சப் பெறுவனோ யானுமோர்
அம்மனைக் காவ லுளேன் ’

என்று ஏங்குகின்றாள்.

தலைவியின் ஏக்கம் அவளது மனத்தில் தோன்றியபடியே அமையுமாறு கவிஞர் அமைத்த சொல்லோவியம் இது :

---

* வற்கலையி னுடையானை மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானை
கற்கனியக் கனிகின்ற துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின் றிடைவீழ விம்முற்று நின்றொழிந்தான்
—அயோத்தியாகாண்டம் - குகப்படலம், 29.

என்ற பாடலுடன் ஒப்பிடுக. இது தொலையில் வந்துகொண்டிருக்கும் பரதனைக் குகன் கண்ட முறையினை விளக்குவது.

கோடிபாடித் தேர்பாடிக் கொய்தண்டார் மாறன்
முடிபாடி முத்தாரம் பாடித்—தொடியுலக்கை
கைம்மனையி லோச்சப் பெறுவெனோ யானுமோர்
அம்மனைக் காவ லுளேன்.

இது கைக்கிளை: தலைவி நெஞ்சொடு கூறுவது.

*விளக்கம்*; கொடி - மீனக் கொடி. கொய் தண் தார் மாறன் - அப்பொழுது பறித்துக் கட்டிய குளிர்ந்த மாலையைச் சூடிய பாண்டியனது. முடி - கிரீடம். முத்தாரம் - முத்து மாலை; பாண்டியனுக்குச் சிறப்பாயுள்ளது. தொடி - பூண் (இங்கு தங்கப் பூண்), தொடியுலக்கை - பூண்கட்டிய உலக்கை. கைமனை — சிறிய வீடு, கை - சிறுமை; கைக்குடை, கைத்தடி, கையேடு முதலியன காண்க. ஓச்சுதல் - சுண்ணம் இடிக்கும்பொழுது உலக்கையை மேலோங்கிச் செல்லும்படி நீட்டுதல். யானும் - இதில் உள்ள உம்மை இறந்தது தழீஇயது. அண்டை வீட்டுப் பெண்கள் யாவரும் பாடிச் சுண்ணம் இடிக்கின்றனரே, யானும் அப்பேறு பெறுவேனோ என்பதை அந்த உம்மை குறிப்பிடுகின்றது. யானும் - என்பதற்கு அபாக்கியவதியாகிய யானும் என்றலும் பொருந்தும். அம்மனை - தாய். ஓர் அம்மனை - (கதவடைத்துக் காப்பதில்) ஒப்பற்ற தாய்; ஓர்கின்ற அம்மனை எனக்கொண்டு, குற்றம் ஆராய்கின்ற தாய் எனலும் அமையும்.

இப் பாடலில் 'பாடி' என்ற சொல் பல முறை வந்து பாடலின் உணர்ச்சியை மிகுவிக்கின்றது. * இது சொற்பொருட் பின்வருநிலையணி.

'ஓர், அம்மனைக் காவலுளேன்' என்ற இறுதியடியில் நங்கையின் ஏக்கத் துடிப்பு தொனிக்கின்றது. இந்த அடியைத் திரும்பத் திரும்பப் பாடி அனுபவித்தால் அத் துடிப்பு வெளிப்படுவதை அறிந்து மகிழலாம். (43)

(பா. வே.) 4. மார்பன்.

* காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடி
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய்

—திருவாச - திருவெம் - 14.

என்ற திருவெம்பாவையிலும் 'ஆட' 'பாடி' என்ற சொற்கள் மீட்டும் மீட்டும் இவ்வாறு வந்து உணர்ச்சியை மிகுதிப்படுத்துவதைக் காண்க.

# அன்னையின் அறியாமை

காடை என்பது ஒருவகைப் பறவை. வேடர்கள் அதனைக் கண்ணி வைத்துப் பிடிப்பர். தாங்கள் கூட்டில் வைத்து வளர்க்கும் பார்வைக் காடையை இதற்குத் துணையாகவும் கொள்வர். பார்வைக் காடை உள்ள கூட்டைக் காட்டில் வைத்து அதைச் சுற்றிக் கண்ணியை வைத்துவிட்டு மறைந்திருப்பர். கூட்டினுள்ளிருக்கும் பார்வைக் காடை தனக்குப் பழக்கமான ஒலி கொடுத்து தன் இனக் காடைகளை அழைக்கும். ஏமாந்த காடைகள் வந்து கண்ணிக்குள் மாட்டிக்கொண்டுவிடும். ஒருநாள் வேடன் ஒருவன் பார்வைக் காடை கூட்டை விட்டுப் பறந்து சென்றதை அறியாமல் ‘வெறுங் கூட்டை’ வீட்டிற்குள் காக்கத் தொடங்குகின்றான். என்னதான் தீனி கொடுத்து எவ்வளவு அன்பாக வளர்த்தாலும் காடையின் மனம் வயல் பரப்பில் தடையின்றித் தன் விருப்பப்படித் திரியவேண்டும் என்றுதான் எண்ணும். இது காடையின் இயல்பு.

x x x

ஒரு நாள் பாண்டியன் தெருவின் வழியாக உலா வருகின்றான். வீட்டினுள்ளிருக்கும் பருவ மங்கையொருத்தி கொட்டுமுழக்கத்தைக் கேட்டுப் புற வாயில்வரை வந்து கதவருகில் நின்றுகொண்டு அவனைக் காண்கின்றாள். அவள் தன் உள்ளத்தைப் பறிகொடுத்து அப்படியே மதிமயங்கி ஒன்றுந் தோன்றாது நிற்கின்றாள். இந்நிலையில் அவளுடைய அன்னை அங்கு வருகின்றாள்; அவளது நிலையினை அறிகின்றாள். உடனே மதியிழந்து நிற்கும் தன் மகளை உள்ளே கடத்திச் சென்று கதவை அடைத்துக் காவல் புரிகின்றாள். இனி வெளியில் எட்டிப் பார்ப்பதற்குக் கூட அவளுக்கு வழி இல்லை. வீட்டினுள் இருந்துகொண்டே பலவாறாக எண்ணுகின்றாள் அம் மங்கை. இவ்வாறு அவள் தன் நெஞ்சுடன் சொல்லிக் கொள்ளுகின்றாள் :

“ நெஞ்சமே, என்னே என் அன்னையின் அறியாமை ! பாண்டியன்பால் சென்ற என் நெஞ்சின் இயல்பை அறியாத அன்னை, அறி

வில்லாத வேட்டுவனை ஒத்துள்ளாள். பார்வைக் காடையைக் கூட்டி லிருந்து பறந்துபோகும்படி விடுத்துப் பின்பு வெறுங் கூட்டைக் காப் பதுபோல் பாண்டியன்பால் நெஞ்சினைப் போக்கிய இந்த வெறுங் கூடாகிய உடலைக் காக்கின்றாள். காடை புறத்தே போனபின்பு கூடு எங்கிருந்தால் என்ன ? முதலிலேயே என்னைப் புறத்தே போகவிடாது வீட்டிற்குள்ளேயே வைத்துக் காத்திருந்தால் என் மனமும் மாறன் பால் சென்றிராது. எனக்கும் இத் துன்பம் நேர்ந்திராது. இது தும்பைத் தெறித்துவிட்டுக் கன்றின் வாலைப் பிடிப்பது போலல்லவா உளது ?'' என்கின்றாள்.

மங்கையின் மனநிலையைக் கவிஞர் காட்டும் சொற்படம் இது:

**கோட்டெங்கு சூழ்கூடற் கோமானைக் கூடவென**
**வேட்டாங்குச் சென்றவென் னெஞ்சறியாள்—கூட்டே**
**குறும்பூழ் பறப்பித்த வேட்டுவன்போ லன்னை**
**வெறுங்கூடு காவல்கொண் டாள்.**

இது கைக்கிளை ; இற்செறிக்கப்பட்ட மங்கை தன் நெஞ்சொடு உரைப்பது.

விளக்கம் : கோள் தெங்கு சூழ் கூடற்கோமான் - குலை குலையாகத் தேங்காய்களைத் தாங்கி நிற்கும் தென்னை மரங்கள் சூழ்ந்துள்ள மதுரை மன்ன னை பாண்டியனை. கோள் - குலை. வேட்டு - விரும்பி ; ஆசை கொண்டு. கூட்டே - கூட்டில். குறும்பூழ் - காடை.

> ' கையுள தாகி விடினும் குறும்பூழ்க்குச்
> செய்யுள தாகு மனம்.'

என்ற பழமொழிப்படி (பழமொழி நானூறு - 96) காடையை எவ்வளவு அன் பாக வளர்த்தாலும் அதன் மனம் வயலில் இருப்பதிலேயே செல்லும். பறப் பித்த - பறந்துபோக இடங் கொடுத்து ஏமாந்த. வேட்டுவன் - வேடன். வெறுங்கூடு காவல் கொண்டாள் - மனம் பாண்டியனுடன் களித்திருக்க, உடலை மாத்திரம் இங்குக் காவல் புரிகின்றாள்.

பாடலைப் பலமுறைப் படித்துச் சுவைத்தால் நங்கையின் ஏக்கம், அவளது அன்னையின் ஏமாளித்தனம் முதலியவை தெளிவாக வெளிப்படுவதை அனுபவித்து மகிழலாம். (44)

(பா. வே.) 2. சூழ்மாந்தைக்.

# பணிந்தவருக்குமா தண்டனை?

பருவமங்கையரின் மேனி யழகை நம்மவர்கள் மிகவும் அனுப வித்து மகிழ்ந்துள்ளனர். கவிஞர் ஒருவர் ஒருத்தியின் மேனியழகினை

"உண்ணை உருக்கிய ஆனெய்போல் மேனியள் *

என்று ஒப்பிட்டு மகிழ்ந்துள்ளார். மங்கையது மேனியின் நிறம் உருக் கின பசுவின் நெய்யின் நிறத்தை ஒத்திருக்கின்றதாம். பெரும்பாலும் கவிஞர்கள் மகளிர் மேனியின் நிறத்தை மாந்தளிர் நிறத்துடன்தான் ஒப்பிடுவதுண்டு. மாந்தளிர்களிலும் பலவகையுண்டு. பழுத்த பசுமை யிலிருந்து இருண்ட சிவப்பு வரையிலும் அந்நிறம் இருப்பதைக் காண லாம். மகளிர்களிடையேயும் இவ்வண்ண வேறுபாடுகள் இருப்பதைக் கூர்ந்து கவனித்தால் தெரியவரும். எல்லா நிறவேறுபாடுகளுமே இளமையையும் உடல் நலத்தையும் எடுத்துக்காட்டுவதுடன் மேனிக்கும் வனப்பினை நல்குவன. காதல் நோய் மகளிரிடம் தோன்றி விட்டால் இந்த வனப்பெல்லாம் (grace) நீங்கி மேனி வெளுத்து விடும். வெளுத்துப்போன நிறத்தைப் 'பசலை' என்றும் 'பசப்பு' என்றும் வழங்குவர்.

x x x

அக்காலத்தில் அரசர்கள் போர்மேற் சென்றிருக்கும்பொழுது குடிகள், அவர்கள் வெற்றியுடன் திரும்பவேண்டுமென்று வாழ்த்திக் கொண்டிருப்பது வழக்கம். வெற்றியுடன் திரும்பும் அரசர்களும் தாம் ஊர் திரும்பியவுடன் தம் மக்கள் காண உலா வருதல் மரபாக இருந்து வந்தது. ஒரு சமயம் பாண்டியருள் இளங்கோ ஒருவன் ஆண்ட பொழுது அவன் கீழிருந்த சிற்றரசர்கள் அவன் சிறுவன் தானே என்று எண்ணி இகழ்ந்து இறுமாந்திருக்கின்றனர். அவர்கள் திறையும் செலுத்தவில்லை; வந்து வணங்கவும் இல்லை. இதைக் கண்டு சீற்றங்கொண்ட இளவேந்தன் யானைப் படைகளுடன் சென்று அவர்களுடன் பொருது, அவர்களது நிலங்களையும் கைப்பற்றிக்

* சீவகசிந்தா - 480.

கொண்டு, வாகைசூடித் திரும்புகின்றான். இந்த அரசன் ஊர்மக்கள் மகிழவேண்டுமென்று உலா வருகின்றான்.

அவன் உலா வருங்கால் காண்போர் அனைவரும் அவனைக் கை கூப்பித் தொழுகின்றனர். மாந்தளிர் மேனி மங்கை யொருத்தியும் அவனைக் கண்டு தொழுகின்றாள். மாறன்மீது மாலுங் கொள்ளுகின் றாள். அன்றிருந்து காதல் நோய் அவளது உள்ளத்தைக் கவித்துக் கொள்ளுகின்றது. தென்னவனை நினைந்து நினைந்து அவள் மனம் உருகுகின்றாள். அவளுடைய மாந்தளிர் நிறமெல்லாம் மறைந்தோடு கின்றது; மேனியெங்கும் பசலை பூத்துவிடுகின்றது. முகமெல்லாம் சிறுசிறு பருக்களும் கிளம்பிவிடுகின்றன. தனது முன்னைய நிலையை யும் அன்றைய நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்கின்றாள் அந் நங்கை; தனது மேனியின் வனப்பு, நிறம் முதலியவற்றையெல்லாம் பாண்டி யன் கவர்ந்துகொண்டு போனதாகக் கருதுகின்றாள். தனது நெஞ் சுடன் இவ்வாறு சொல்லுகின்றாள்:

"யானைப்படையை யுடையவன் என்றுகூடக் கருதாமல் பாண்டி யனை எள்ளினர் சிற்றரசர்கள்; பட்டனர். தம் நாடு முழுவதையும் இழந்தனர். பகையரசர்கள் பார் முழுவதையும் இழந்தது குற்றமில்லை. அவர்கள் இவனை வணங்கவும் இல்லை. அந்தக் குற்றத்திற்கு அத் தண்டனை பொருந்தும். அவனைக் கண்டபொழுது நான் நன்றாகக் கைகூப்பித் தொழுதேன். நான் எதற்காக என் அழகு, நிறம் முதலிய வற்றை இழக்கவேண்டும்? இவற்றை மாறன் கவர்ந்து சென்றது முறையல்லவே! பணிந்தவருககுமா தண்டனை?" என்கின்றாள்.

நங்கையின் மன நிலையைக் கவிஞர் அழகிய சொல்லோவியத் தால் இவ்வாறு காட்டுகின்றார்:

> களியானைத் தென்ன னிளங்கோவென் றெள்ளிப்
> பணியாரே தம்பா ரிழக்க—வணியாகங்
> கைதொழு தேனு மிழக்கோ நறுமாவின்
> கொய்தளி ரன்ன நிறம்.

இது கைக்கிளை ; நங்கை நெஞ்சொடு உரைப்பது.

விளக்கம் : களியானைத் தென்னன் - மதக்களிப்புள்ள யானைகளைக் கொண்ட பாண்டியன். இளங்கோ - சிறியவன். எள்ளி - இகழ்ந்து. பணி யாரே - வணங்காதவர்கள். தம் பார் இழக்க - தமது மாநிலத்தை இழக்க. அணி ஆகம் கைதொழுதேனும் - பாண்டியனது அழகிய மார்பினை மிகவும் பணிவாகத் தொழுது வணங்கிய யானும். இழக்கோ - இழக்கவா வேண்டும். நறு மா - நல்ல மணம் உள்ள மாமரம். கொய்தளிர் - கொய்யும் தன்மையுள்ள மாந்தளிர். அன்ன - ஒத்த.

காதல் வெறியில் எதுவும் சொல்லத் தோன்றும். சம்பந்தமில் லாத பேச்சுதான் காணப்பெறும். 'கைதொழுதேனும் இழக்கோ ?' என்ற அடியில் ஏக்க பாவம் துடிப்பதைக் காணலாம். அந்த அடி யைப் பன்முறை சொல்லிப் பார்த்தால் அது வெளிப்படுவது புல னாகும். (45)

[47]

# எவ்வாறு ஆகுமோ?

மாறன்பால் மனம் போக்கி மால் கொண்ட மங்கையொருத்தி அவன் உலா வருங்கால் தன் கருத்தினைக் கண்ணினால் குறிப்பாக உணர்த்தவேண்டும் என்று எண்ணுகின்றாள். 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின், வாய்ச் சொற்கள் என்ன பயனும் இல' * அல்லவா? பாண்டியனும் வழக்கம்போல் மாலையில் உலா வருகின்றான். காரிகை, காவலனைக் காணப்போகும் நேரத்தில் நாணம் வந்து குறுக்கிடுகின்றது; தலையைக் கவிழ்த்துக்கொள்ளுகின்றாள். அதற்குள் மாறன் தேரும் அத்தெருவைக் கடந்து விடுகின்றது. நங்கை நிமிர்ந்து பார்க்கும்பொழுது மாறன் காணப் பெறவில்லை.

என்ன செய்வாள் ஏந்திழையாள்? தன் நாணத்தையும் கண்களையும் நொந்துகொண்டு வீட்டினுள் வந்து பஞ்சணையில் சாய்கின்றாள். உள்ளம் கவலைக் கடலினுள் மூழ்குகின்றது. உறக்கம் வருமா? ஒவ்வொரு நாழிகையும் ஓர் ஊழிக்காலம்போல் தோன்றுகின்றது. இந்நிலையில் சிறிது தூக்கமும் வந்து கண்ணைக் கவிக்கின்றது. கனவில் பாண்டியன் தோன்றுகின்றான். காரிகையும் களிப்புக் கடலில் மூழ்கித் தன் கருத்தினைக் கண்களால் பலவாறாக உணர்த்துகின்றாள். கடமையைத் தவறாமல் நிறைவேற்றிய கண்களை வாழ்த்திக்கொண்டிருக்கும்பொழுது தூக்கம் கலைந்துவிடுகின்றது. "ஐயோ, கனவல்லவா கண்டிருக்கின்றேன்? இந்தப் பாழான கண்கள் மாறன் நேரில் வந்தபொழுது நாணிப் பின்வாங்கின. அவன் கனவில் தோன்றும்பொழுது பலவாறாக விழிக்கின்றன. விழித்தும் பயன் இல்லையே!" என்று ஏங்கி ஏங்கிச் சாகின்றாள்.

இரவு கழிகின்றது. வெய்யோனும் வாவுபரித்தேரேறிவருகின்றான். அவ்வமயம் அவளுடைய உயிர்த்தோழி அவளைக் காண வருகின்றாள். தோழியிடம் தன் அனுபவத்தை உணர்த்துகின்றாள் அந்நங்கை.

---

* குறள் - 1100

நங்கை உணர்த்துவதைக் கவிஞரின் வாக்கில் காண்போம் :

கனவை நனவென் றெதிர்விழிக்குங் காணு
நனவி லெதிர்விழிக்க நாணும்—புனையிழா
யென்க ணிவையானு லெவ்வாறோ மாமாறன்
தன்க ணருள்பெறுமா தான்.*

இது கைக்கிளை ; தோழி கேட்பத் தலைவி சொல்லுவது.

விளக்கம் : நனவு - விழிப்பு. எதிர்விழிக்கும் - நன்றாக விழித்துப் பார்க்கும். நாணும் - வெட்கப்படும். புனை இழாய் - அணிகள் புனைந்த தோழியே. என் கண் இவையானால் - என் கண்களே இந்த அழகில் செயற் படுமானால். மாமாறன் தன்கண் - பெருமை பொருந்திய பாண்டியனிடத்து. அருள் பெறுமா தான் - காதலைப் பெறுவதுதான், எவ்வாறோ - எப்படியோ.

"உன் கண்தான் ஒத்துழைக்கவில்லை யென்றால், அவனாவது தன் குறிப்பை உணர்த்தினனா" என்று வினவிய தோழிக்கு, "ஆமாம், என் கண்ணே இந்த நிலையானால் அவன் கண் இரங்கவா செய்யும்?" என்று மாற்றம் உரைப்பதாகப் பொருள் செய்க.

தலைவி தன்னுடைய நாணத்தைத் தனது கண்களில் ஏற்றிக் கூறுவது உயர்ந்த கவிதைநெறியின்பாற் பட்டது. கவிதையனுபவம் நிறைந்த பாடல் இது. (46)

* இப்பாடலை 74 - ஆம் பாடலுடன் ஒப்பிடுக.

# [48]

# அகப்பட்டுக்கொண்டான் கள்வன் !

சூழ்ந்தைமனம்தான் பாவனையுலகில் திளைக்கும் என்று கருத வேண்டியதில்லை. சில சமயம் பருவமங்கையரின் மனமும் அந்தப் பாவனையுலகில் புகுவதுண்டு அந்தப் பாவனை யுலகில் நிகழும் செயல்கள் யாவற்றையும் நாம் புரிந்துகொள்வது சிரமம். அவை நமக்கு விளக்கம் தந்தால் நாம் நற்பேறுடையவர்களாவோம். சூடிக் கொடுத்த சுடர்க்கொடி கண்ணனைப் பாவனையுலகில் அனுபவிக்க வில்லையா ? நம்மையும் பாவனை யுலகிற்கு மாற்றிக்கொண்டால்தான் அத்தகைய அனுபவங்கள் நமக்குத் தெளிவாகும்.

x x x

தென்னவன் தெருவழியாக உலா வருங்கால் தெரிவை யொருத்தி அவனைக் காண்கின்றாள் ; அக் காட்சி அவளுடைய காத லுக்கு வித்திடுகின்றது. அன்று முதல் அவன்மீது ஆராக்காதலுடைய வளாகின்றாள். அவள் உணவையும் சரியாக உட்கொள்வதில்லை ; உறக்கமும் அவளுக்கு நன்றாக வருவதில்லை. உடல் மெலிந்துபோகின் றது. ஒரு நாள் மாலையில் தோட்டத்தில் உலவிக்கொண்டிருக்கும் பொழுது அவளுடைய வளையல்கள்கழன்று விழுந்து விடுகின்றன. அதைக்கூட கவனியாமல் வீடு செல்லுகின்றாள். அன்றிரவு அவளுக்கு உறக்கம் சரியாக வரவில்லை. நெடுநேரம் கழித்து சிறிது கண்ணயர்கின் றாள். கனவில் பாண்டியன் வருகின்றான்; வளையல்களைக் கழற்றி மறை கின்றான். சட்டென விழித்துக்கொண்டு கையைத் தடவிப் பார்க் கின்றாள் நங்கை ; வளையல்கள் காணப்பெறவில்லை. செவிலித் தாயர்கள் மறுநாள் அவளை நீராட்டிப் பூச்சூட்டி ஒப்பனை செய்யும் பொழுது அவர்களிடம் பாண்டியனின் செயலைக் கூறுகின்றாள். அவர் களும் எதையோ நினைத்துக்கொண்டு தம் மகள் இங்ஙனம் உளறுகின் றாள் என்று எண்ணிக்கொண்டு அவளுக்குச் சமாதானம் சொல்லிச் செல்கின்றனர்.

அன்று மாலையில் மாறன் மதயானையின்மீது ஏறி உலா வருகின்றான். கையில் வாளுடன் கூடிய அவனது பெருமிதத் தோற்றத்தை இந்த நங்கை காண்கின்றாள். அவன் செல்லும் வழியை நெடிது நோக்குகின்றாள். அன்றிரவும் அவள் சரியாக உறங்கவில்லை. காதல் மயக்கத்திலுள்ளவளுக்கு எப்படி உறக்கம் வரும்? நெடுநேரம் உறங்காதிருந்து நள்ளிரவில் சற்று இமைகளை மூடுகின்றாள். கனவு காண்கின்றாள். அன்று வாளேந்திய கோலத்துடன் மதயானைமேல் செல்லும் காட்சியுடன் அவளது கனவில் பாண்டியன் காணப்படுகின்றான். அதை நனவு என்று கருதிக் 'கள்வன் அகப்பட்டுக் கொண்டான்!' என்று கண்களைப் பொத்திக் கொள்ளுகின்றாள்.

இரவு முழுவதும் சரியாக உறங்கவில்லையாதலால் அவள் மறுநாள் பொழுது புலர்ந்த பின்னரும் எழுந்திராமல் நன்கு உறங்குகின்றாள்; கைகளால் முகத்தை மூடியவண்ணம் உறங்குகின்றாள். செவிலித் தாயர் வந்து அவளை எழுப்புகின்றனர். விழித்தவள், "அன்னைமீர்! என் வளையல்களைக் கவர்ந்து சென்ற கள்வன் அகப்பட்டுக் கொண்டான். வாளேந்திய கையுடன் யானையின்மீது ஏறிவந்து நேற்றிரவில் என் கண்ணினுள் புகுந்தான். கண்களைத் திறந்தால் ஒருவருக்கும் தெரியாமல் அவன் மறைந்துவிடுவான். உயிர் பிரியினும் கைகளை நீக்கிக் கண்களைத் திறவேன்" என்கின்றாள்.

தலைவியின் நிலையைக் கவிஞர் அழகிய சொல்லோவியத்தால் காட்டுகின்றார் :

**தளையவிழும் பூங்கோதைத் தாயரே யாவி**
**களையினுமென் கைதிறந்து காட்டேன்—வளைகொடுபோம்**
**வன்கண்ணன் வாண்மாறன் மால்யானை தன்னுடன்வந்**
**தென்கண் புகுந்தா னிரா.**

இது கைக்கிளை; தலைவி செவிலித்தாயரிடம் உரைப்பது.

விளக்கம்: தளையவிழும் பூங்கோதைத் தாயரே - அரும்புக் கட்டு அவிழ்ந்த பூக்களாலான மாலை சூடிய அன்னைமீர். ஆவி களையினும் - என் உயிர் போனாலும். வளை கொடு போம் - வளையல்களைக் களவாடிக்கொண்டு செல்லும். வன்கண்ணன் - இரக்கமில்லாதவன்; அஞ்சாதவன். வாள் மாறன் - வாள் ஏந்திய பாண்டியன். மால் யானை - பெரிய மதயானை. இரா - இரவு.

'அகப்பட்டுக்கொண்டான் கள்வன் !' என்ற பாவம் பாட்டினுள் நன்கு அமைந்திருப்பதைத் தெளிவாகக் காணலாம். 'வன்கண்ணன் என் கண் புகுந்தான்' என்பது இனிமையாக அமைந்துள்ளது. பாடலைத் திரும்பத் திரும்பப் பாடி நங்கையின் அனுபவத்தை உணர்க. (47)

# என்ன பாவம் செய்தேனோ ?

வழுதியின்மீது நெஞ்சம் வைத்திருந்த வஞ்சி யொருத்தி பஞ்சணையின்மீது படுத்திருக்கின்றாள். உறக்கம் வராமல் புரண்டு கொண்டிருக்கின்றாள் ; இரவு நெடுநேரம்வரை விழித்துக்கொண்டே இருக்கின்றாள். எப்படியோ சிறிது உறக்கம் வந்து கண்ணிமைகளை மூடுகின்றாள். கனவும் வந்து விடுகின்றது. கனவில் பாண்டியன் அவளை மெல்ல நெருங்கிக் கைகளைப் பற்றுகின்றான். நங்கை அதை உண்மையென எண்ணி எழுந்து பார்க்கின்றாள். மாறன் மாயமாய் மறைந்து விடுகின்றான் !

இப்பொழுதுதான் அவளுக்குத் தான் கண்டது கனவு என்பது புலனாகின்றது. நனவு என்று நினைத்து எழுந்து கனவையும் இழந்தமைக்கு மிகவும் வருந்துகின்றாள். பாண்டியனைக் கூடுவதற்கு நல்வினை செய்யவில்லை என்றாலும், இந்தக் கனவையும் இழப்பதற்கு என்ன தீவினை செய்திருக்கவேண்டுமோ என்று ஏங்குகின்றாள். இவ்வாறு விடியுமளவும் ஏங்கி ஏங்கிக் காலத்தைக் கழிக்கின்றாள். விடிந்தவுடன் அவளுடைய உயிர்த் தோழி அவளிடம் வருகின்றாள். தலைவி தனக்குற்றதை அவளிடம் உரைக்கின்றாள்.

தலைவி தோழியிடம் உரைப்பதாகக் கவிஞர் புனைந்த சொல்லோவியம் இது :

ஓராற்ற னென்க ணிமைபொருந்த வந்திலையே
கூரார்வேன் மாறனென் கைப்பற்ற — வாரா
நனவென் றெழுந்திருந்தே நல்வினையொன் றில்லேன்
கனவு மிழந்திருந்த வாறு.

---

(பா. வே.) 10-11 றெழுந்தே னல்வினையொன்

இது கைக்கிளை; தலைவி தோழிக்குரைப்பது.

**விளக்கம்:** ஓராற்றால் - எப்படியோ ஒரு வழியாக, என்கண் இமை பொருந்த - சிறிது அளவு உறங்க, உறக்கம் வராமல் நெடு நேரங்கழித்துச் சிறிது வந்தது என்றவாறு. கூரார் வேல் மாறன் - கூர்மை பொருந்திய வேலேந்திய பாண்டியன். வாரா - வந்து (செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்). 'கூரார் வேல் மாறன் வாரா என் கைப்பற்ற' என்று கொண்டு கூட்டுக. நனவு - விழிப்பு. நல்வினை யொன்றில்லேன் - புண்ணியம் செய்யாத பாவியாகிய யான். கனவும் இழந்திருந்தவாறு - கனவும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. நனவின் நிலையை யொப்பிடும்பொழுது கனவு இழிவாக இருப்பினும் அதனையும் கூடப்பெறாமல் இழந்து விட்டேனே என்று வருந்துகின்றாள். இழந்திருந்த - என்பதில் 'இருந்த' என்பது இழந்ததுடன் நில்லாது, விடியுமளவும் உறங்காமல் ஏங்கியிருந்த நிலைமையையும் உணர்த்துகின்றது.

'கனவும் இழந்திருந்தவாறு' என்ற இறுதியடியில் தலைவியின் ஏக்க பாவம் தொனிக்கின்றது. அந்த அடியைத் திரும்பத் திரும்பப் படித்தால் அது புலனாகும். (48)

# ஏங்கிய நெஞ்சம்

இன்று நெல்லை மாவட்டத்தில் திருச்செந்தூருக்கு அருகிலுள்ள கொற்கை என்னும் ஊர் அக்காலத்தில் கடற்கரையோரமாக இருந்தது. அங்குள்ள கடலில் முத்துக் குளித்து அம் முத்துக்களை உலகெங்கும் அனுப்பி வந்தனர். உரோமாபுரி, சீனம், கிரேக்கநாடு ஆகிய இடங்கட்குக் கொற்கை முத்து சென்றது. அந்தக் கொற்கை பாண்டியனின் ஆட்சியிலிருந்தது. சில சமயம் பாண்டியன் மதுரையிலிருப்பான்; சில சமயம் கொற்கையிலுமிருப்பான்.

x x x

அந்தக் கொற்கையில் வாழும் ஒருத்தி ஒருநாள் பாண்டியனைக் காண்கின்றாள்; காதல் கொள்ளுகின்றாள். ஒருநாள் மாலை அவளும் அவளுடைய ஆருயிர்த் தோழியும் உலாவ வருகின்றனர். தலைவி மன அமைதியின்றி கடலலை வீசும் மணல் திட்டருகில் அமர்ந்து அலைகளை உற்று நோக்கிய வண்ணமிருக்கின்றாள். அவளுடைய தோழி அங்குமிங்கும் உலவி வருகின்றாள்.

பெரிய அலை ஒன்று 'ஓ' வென்று இரைந்துகொண்டு வருகின்றது; அவள் இருக்கும் திட்டையும் விழுங்கிவிடுமோ என்ற அளவுக்கு உயர்ந்து வருகின்றது. அந்த அலை அவள் கால் வரையிலும் எட்டிவிட்டுப் போய் விடுகின்றது. இப்பொழுது அருகிலுள்ள மணல் மேட்டில் சங்கு ஒன்று கிடக்கின்றது; அது வயிறு உளைந்து நெளிந்து ஒரு முத்தை யீன்று அந்த மணல் மேட்டில் வைத்துவிட்டுப் பின்பு மெதுவாக நகர்ந்து மணல் மேட்டின் விளிம்பருகில் செல்லுகின்றது. ஒரு பேரலை வந்தால் தானும் அந்த அலையோடு கடலுக்குள் சென்று விடலாம் என்று காத்திருக்கின்றது. இதைத் தலைவி காண்கின்றாள். சங்கின் நிலைக்கு இரங்குகின்றாள்.

இந்நிலையில் உலவப்போன தோழி அவளுடைய பின்புறமாக வந்து அவளது இரண்டு தோள்களையும் பிடித்துக் குலுக்கி, " என்ன, மெய்மறந்து ஆழ்ந்த சிந்தனையிலிருக்கின்றாயே?" என்று வினவுகின்றாள்.

தோழியின் கூற்றாகக் கவிஞர் புனைந்த சொல்லோவியம் இது:

உகுவாய் நிலத்த துயர்மணன்மே லேறி
நகுவாய்முத் தீன்றசைந்த சங்கம் — புகுவான்
திரைவரவு பார்த்திருக்குந் தென்கொற்கைக் கோமான்
உரைவரவு பார்த்திருக்கு நெஞ்சு.

இது கைக்கிளை; தலைவி தோழியிடம் உரைப்பது.

விளக்கம்: உகுவாய் நிலத்த - மணல் உதிர்கின்ற கடற்கரை விளிம்பில். உயர் மணல் மேல் ஏறி - உயர்ந்த மணல் மேட்டின்மீது ஏறி. நகுவாய் முத்து ஈன்று - ஒளிவிட்டு விளங்கும் முத்தினை அந்த மணலில் ஈன்றுவிட்டு. அசைந்த சங்கம் - நகர்ந்து செல்லும் சங்கு. புகுவான் - திரும்பவும் கடலினுள் புகுவதற்காக, திரை வரவு பார்த்திருக்க-சேய்மையில் வரும் பேரலையை எதிர்நோக்கி யிருக்க. தென் கொற்கைக் கோமான் - பாண்டியன். உரை வரவு பார்த்திருக்கும் நெஞ்சு - காதலுரையின் வரவை எதிர்பார்த்து ஏங்குகின்றது எனது நெஞ்சம். இப்பொழுது பாண்டியன் வந்தால் தன்னையும் முத்தையும் அடைவானே என்பது அவளுடைய நினைப்பு.

—புகுவான்

திரைவரவு பார்த்திருக்கும் தென்கொற்கைக் கோமான்
உரைவரவு பார்த்திருக்கும் நெஞ்சு

என்ற அடிகளை மீட்டும் மீட்டும் பாடினால் தலைவியின் ஏக்க பாவம் வெளிப்படுவது தெரியும். பாடும்போது வெளிப்படும் நமது இரக்க பாவம் அதனுடன் தழுவும். பாட்டை அனுபவிப்பதற்கும் 'ஊழ்' வேண்டும்! (49)

[51]

# வாடை விடு தூது

இயற்கை வளம் செறிந்து விளங்குவது பாண்டியநாடு. தென் பாண்டி நாட்டில்—இன்றைய திருநெல்வேலி மாவட்டத்தில்—உள்ள மேற்கு மலைத்தொடர்தான் இதற்கு எடுத்துக்காட்டு. இதுவே பொதியமலைச் சாரல் என்பது. குற்றாலமும் பாவநாசமும் இந்த மலைச் சாரலில்தான் அமைந்துள்ளன. ஆடவரும் பெண்டிரும் கார்த்திகைத் திங்களில் இவ்விடங்கட்குச் சுற்றுலாச் சென்று மனைப்புற விருந்து (Picnic) உண்டு மகிழ்ச்சியாகக் காலங் கழிப்பர். அருவியருகிலும் சுனைகளினருகிலும் மரத்து நீழலில் சமையல் செய்வர். இத்தகைய காட்சிகளை இன்றும் நாம் காணலாம்.

x x x

மாறன் மதுரையிலிருந்து பரிவாரங்களுடன் பொழுதுபோக்காகப் பொதியமலைச் சாரலுக்கு வருகின்றான். அங்குமிங்கும் உலவி இயற்கைக் காட்சிகளைக் கண்டு களிக்கின்றான். அரசன் என்றால், ஆடம்பரங்களுக்குக் குறைவா? பாண்டியன் அமைத்த இடத்திற்குச் சற்று வடப்பக்கம் தள்ளி மற்றொரு குடும்பமும் வந்து தங்கி இருக்கின்றது. அந்த குடும்பத்தைச் சார்ந்த பருவமடைந்த நங்கையொருத்தியும் வந்திருக்கின்றாள்.

அட்டில் தொழில் அழகாக நடைபெறுகின்றது. இயற்கைக் காட்சிகளையும் மலை வளத்தையும் கண்டு களிக்க உலாவி வந்த பொழுது பொறுக்கி வந்த சந்தனச் சுள்ளிகளையும் பட்டு முறிந்த சந்தனச் சிராய்களையும் விறகாகப் பயன்படுத்திச் சமையல் செய்கின்றனர். இதனால் முகாம் எங்கும் சந்தன நறுமணங் கமழ்கின்றது. நறுமணத்துடன் அட்ட உணவை உள்ளங் களிக்க, உணர்ச்சி பொங்க, உண்டு உலவுகின்றனர். அதைத் தவிர அவர்கட்கு வேறு என்ன வேலை இருக்கின்றது?

இங்ஙனம் உலவுங்கால் பருவ மங்கை பாண்டியனைக் காண நேரிடுகின்றது. உடனே அவள் அவன்மீது காதல் கொள்ளுகின்றாள். அழகும் திருவும் அறிவும் நிரம்பிய அம்மலைத் தலைவனாகிய பாண்டியனைக் கண்டால் யாருக்குத்தான் காதல் உண்டாகாது? பாண்டியனது தோற்றம் முதலியவற்றை அவளால் மறக்கமுடியவில்லை. தன்னுடைய முகாமிற்குத் திரும்புகின்றாள். உணவின்மீது நாட்டம் செல்லவில்லை; உறக்கமும் கொள்ள இயலவில்லை. வடக்கிருந்து வாடையும் வீசுகின்றது; காதலும் கொழுந்துவிட் டெரிகின்றது. உணர்ச்சி அவளது வசத்திலில்லாததால் வளையல்களும் நெகிழ்ந்து எங்கோ விழுந்து விடுகின்றன. என்ன செய்வாள், பாவம்? ஒரு மரத்தடியில் தனியாகச் சோர்ந்து உட்கார்ந்து கொண்டு ஏங்கிக் கிடக்கின்றாள்; மெய் மறந்திருக்கின்றாள்.

வாடைக் காற்றோ எலும்பையும் துளைக்கும்படியாக வீசுகின்றது. வாடையின் மோதுதலால் மனம் காதலுலகிலிருந்து இவ்வுலகிற்குத் திரும்புகின்றது. வடகாற்றும் இவளிடத்திலிருந்துதான் பாண்டியன் இருந்த இடத்திற்குப் போகின்றது. காதல் வெறியால் வாடையை நோக்கிப் பேசுகின்றாள் :

"ஓ! நீயா? குளிர்வாடாய், வருக. நீ தெற்கு நோக்கிச் செல்லுகின்றாய் அல்லவா? இந்தப் பொதியமலைத் தலைவன் அருகில்தான் முகாம் செய்திருக்கின்றான். அவனிடம் வைத்த காதலால்தான் என் வளையல்கள் எங்கோ நெகிழ்ந்து விழுந்தன என்று சொல்வாயாக. அவனிடம் குடையும் செங்கோலும் உள்ளன. குடை மக்களைப் பாதுகாப்பதற்கு அறிகுறி; செங்கோல் தீச்செயல்களைச் செய்வோரை ஒறுத்தலுக்கு அடையாளம். 'உங்களுடைய வல்லமையை ஒன்றாரிடம் அல்லவா காட்டவேண்டும்? உவந்தாரிடம், அதுவும் ஒரு பெண்ணிடம் காட்டலாமா? இஃது உங்களுடைய குடையின் தண்மைக்கும் செங்கோலின் செம்மைக்கும் தகுமா?' என்று உரைப்பாயாக" என்கின்றாள்.

நங்கையின் மன நிலையைக் கவிஞர் இந்தச் சொல்லோவி யத்தில் தருகின்றார் :

> மாறடுபோர் மன்னர் மதிக்குடையுஞ் செங்கோலுங்
> கூறிடுவாய் நீயோ குளிர்வாடாய்—சோறடுவார்
> ஆரத்தாற் றீமூட்டு மம்பொதியிற் கோமாற்கென்
> வாரத்தாற் றோற்றேன் வளை.

இது கைக்கிளை; தலைவி வாடையைத் தூது விட்டதைக் கூறுவது.

விளக்கம்: மாறு அடுபோர் மன்னர் - பகைவரை வெல்லும்படியாகப் போர் புரியும் வீர மன்னர். 'பகையைக் கொல்லும் ஆண்மை, அன்பு கொண்ட ஆரணங்கின் வளையல்களைக் கவரலாமா' என்ற தொனியினை இச் சொற்றொடரில் காண்க. அடுதல் - அழித்தல். மதிக்குடையும் செங்கோலும் கூறிடுவாய் - திங்கள் போன்ற வெண்கொற்றக்குடையும் செங்கோலும் அவனிடமிருப்பதை நினைவுகூர்க. நீயோ குளிர் வாடாய் - குளிர்வாடாய், நீதானு யாரோ என்றல்லவா பார்த்தேன் என்றவாறு. தலைவியின் மனம் கனவுலகிலிருந்து நனவுலகிற்கு வந்து வாடையை உணர்ந்து பேசுவதை இத் தொடர் உணர்த்துகின்றது. சோறு அடுவார் - உணவு சமைக்கின்றவர். ஆரத்தால் தீ மூட்டும் - சந்தனச் சுள்ளிகளாலும் சிராய்களாலும் அடுப்பு மூட்டும். அம் பொதியில் கோமாற்கு - அழகிய பொதியமலைக்கு மன்னனான பாண்டியன் பொருட்டு. வாரம் - அன்பு. தோற்றேன் வளை - என் வளையல் களை இழக்க நேர்ந்தது, அவன் பறித்துக்கொண்டது காரணமாக. நான் அவன் மீது அன்பு வைத்திருக்க, அவன் என் வளையல்களை இங்ஙனம் கவரலாமா என்றவாறு.

நங்கையின் பகற்கனவில் (Day-dreaming) எழுந்தது இப் பாடல். நங்கையிடமிருந்து பாண்டியன் வளையல்களைப் பறித்துக் கொண்டுபோனதாக அவள் எண்ணுவது பகற் கனவின்பாற் பட்ட தாகும். பாடலைப் படிக்கும் நம்மையும் அஃது அந்தக் கற்பனை யுலகிற்குக்கொண்டு செல்லுகின்றது. இல்லையா ? (50)

[52]

# ஏந்தலை நாடிய ஏந்திழையின் நெஞ்சம்

ஒரு பெரிய அடர்ந்த காட்டில் வேடர்கள் மான் வேட்டையாடு கின்றனர். அந்தக் காட்டின் குறுக்கே ஓர் ஆழமான நீரோடை உள்ளது; அதில் வெள்ளம் கரை புரண்டோடுகின்றது. அந்த ஓடையைத் தாண்டிச் செல்வதற்கு ஒரே ஓர் இடத்தில் இருபுறமும் பாறைகள் நெருங்கியுள்ளன. அம்பு பாய்ந்த உடலுடன் பெண்மான் ஒன்று அந்த இடத்தில் கரையைத் தாண்டியோட நினைக்கின்றது. ஆனால் ஆட்கள் அடிக்கடி அந்த இடத்தில் தாண்டிப் போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருக்கின்றனர். இரத்தம் வடியும் நிலையுடன் நோவு தாங்கமுடியாமல் அப் பெண்மான் ஓடையின் கரையிலுள்ள ஒரு புதரில் மறைந்து நிற்கின்றது. இதை நினைவில் வைத்துக் கொண்டு மேலே பார்ப்போம்.

x x x

கூடலார் கோமான் குஞ்சரம் ஏறித் தெரு வழியாக உலா வருகின்றான். அதைக் காணும் காரிகை யொருத்தி காவலன்மீது காதல் கொள்ளுகின்றாள். மாரன் அவள்மீது மலரம்புகளை ஏவிய வண்ணமிருக்கின்றான். சிறிது நேரத்தில் உலா வந்த பாண்டியன் தனது அரண்மனையை அடைந்து விடுகின்றான்.

ஆயினும், நங்கையின் நெஞ்சம் சும்மா இருக்கவில்லை. அதுவும் பாண்டியனைத் தொடர்ந்து அரண்மனையை நோக்கிச் செல்லுகின்றது. அரண்மனைவாயிலில் கூட்டம் அதிகமிருந்ததால் அதனைக் கடந்து உள்ளே செல்லமுடியாமல், ஓர் ஓரத்தில் நின்றுகொண்டு திண்டாடு கின்றது. அரண்மனைக்கு உள்ளே போகின்றவர்கள் போய்க்கொண் டிருக்கின்றனர்; உள்ளிருந்து வெளியே வருகின்றவர்களும் வந்து கொண்டிருக்கின்றனர். தன்னைப் பார்த்துச் சிலர் நகக்கூடும் என்று நாணிக் கதவின் பக்கத்தில் மறைந்து நிற்கின்றது அவளுடைய மனம். இவ்வாறு கற்பனையுலகில் உலவுகின்ற தலைவியிடம் அவளுடைய

ஆருயிர்த்தோழி வருகின்ருள்; "என்ன மெய் மறந்த நிலையி லிருக்கின்ருயே ?" என்று தலைவியை வினவுகின்ருள் தோழி.

தலைவி தனது நிலையை விளக்குவதுடன் "கூடலார் கோமான் பின் தொடர்ந்து சென்ற என் உள்ளம் அம்புபட்ட பெண்மான் போலல்லவா உளைந்து நிற்கின்றது ?" என்கின்ருள்.

தலைவியின் நிலையைக் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது :

> புகுவார்க் கிடங்கொடா போதுவார்க் கொல்கா
> நகுவாரை நாணி மறையா—விருகரையின்
> ஏமான் பிணைபோல நின்றதே கூடலார்
> கோமான்பின் சென்றவென் னெஞ்சு.

இது கைக்கிளை; தலைவி தன் மனநிலையைத் தோழிக்கு உரைப்பது.

விளக்கம் : புகுவார்க்கு - அரண்மனையின் உள்ளே செல்லுகின்றவர் களுக்கு. இடங்கொடா - இடங்கொடுத்து. போதுவார்க்கு - அரண்மனையி லிருந்து வெளியே வருகின்றவர்கட்கு. ஒல்கா - ஒதுங்கி. நகுவாரை நாணி மறையா - தன்னைப் பார்த்துப் பரிகசிக்கும் இயல்பினரைக் கண்டு வெட்கிக் கதவின் அருகில் மறைந்து. கொடா, ஒல்கா, மறையா - இந்த மூன்றும் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள். இவை பாட்டின் உணர்ச் சியை மிகுவிக்கின்றன. இருகரை - தாண்டிச் செல்வதற்கேற்றவாறு தாழ்ந் திருக்கும் கரை. ஏ மான் - அம்பு ஏவுண்டமான். ஏ - அம்பு. பிணை - பெண் மான். கூடலார் கோமான் - பாண்டியன். கூடல் - மதுரை. கோமான் - அரசன்.

'ஏமான் பிணைபோல நின்றதே...என் நெஞ்சு' என்ற பகுதியை உணர்ச்சியுடன் பாடுங்கால் தலைவியின் ஏக்க பாவம் புலனுவதை அறியலாம். (51)

(பா - வே.) 8 – 9, இருகரையி னேமாப்

[53]

# வாடை தரும் தொல்லை

நாம் பிறந்தநாள்தொட்டு நம்மைக் கோள்களும் விண்மீன்களும் இயக்குகின்றன என்பது ஒளி நூல் (சோதிட நூல்) வல்லாரின் கொள்கை. நம்முடைய அன்றாடச் செயல்களும் பிறவும் அவற்றால் தான் நடைபெறுகின்றன என்பது அவர்களது துணிபு. நாம் தாய் வயிற்றிலிருந்து பிறக்கும்பொழுது எந்த நாள் - மீனின் ஒளி நமது உடலில் வந்து தாக்குகின்றதோ அந்த ஒளிதான் நம்மை வாழ்நாள் முழுதும் இயக்கிக்கொண்டு போகின்றது என்று அவர்கள் கூறு கின்றனர். மானிட இனம் தலைமுறைத் தலைமுறையாக இந்தக் கொள் கையில் நம்பிக்கை வைத்து வாழ்ந்து வருகின்றது.

நோய்வாய்ப் பட்டார்க்கு அவர்களது பிறந்த நாளில் நோய் மிகுதி யாதலும் சிலசமயம் அவர்களைக் கொன்றே விடுதலும் இயல்பு; இஃது ஒளி நூலின் துணிபு. யாராவது ஒருவர் நோயுற்றுக் கிடக்கும் பொழுது அவரது பிறந்த நாள் வந்து இடையிட்டால் உற்றாரும் உறவினரும் மிகமிக அஞ்சுவதை இன்றும் காணலாம்.* 'ஐயோ, இந்த நாள் முழுவதும் எவ்வாறு கழியுமோ? நல்லபடியாகக் கழிய வேண்டும்!' என்று ஏக்கங்கொண்டு இறைவனை வாழ்த்துவர்; எல் லோரும் ஒரே மனத்துடன் வேண்டுவர். சிலர் தமது பிறந்தநாளன்று கோயில்களில் அபிடேகம், அருச்சனை முதலியவைகளை நடத்தி வருவதை இன்றும் நாம் காணலாம். இன்னும், மதியின் ஒளி உடலில் தாக்கினால் பிணி குறைவதையும், அதன் ஒளி குறையக் குறைய நோய் அதிகரிப்பதையும் அனுபவத்தில் காணலாம். அமாவாசை யன்று நோய் அளவுகடந்து மிகும். இதனால் நோயுற்றவர்கள் வீட்டில்

---

* வங்கப் பிரதமர் பி. சி. ராய் என்பார் தமது எண்பத்தொன்றாவது பிறந்த நாளன்று (1—7—62) மறைந்தது ஈண்டு சிந்திக்கத்தக்கது.

இருந்தால் பெரியோர்கள் நிறைமதி, குறைமதி நாட்களைக் கவனிக்கும் வழக்கம் இன்றும் நடைமுறையில் இருந்து வருகின்றது.

x x x

'யானை வரும் பின்னே, மணியோசை வரும் முன்னே' என்று சொல்வர். பட்டத்து யானை பலவிதமாக அணி செய்யப்பெற்று அதன் இருபுறங்களிலும் அழகான மணிகள் தொங்கவிடப்பெற்றுள்ளன. அந்த யானையின்மீது ஏறிப் பாண்டியன் உலா வருகின்றான். யானையின் மணியோசை கேட்டு நங்கை யொருத்தி வீட்டினுள்ளிருந்து ஓடோடியும் வந்து கதவருகில் நின்றுகொண்டு பாண்டியனை எட்டிப் பார்க்கின்றாள். மணியானையின்மீதுள்ள மாறனைக் காண்கின்றாள். மாறனது அழகு, அவன் யானையின்மீது வீற்றிருக்கும் சிறப்பு, யானையின் பெருமித நடை இவை யாவும் அவளது மனத்தில் பதிகின்றன; மாறன்மீது மால் கொள்ளுகின்றாள். காதல் வளர்கின்றது; எல்லையில்லாது வளர்கின்றது. என்ன செய்வாள் பாவம்?

அது கூதிர்காலம்; சதா வாடை வீசிக்கொண்டிருக்கும் காலம். மாலை நேரத்தில் வாடைக் காற்று சீறிச் சீறி வீசுகின்றது. எரிகின்ற நெருப்பில் எண்ணெய் ஊற்றியதுபோல் அவளுடைய காதல் நோய் பின்னும் அதிகமாகின்றது. வாடைக் காற்று அவளைக் கொன்றுவிடும் போலிருக்கின்றது. பிணிவாய்ப்பட்டாரைப் பிறந்த நாளன்று அப் பிணி அதிகமாக வருத்துவது போலவே, வாடை தன்னை மிகவும் வருத்துவதாகக் கருதுகின்றாள் அந்நங்கை; அதனைக் கண்டு மிகமிக அஞ்சுகின்றாள். அச்சமயம் அவளுடைய ஆருயிர்த் தோழி அவளிடம் வருகின்றாள்; தோழியிடம் அவள் தனது நிலையை எடுத்துரைக்கின்றாள்.

தலைவி தன் நிலையைத் தோழிக்கு எடுத்துரைப்பதுபோலக் கவிஞர் புனைந்த சொல்லோவியம் இது:

**பிணிகிடந் தார்க்குப் பிறந்தநாட் போல<br>வணியிழை யஞ்ச வருமால்—மணியானை<br>மாறன் வழுதி மணவா மருண்மாலைச்<br>சீறியோர் வாடை சினந்து.**

இது கைக்கிளை ; தலைவி தோழிக்குச் சொல்லுவது.

விளக்கம் : பிணிகிடந்தார்க்கு – நோய்வாய்ப் பட்டவர்கட்கு. பிறந்த நாள் - பிறந்த நட்சத்திரம். அணி இழை – அழகிய அணிகலன்களை அணிந்துள்ள தோழி (அன்மொழித் தொகை). வருமால் - வரும்; ஆல், அசை. மணி யானை - மணிகள் கட்டப்பட்ட யானை. மாறன், வழுதி - பாண்டியன். காதல் மயக்கத்தில் பாண்டியனது பெயரை இருமுறை அடுக்கியவாறு. மணவா - மணந்து கூடாத. மருள் மாலை - மயக்கமான மாலைக் காலம்.

இயல்பாக வீசும் வாடையைச் சினந்து வீசுவதாகவும், அது வந்து மோதுவதைச் சீறி மோதுவதாகவும் கருதும் மனநிலை காதல் மயக்கத்தால் ஏற்படுவது. இது பாட்டின் உணர்ச்சியை மிகுவிக்கின்றது. (52)

# நாணோடு பிறந்த நங்கை

மாறன் மாற்றாருடன் போர் செய்யப் போயுள்ளான். நாட்டிலுள்ள மக்கள்யாவரும் போரின் முடிவைப்பற்றியே எண்ணிக்கொண்டிருக்கின்றனர்; வெற்றியுடன் திரும்பவேண்டுமென்று ஆண்டவனை வேண்டி நிற்கின்றனர். இந்நிலையில் பாண்டியன் பகைவரை வென்று வாகை சூடி ஊர் திரும்புகின்றான்; தன்னை மக்கள் கண்டு மகிழவேண்டும் என்று மாலையில் தெருவழியே உலா வருகின்றான்.

வழுதியின் வீரச்செயல்களைக் கேள்வியுற்றிருந்தாள் நங்கை யொருத்தி. இப்பொழுது உலாவில் அவனை நேரில் காண்கின்றாள். அவனது பெருமிதத் தோற்றத்தில் ஈடுபடுகின்றாள். அவன்மீது மால் கொள்ளுகின்றாள். காதல் கடலாகப் பெருகுகின்றது. அவள் வாழும் இல்லத்தின் வழியாகப் பாண்டியன் அடிக்கடிக் குதிரையின் மீது செல்வது வழக்கம். அதனால் அவனைச் சந்திக்கவும், கண்டு பேசவும் நல்ல வாய்ப்பு இருந்தது. அவள் தோழிமாருடன் மகிழ்ச்சியாக இருக்கும்பொழுது பாண்டியன்மீது கொண்டுள்ள காதல் மயக்கத்தால் எப்படி எப்படி எல்லாமோ வானக்கோட்டைகளைக் கட்டிப் பேசுவாள். ஆனால், அவள் தனித்து இருக்கும்பொழுது பின் வருமாறு சிந்திக்கின்றாள்; நெஞ்சொடு பேசுகின்றாள் :

"பகைவர்களைப் போரில் வென்று திரும்பிய பாண்டியனைக் காணாதபொழுது அவனைப்பற்றி ஆயிரம் எண்ணங்கள் என் மனத்தில் முளைக்கின்றன. அவன் பெருமைகளைப் பாராட்டிப் பேசுகின்றேன். 'உலா வருங்கால் என்னைப் பார்க்கக்கூடாதா? என்னோடு உரையாடக் கூடாதா? யானே முதலில் பேசட்டும் என்ற சோதனையா?' என்று இப்படி ஆயிரம் சொல்ல நினைப்பேன். ஆனால், அவனை நேரில் காணுங்கால் அவனுடைய வைரமாலையைக் கேட்பதெங்கே? அவனுடைய மார்பினைத் தழுவுவ தெங்கே? நான் பிறந்தபோதே என்னுடன் பிறந்த இந்த நாணம் எங்கிருந்தோ வந்து அனைத்தையும் தடுத்துவிடுகின்றதே!" என்கின்றாள்.

நங்கையின் எண்ண அலைகளைக் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது :

> மாணுர்க் கடந்த மறவெம்போர் மாறனைக்
> காணுக்கா லாயிரமுஞ் சொல்லுவேன்—கண்டக்காற்
> பூணுகந் தாவென்று புல்லப் பெறுவேனே
> நாேைணு டுடன்பிறந்த நான்.

இது கைக்கிளை ; தலைவி நெஞ்சொடு சொல்லுவது.

விளக்கம் : மாணுர் - பகைவர். கடந்த - நேர் நின்று பொருது வென்ற. மறம் - வீரம். வெம்போர் - கொடிய போர். மாறன் - பாண்டியன். காணுக்கால் ஆயிரமும் சொல்லுவேன் - அவன் இல்லாத பொழுது எதை எதையோ சொல்லுவேன். பூண் ஆகம் - வைர மாலை அணிந்த மார்பு. புல்லப் பெறுவேஞ - தழுவப்பெறுவேனே.

'புல்லப் பெறுவேனே ?' என்ற தொடரில் தலைவியின் ஏக்கம் தொனிக்கின்றது. 'நாேைடு உடன் பிறந்த நான்' என்ற இறுதி அடி தலைவியின் இதயம் கரைந்தே போய்விட்டது என்ற பாவத்தை மிக அருமையாய்க் காட்டுகின்றது. பாட்டைப் பாடுங்கால் இவற்றிற்கு அழுத்தங் கொடுத்துப் பாடினுல் அவை தெளிவாகப் புலனுகும். (53)

[55]

# இரவு படும் பாடு!

ஒரு நாள் மாலையில் மாறன் தெருவழியே உலா வருகின்றான். அவனது மார்பில் வெண்சாந்து பூசியிருக்கின்றான்; பன்னிறப் பூக்களாலான மாலை அவனது மார்பில் புரள்கின்றது. இக் கோலத்தில் உலா வரும் அவனை நங்கை யொருத்தி காண்கின்றாள்; அவன்மீது மால் கொள்ளுகின்றாள். பாண்டியனும் சிறிது நேரத்தில் அத் தெருவைக் கடந்து சென்று விடுகின்றான்.

வேட்கையுடன் வீட்டிற்குள் சென்ற நங்கைக்கு அன்று இரவு சரியாக உறக்கம் வரவில்லை. அவளது கண் வழியாகப் பாண்டியன் உள்ளே புகுந்து அவளது உள்ளத்தில் தங்கியிருக்கும்பொழுது அவளுக்கு எங்ஙனம் உறக்கம் வரும்? நெடுநேரம் உறங்காதிருந்து பலவாறு எண்ணுகின்றாள். பிறகு தன் நெஞ்சினிடம் இவ்வாறு சொல்லிக்கொள்ளுகின்றாள்:

"நெஞ்சமே, இன்று தென்னவன் ஆகத்தை அணைய முடியாதிருப்போர் பலர்; அணைபவரும் சிலர். அணையமுடியாதிருப்போருள் யானும் ஒருத்தி. அணையும் பேறு பெற்றவர்கள் யாவரும், 'இரவே, நில்; போய்விடாதே, நீ போய்விட்டால் அவனும் போய் விடுவான்!' என்பர். அணையும் வாய்ப்புப் பெறுதவர்கள், 'இரவே, நீ போ; விரைவில் விடியட்டும்!' என்பர். இப்படிப் புல்லினவர் மகிழவும், புல்லாதார் வருந்தவும் அவனது மார்பு உள்ளது. ஒரே மார்பு சிலருக்கு இன்பம் ஊட்டுவதாகவும் சிலருக்குத் துன்பம் விளைவிப்பதாகவும் உள்ளதே. ஒரு பொருள் இரண்டு செயல்கட்குக் காரணமாக உள்ளது! சிலர் இரவினை இழுத்துப் பிடிக்கின்றனர்; சிலர் அதனை விரட்டியடிக்கின்றனர். இன்று 'இரவுபடும் பாடு' சொல்லி முடியாது" என்கின்றாள்.

நங்கையின் எண்ணங்களுக்குக் கவிஞர் கொடுத்த சொல் வடிவம் இது ;

புல்லாதார் வல்லே புலர்கென்பர் புல்லினர்
நில்லா யிரவே நெடிதென்பர்—நல்ல
விராஅமலர்த் தார்மாறன் வெண்சாந் தகல
மிராவளிப் பட்ட திது.

இது கைக்கிளை; தலைவி நெஞ்சொடு கிளப்பது.

விளக்கம் : புல்லாதார் - மாறனது மார்பை (அகலம்) அணையாதவர்கள். வல்லே புலர்க என்பர் - விரைவாக விடிந்து விடு என்பார்கள் (இரவைப் பார்த்து). புல்லினர் - அணைந்தவர்கள். நில்லாய் இரவே நெடிது என்பர் - இரவே, நீ நீண்ட நேரம் தங்குவாயாக என்பார்கள். விராஅ மலர் - விரவிய மலர் ; பல மலர்களும் கலந்த மாலையை மாறன் அணிந்துள்ளான் என்றவாறு தார் - மாலை. வெண்சாந்து - வெண்மையான சந்தனம். அகலம் - மார்பு. இரா அளிப்பட்டது - இரவில் அருளுதலைப் பொருந்திய நிலை இது ; இரவில் இரங்குதலைப் பொருந்திய நிலை இது. 'அளிப்பட்டது' என்பதைச் சிலேடையாகப் பொருள் கொண்டு இரவின் பரிதாப நிலையைக் காண்க.

ஏக்க பாவம் நிறைந்த இப் பாடல் கவிதையனுபவத்தின் கொடுமுடியை உணரச்செய்கின்றது. பாடலைப்பாடி அனுபவித்தால் இது நமக்குத் தட்டுப்படும். (54)

(பா - வே.) 9. விராமலர்த்; 13. மிராவளியப்.

# மகளிர் கண்களிலும் முத்துக்கள்

முத்தமிழை வளர்த்த பாண்டிய நாடு முத்துக்கும் பெயர் போனது. கொற்கை முத்து உலகப் புகழ் பெற்றது. கொற்கையில் எடுக்கப்பெற்ற முத்துக்களை அக்காலத்தில் அனைவரும் பாராட்டினர்; அந்த முத்துக்கள் அவ்வளவு வளமாக இருந்தன. பாண்டிய நாட்டு முத்துக்கள் யாவும் கொற்கையில்தான் குவிந்து கிடந்தன. வணிகர்கள் அங்குத்தான் அவற்றைக் குவியல் குவியலாகத் திரட்டி வைத்திருந் தனர். உரோமாபுரி, சீனு, காச்மீரம், வாரணுசி முதலிய இடங்கட்குக் கொற்கையிலிருந்துதான் முத்துக்கள் அனுப்பப்பெற்றன. கொற்கை தான் முத்து, முத்துதான் கொற்கை என்ற அளவுக்கு இரண்டும் புகழ் பெற்றிருந்தன.

x x x

தென்னவன் உலா வருகின்ருன். ஒன்ஞரை வென்ற குருதிக் கறை படிந்த வேல் ஒன்று அவன் கையிலிருக்கின்றது. மார்பிலும் குளிர்ந்த சந்தனத்தைப் பூசியுள்ளான். இந்தக் கோலத்தில் அவனைக் கண்ட மங்கை யொருத்தி அவன்மீது ஆராக் காதல் கொள்ளுகின் ருள். வீட்டில் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு அவனை நினைந்து நின்று உருகுகின்ருள் ; கண்ணீர் வடித்த வண்ணமாக இருக்கின் ருள். இந்நிலையை அவளுடைய ஆருயிர்த் தோழி காண்கின்ருள். ஒருபக்கம் வருந்துகின்ருள்; மற்ருெரு பக்கம் வியக்கின்ருள். இவளைப்போல் எத்தனைபேர் இந்நிலையில் உள்ளார்களோ என்று சிந்திக்கின்ருள். உடனே தனது நெஞ்சுடன் இவ்வாறு கூறிக் கொள்ளுகின்ருள் :

" சிப்பிகள் ஈன்ற ஒளி முத்துக்கள் பாண்டியனுடைய கொற்கை யில் மட்டிலுந்தான் இருக்கும் என்று இதுகாறும் கருதிக்கொண் டிருந்தோம். அந்தக் கருத்தை இனி மாற்றிக்கொள்ளவேண்டியது

தான். அவனது மார்பைத் தழுவக் கருதிய மகளிரின் கண்களிலும் முத்துக்கள் உண்டாகத் தொடங்கிவிட்டன—கண்ணீராக !'' என் கின்ருள்.

நங்கையின் மனநிலையைத் தோழியின் கூற்ருகக் கவிஞர் புனைந்த சொல்லோவியம் இது :

> இப்பியீன் றிட்ட வெறிகதிர் நித்திலங்
> கொற்கையே யல்ல படுவது—கொற்கைக்
> குருதிவேன் மாறன் குளிர்சாந் தகலங்
> கருதியார் கண்ணும் படும்.

இது கைக்கிளை ; தோழி தன் நெஞ்சொடு நவில்வது.

விளக்கம் : இப்பி - முத்துச்சிப்பி. எறிகதிர் நீத்திலம் - நிலவுபோன்று ஒளி வீசும் முத்துக்கள். கொற்கையே அல்ல படுவது - கொற்கையில் மட்டி லும் உள்ளன என்று கருதுதல் கூடாது. கொற்கைக் குருதிவேல் மாறன் - கொற்கை நகருக்குத் தலைவனை இரத்தம் தோய்ந்த வேல் ஏந்திய பாண்டி யன். குளிர்சாந்து அகலம் - குளிர்ந்த சந்தனம் பூசிய மார்பு. கருதியார் - தழுவ வேண்டும் என்று நினைக்கும் மகளிர். கண்ணும் படும் - கண்ணிலும் காணலாம்.

கண்ணினின்று வடியும் நீர்த்துளிகளை முத்துக்கள் என்று கூறு வதில் ஒரு சோக பாவம் நிழலிடுகின்றது. இந்தச் சோகத்தில் நகைச் சுவையின் சாயலும் கலந்து மிளிர்கின்றது. பாட்டைத் திரும்பத் திரும்பப் பாடிஞல் இது வெளிப்படுவதைக் காணலாம். (55)

[57]

# வீணாகக் கழிந்த இரவு!

பெண்ணொருத்தி பாண்டியன்மீது காதல் கொள்ளுகின்றாள். காதல் முற்றி எப்பொழுதும் அவள் அவன் நினைவாகவே இருக்கின்றாள். அவளது கனவிலும் பாண்டியன் வருகின்றான்! கனவில் கண்ட நிகழ்ச்சிகளைத் தன் தோழியிடம் கூறுகின்றாள்.

"நேற்று இரவு மாறன் கூடும் நோக்கத்துடன் என்னை நெருங்கினான். யான் அவனிடம் பிணங்கினேன்; இவ்வளவு நாட்களாக என்னைத் தவிக்கவிட்டானே என்றுதான் அவ்வாறு செய்தேன். அவன் எத்தனையோ காரணங்களைக் கூறி என்னைத் தெளிவிக்க முயன்றான். யான் தெளியாமல் ஊடல் நிலையிலேயே இருந்தேன்; இறுதியில் என் மனம் இளகியது; இணங்கும் நோக்கத்துடன் அவன் அருகில் சென்றேன். இப்பொழுது அவன் ஊடத் தொடங்கி விட்டான். யான் எவ்வளவோ சமாதானம் சொல்லிப் பார்த்தேன். அவனும் தெளியாமலேயே பிணங்கி இருந்தான். எனக்கும் கோபம் வந்து விட்டது."

'யான்ஊடத் தான்உணர்த்த யான்உணரா விட்டதற்பின்
தான்ஊட யான்உணர்த்தத் தான்உணரான்!'

என்று தனக்கும் பாண்டியனுக்கும் நேர்ந்த சிறு பிணக்குகளைக் கூறியவள் அதனால் ஏற்பட்ட பேரிழப்பினையும் புலப்படுத்துகின்றாள்.

"இந்தச் சச்சரவுகளினாலேயே இரவு முழுதும் கழிந்தது! அவனது மார்பினை அடைந்த மலர்மாலையில் தேன் ஊறுகின்றது; அவனைத் தழுவிய காரணத்தால் அஃது இன்பத்தைப் பெருக்கிக் கொள்ளுகின்றது. அந்த வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை. தென் மலையில் பிறந்த சந்தனம் அவனது மார்பில் தோய்ந்திருக்கின்றது. அஃது எனக்குக் கிடைக்கவில்லையே!"

—'தேனூறு

கொய்தார் வழுதி குளிர்சாந் தணியகலம்
எய்தாது இராக்கழிந்த வாறு.

என்று ஏங்கி இரங்குகின்றாள்.

நங்கை தனது அனுபவத்தைத் தோழியிடம் கூறும் பாணியில் கவிஞர் புனைந்த சொல்லோவியம் இது:

> யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்
> றானூட யானுணர்த்தத் தானுணரான்—தேனூறு
> கொய்தார் வழுதி குளிர்சாந் தணியகலம்
> மெய்தா திராக்கழிந்த வாறு.

இது கைக்கிளை; தலைவி தோழியிடம் கூறுவது.

*விளக்கம்:* ஊட - பிணங்க. உணர்த்த - சமாதானம் பண்ண. யான் உணராவிட்டதற்பின் - நான் தெளியாமல் உதறித் தள்ளியபிறகு. தேன்ஊறு கொய் தார்-தேன் ஊறும் பொழுதே மலர்களைக் கொய்து தொடுக்கப்பெற்ற மாலை. வழுதி - பாண்டியன். சாந்து - சந்தனம். அகலம் - மார்பு. எய்தாது - அடையாமல். இராக்கழிந்த ஆறு - இரவு முழுதும் வீணேகப்போன விதம் இது.

'எய்தாது இராக் கழிந்தவாறு' என்ற இறுதியடியில் நங்கையின் ஏக்கம் பொங்கி வழிகின்றது. அந்த அடியைத் திரும்பத் திரும்ப உணர்ச்சியுடன் படித்தால் இந்த ஏக்க பாவம் தட்டுப்படும். (56)

# எங்கும் மங்கல ஒலி

கிள்ளி என்பான் சோழவேந்தர்களுள் ஒருவன். அவனது நாட்டில் மாரி பொய்ப்பினும் தான் பொய்யா காவிரி நதி பெருக் கெடுத்து ஓடுவதால் நெல் விளைச்சலுக்குக் குறைவில்லை. 'சோழ நாடு சோறுடைத்து' என்ற பழமொழியும் இதனாலன்றோ எழுந்தது? தைமாதத்தில் அந் நாட்டில் மக்களிடையே ஒரு தனியான மகிழ்ச்சிப் பெருக்கினைக் காணலாம். அம்மாதத்தில்தான் அறுவடைக் காலம் தொடங்குகின்றது.

சோழ நாட்டில் அறுவடைக்காலத்தில் எம்மருங்கும் நெல்லடிக்கும் களங்களைக் காணலாம்; வைக்கோற் போர்களைப் பார்க்கலாம். வண்டிகள் வரிசை வரிசையாகச் செல்லும் காட்சியைக் கண்ணுறலாம். வேலையாட்களின் ஆரவாரத்தை எத்திசையிலும் கேட்கலாம். அந்நாட்டில் களத்தில் நெல்லையடித்துக் களஞ்சியமாகக் குவித்து அதனைக் காப்பான் வேண்டிக் களத்திலேயே படுத்துறங்கும் பலர் அதிகாலையில் விழித்துக்கொண்டு வைக்கோற் போர்மீது ஏறி நின்று 'நாவலோஒ' என்று வேலை செய்வோரைக் கூவி யழைப்பர். இங்ஙனம் ஆயிரக்கணக்கான வைக்கோற் போர்களின்மீது ஏறிக் கூவும் ஆரவாரம், மன்னரின் வீரர்கள் தும்பை மலர்களைச் சூடிக்கொண்டு மாற்றுரைக்கொல்லும் யானைகளின்மீது ஏறிக்கொண்டு தத்தம் பகுதிகளைச் சார்ந்த வீரர்களைத் திரண்டுவருமாறு 'நாவலோஒ' என்று அழைக்கும் ஆரவாரத்தை ஒத்திருக்கின்றது. இரண்டற்கும் ஒரே சொல் வழங்குமாயினும், ஒன்று நெற்களத்திற்கு வருமாறு உழவர்களைக் கூவி யழைப்பது; மற்றொன்று போர்க்களத்திற்கு வருமாறு வீரர்களைக் கூவி விளிப்பது.

சோழநாட்டின் வளத்தைத் தன்னொடு எதிர்ப்பட்ட வேற்று நாட்டார் சிலருக்கு எடுத்துரைப்பதுபோல் கவிஞர் தன் சொல்லோவியத்தை அமைத்துள்ளார். இதோ அச்சொல்லோவியம்:

காவ லுழவர் களத்தகத்துப் போரேறி
நாவலோஓ வென்றழைக்கு நாளோதை—காவலன்றன்
கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே
நல்யானைக் கோக்கிள்ளி நாடு.

இது கோக்கிள்ளியின் நாட்டுவளங் கூறுவது.

*விளக்கம்:* காவல் உழவர் - நெற்களத்தில் களஞ்சியத்திற்குக் காவல் இருக்கும் உழவர்கள். களம் - நெல்லடிக்கும் இடம். போர் - இங்கு வைக்கோற் போரைக் குறிக்கின்றது. நாவலோஓ - ஏர்க்களத்திலும் போர்க்களத்திலும் தத்தம் பகுதியினரைக் கூவி அழைக்கும் குறியீட்டுச் சொல். நாளோதை - நாள் செய்வதற்கான மங்கல வாழ்த்தொலி; காலைப்பொழுதில் இசைக்கப்படுவது. காவலன் தன் - அரசனது(சோழனது). கொல் யானை - போருக்குரிய கொம்பன். கூற்று இசைத்தாற்போலும் - தம் பகுதியினரை அழைத்தாற்போலும். நல்யானைக் கோக்கிள்ளி நாடு - யானைப்படைகளை அதிகமாக உடைய கிள்ளியின் நாடு.

ஏர்க்களங் காப்போர் நெற்போரின்மீது ஏறிக்கொண்டு கூவியழைத்தல் போர்க்களங்காப்போர் களிற்றின் மீதிருந்து கொண்டு விளிப்பதை ஒக்கும் என்பது கவிஞரின் குறிப்பு. நாட்டு வளத்தைக் கூறும் பாடலில் வீரமும் தொனிக்கின்றது. (1)

(பா - வே.) 3. கடுங்களத்துப்; 5. நாவலோர்; 5-6 நாவ லெனவழைக்கு.

[59]

# எழில் கொழிக்கும் உறந்தை

மலரைக் கொண்டு மகளிர் தம்மை ஒப்பனைசெய்து கொள்வது தமிழகத்தின் தனிப்பட்ட நாகரிகம். வடபுலத்தில் இந்த நாகரிகத் தைக் காண்பது அரிது. முல்லை அரும்புகளைத் தொடுத்தோ, கனகாம்பர மலர்களைக் கட்டியோ கருங்குழலின்மீது சூடுவது ஒரு தனிப்பட்ட அழகு என்பது சொல்லித் தெரியவேண்டியதில்லை. பன்னிறப் பூக்களால் தொடுக்கப்பெற்ற கதம்பமாலையும் கார் வண்ணக் குழலுக்குப் பொலிவுதருவதைக் காணலாம்.

சோழ நாட்டின் தலைநகராகிய உறந்தை மலர் வகைகட்குப் பெயர்போனது. மாலைப்பொழுதில் மாநகரின் தெருக்களின் வழியாகப் போனால் பல இடங்களில் பூ விற்போர் பன்னிறப் பூக்களைத் தொடுத்து மாலையாக விற்பதைக் காணலாம். அங்காடிக் கடைகள், சோலை ஓரங்கள், தெருவின் இருபுறங்கள்—எம்மருங்கும் பூக்கள் மயம்! மலர்கள் வாடியோ துவண்டோ காணப்பெறின் மலர் விற்போரே அவற்றைத் தெருவில் தூக்கி எறிந்து விடுவர். அதி காலையில் எழுந்து மக்கள் நடமாடுவதற்கு முன்பு தெருக்களை உற்று நோக்கினால் முதல் நாள் மாலையில் கிள்ளிக் களைந்தெறிந்த பூக்கள் வீதியில் பரவிக் கிடந்து பன்னிறமுள்ள வான வில்லைப்போல் இலங்கு வதைக் காணலாம்.

கழித்துக் தள்ளின பூக்களின் அளவு இவ்வாறு மிகுதியாகக் காணப்பெறுகின்றது என்றால், விற்பனைக்கு வந்த பூக்களின் அளவு எவ்வளவு இருக்கும்? அவற்றை அணிந்த மகளிர் எத்தனை பேர்? அம்மலர்களை விளைவித்த மலர்ப்பொழில்கள் எத்தனை இருக்குமோ? என்றெல்லாம் சிந்திக்கத் தோன்றுகின்றதல்லவா? இதனால் நகரின் சிறப்பு, மக்கட்டொகுதி, செல்வ வளன், பூம்பொழில்களின் பெருக்கம், நாகரிகப்பண்பு முதலிய அனைத்தும் புலனாகின்றன.

பூக்களை அளவுகோலாகக் கொண்டே உறையூரின் வளத்தைக் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது:

> மாலை விலைபகர்வார் கிள்ளிக் களைந்தபூச்
> சால மிகுவதோர் தன்மைத்தாய்க்—காலையே
> விற்பயில் வானகம் போலுமே வெல்வளவன்
> பொற்பா ருறந்தை யகம்.

இஃது உறந்தையின் வளத்தை உவந்து ஓதுவது.

விளக்கம்: மாலை - முதல் நாள் மாலை நேரத்தில். விலை பகர்வார் - பூ விலை கூறுவோர். கிள்ளிக்களைந்த பூ - தொடுக்கும் பொழுது (வடுவுற்றும் சுருண்டும் வேறு குறையுடனும் இருத்தலால் கிள்ளியால்) களைந்தெறியப்பட்ட பூக்கள். சால - மிகுதியாக. காலையே - மறுநாள் அதிகாலையில். வில் பயில் வானகம்போலுமே - இந்திர வில்லிட்ட வானம்போல் காட்சியளிக்கும். வெல்வளவன் - வெற்றியையுடைய சோழன். வளவன் - சோழன். பொற்பு ஆர் உறந்தை - அழகு நிறைந்தஉறையூர்.

உறந்தையின் செல்வ மிகுதியையும் பிற சிறப்புக்களையும் காட்டும் ஓர் அரிய பாடல். இங்ஙனம் செல்வத்தின் உயர்ச்சியைக் காட்டுவது ‘உதாத்த அணி’யின்பாற் படும். இதனை ‘வீறுகோளணி’ என்றும் வழங்குவர். (5)

(பா - வே.) 5. சாலை; 6. மருவியதோர்; 7. தன்மைத்தால்; 8. காலைய.

# இன்றும் நிலை சரியாக இல்லை!

சோழப் பேரரசு பல சிற்றரசுகளைக்கொண்டது. எத்தனையோ குறு நில மன்னர்கள் சோழனுக்குத் திறை செலுத்திக்கொண்டு அவனது கொடியின்கீழ் அமைதியாக வாழ்ந்தனர்; ஆணைக்குக் கட்டுப்பட்டிருந்தனர். திறை செலுத்தவேண்டியவர்கள் குறிப்பிட்ட நாளுக்குள் திறையினைச் செலுத்திவிடவேண்டும். அங்ஙனம் செலுத்தத் தவறினால், அவர்கட்குப் பெருந்தண்டனை கிடைக்கும். சில சமயம் தம் நாட்டினையே இழக்கவும் நேரிடலாம்.

ஒரு சமயம் சோழனது அரண்மனை வாயிலில் பெருங்கூட்டம் காணப்படுகின்றது. ஏராளமான சிற்றரசர்கள் தத்தம் திறைப்பொருள் களுடன் அங்குக் காத்துக் கிடக்கின்றனர். அன்றைய முதல் நாளும் இம்மாதிரியாகப் பலர் கப்பம் செலுத்தினர்; அன்று மாலைவரை செலுத்தியவண்ண மிருந்தனர். அவசர அவசரமாகச் சிற்றரசர்கள் அவனது திருவடியைத் தலை தாழ்த்தி வணங்கிச் சென்றபொழுது அவர்களது பொன்முடிகள் உராய்ந்ததால் சோழனது காலில் புண் ஏற்பட்டு விடுகின்றது. அந்தப் புண் மறு நாள் குணமடையவில்லை. அதன் காரணமாகத்தான் கோட்டைவாயில் திறக்கப்பெருமலிருக்கின்றது. வாயிற்காவலன் ஒருவன் வந்து அவர்களிடம் இவ்வாறு கூறுகின்றான் :

"வேந்தர்களே, இன்று எம்மன்னர் திறை வாங்கும் நிலையில் இல்லை. நேற்றுச் செலுத்தியவர்கள் முடிதாழ்த்தி வணங்கிய பொழுது அவர்தம் முடிகள் உராய்ந்ததால் எம் மன்னரின் திருவடியில் ஏற்பட்ட புண் இன்னும் மாறவில்லை. சற்றுப் பொறுத்திருந்து கொடுங்கள் ; அவசரப்படாதீர்கள் !" என்கின்றான்.

இந்தக் காட்சியைக் காணும் கவிஞர் அதனை அழகிய சொற்படத்தால் உருவாக்கித் தருகின்றார். அவரது சொல்லோவியம் இது:

நின்றீமின் மன்னீர் நெருகற் றிறைகொணர்ந்து
முன்றந்த மன்னர் முடிதாக்க—வின்றுந்
திருந்தடி புண்ணாகிச் செவ்வி யிலனே
பெருந்தண் ணுறந்தையார் கோ.

திறை செலுத்த மொய்த்து நிற்கும் மன்னரை நோக்கி, ‘இன்று செவ்வி இல்லை’ என வாயிற்காவலன் உரைப்பது.

விளக்கம்: நின்று ஈமின் - சிறிது பொறுத்துத் திறை தாருங்கள். மன்னீர் - மன்னர்களே. நெருநல் - நேற்று. திறைகொணர்ந்து முன் தந்த - கப்பத்தைக்கொண்டுவந்து முதலில் கொடுத்த. மன்னர் முடி தாக்க - (அந்த) மன்னர்களின் பொன்முடிகள் தாக்கினதால். திருந்து அடி புண்ணாகி - அழகிய கால் புண்பட்டு. திருந்து அடி - என்பதற்கு நல்லியல்பான பூங்குறி, வலைக்குறி முதலியன உள்ள அடிகள் என்றும் பொருள் கொள்ளலாம். இன்றும் செவ்வி இலனே - நேற்றுப் பின்பு வந்தவர்கட்குச் செவ்வியிலனாகி யிருந்தான்; அதுவே யன்றி இன்றும் செவ்வி யிலனாகியுள்ளான். இன்றும் - என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவியது. பெருந்தண் உறந்தையார் கோ - விலாசமான நீர்வளங்கொண்ட உறையூரில் வாழ்பவருக்கு அரசனாகிய சோழன். ‘பெருந்தண்’ என்பதற்குத் ‘தண்ணளியுடைய’ என்றும் பொருள் கொள்ளலாம்.

‘உறந்தைக் காவலன் தண்ணளியுடையவன் தான்; உங்களைக் காக்க வைக்க விரும்பான். ஆனால், திருந்தடி புண்ணாகிச் செவ்வியில்லாதவனாக இருக்கின்றானே! என்ன செய்வது?’ என்கின்றான்.

‘திருந்தடி புண்ணாகிச் செவ்வி இலனே
பெருந்தண் உறந்தையார் கோ’

என்ற அடிகளைத் திரும்பத் திரும்பப் பாடும்பொழுது, ‘இலனே’ என்பதில் தன் மன்னன் காலில் புண்பட்டதைப் பொறாமல் வருந்தும் வாயிற்காவலனின் மனநிலை புலனாகின்றது.

வசைபோன்ற புகழுரை கொண்ட பாடல் இது. ‘வளமான உறந்தைக்கு அதிபதிதான். ஆயினும், என்? காயம் காயந்தானே’ என்பது குறிப்பு. புகழுரை தொனிக்கும் இக்குறிப்பு ‘பெருந்தண் உறந்தையார் கோ’ என்ற ஈற்றடியில் அடங்கிக் கிடக்கின்றது. (3)

(பா - வே.) 1. நின்றன்மின்: நின்றம்மின்; 8. இன்று; 13 - 14. பெருந்தரை மரந்தையார்; 14. மரந்தையார்.

[61]

# யானையின் போர்த் திறன்

பண்டைக் காலத்தில் அரசர்கள் தாம் வசிக்கும் நகரைச் சுற்றிக் கனத்த மதிலை எழுப்பிக் கோட்டைகளை அமைத்து வந்தனர். பகைவர்கள் மதிலைக் கடந்து எளிதில் உள்ளே புகமுடியாது. மதிற் சுவர் பகைவர்களின் ஏணிக்கும் எட்டாது; ஆகவே ஏணியைக் கொண்டு ஏறிமதிலைக் கடத்தல் இயலாது. மிக அகன்ற அடிப்பரப்பை யுடையதால், பகைவர்கள் குடைந்தும் உள்ளே புக முடியாது. கல் லிட்டிகைகளாற் கட்டப்பெற்றமையால் அதனை எளிதில் குத்திக் குடையவும் இயலாது. இத்தகைய கோட்டைக்கு ஒரே ஒரு வாயில் உண்டு. அந்த வாயிலை உட்புறமாக ஒரு பெரிய மரக் கதவாலும், வெளிப்புறமாக ஈட்டிகளால் அமைந்த மற்றொரு இரும்புக் கதவாலும் அடைத்து வைப்பர். இதனால் கோட்டைக்குள்ளிருப்பவர்கட்கு நல்ல பாதுகாப்பு.

இத்தகைய பாதுகாப்பான கோட்டைக்குள் கிள்ளி என்ற சோழனின் பகையரசன் ஒருவன் வதிகின்றான். ஒருசமயம் கிள்ளிக்கும் இந்த அரசனுக்கும் போர் தொடங்குகின்றது. கிள்ளியினுடைய படைகள் கோட்டையை வளைத்துக் கொள்ளுகின்றன. அவனது போர் யானை ஒன்று சீற்றங்கொண்டு வேகமாகப் பாய்ந்து ஈட்டியாலான கதவுகளை ஒடுக்கி அதனை நிலைகுலையச் செய்து விடுகின்றது. பகைவர்களின் ஆற்றலை யானை சிறிதும் பொருட்படுத்தவில்லை. அது வேகமாகப் பாய்ந்து மதிற்கதவைக் குத்தித் தூக்கிவிடுகின்றது. கதவு யானையின் கொம்புகளில் சிக்கிக்கொள்ளுகின்றது. கதவினை உதறி எறியப் பார்க்கின்றது யானை; கதவு கழலவில்லை. இதனால் யானைக்கும் புதியதோர் ஆங்காரம் பிறந்து மாட்டிய கதவுடன் தும்பிக்கையை மேலே நீட்டிக் கொண்டு வேகமாக ஓடுகின்றது; அங்ஙனம் ஓடி சேனையின் நடுப்பகுதிக்கு வந்து விடுகின்றது. அதன் தோற்றம் குளிர்ந்த கடல் நடுவில் தோன்றும் பாய் கட்டிய மரக்கலத்தைப் போன்று காணப் படுகின்றது. யானை மரக்கலத்தைப் போன்றும், அதன் உயர்த்திய கை கூம்பு போன்றும், எயிற்கதவு பாய்மரம் போன்றும் தோற்ற மளிக்கின்றன.

இந் நிகழ்ச்சியைக் கிள்ளியின் வீரன் ஒருவன் அக் காட்சியைக் காணுத மற்ெருரு வீரனுக்குக் கூறும் முறையில் கவிஞர் தீட்டிய சொல்லோவியம் இது :

அயிற்கதவம் பாய்ந்துழக்கி யாற்றல்சான் மன்னர்
எயிற்கதவங் கோத்தெடுத்த கோட்டாற்—பனிக்கடலுட்
பாய்தோய்ந்த நாவாய்போற் றேன்றுமே யெங்கோமான்
காய்சினவேற் கிள்ளி களிறு.*

இது யானைமறம் இயம்புவது.

விளக்கம் : அயில் கதவம் - ஈட்டிகளால் செய்த கதவு. பாய்ந்து உழக்கி - பாய்ந்து அதனை நிலைகுலையச் செய்து. ஆற்றல் சால் மன்னர் - போரில் வல்ல பகையரசர்கள். எயில் கதவம் - மதிலொடு ஒட்டிய கோட்டை வாயிற் கதவை. கோத்தெடுத்த கோட்டால் - கொம்புகளால் தூக்கியுள்ள காரணமாக. பனிக்கடல் - குளிர்ந்த கடல். பாய் தோய்ந்த நாவாய்போல் - பாய் கட்டிய மரக்கலம்போல். எம் கோமான் - எங்கள் அரசன். காய்சினவேல் கிள்ளி - ஒளிவீசும் வேலேந்திய சோழன். களிறு - ஆண்யானை.

'யானை, சேனைக்கடலின் நடுவில் பாய் கட்டிய மரக்கலம் போல் விளங்கிற்று' என்று கூறி யானையின் போர்த்திறத்தை அழகான பாவத்தில் காட்டுகின்றது பாடல். இந்தப் பாடலைத் திரும்பத் திரும்பப் பாடினுல் கவிஞர் அனுபவித்ததை நாமும் அனுபவிக்கலாம். (4)

* இது, தொல்காப்பியப் பொருளதிகாரப் புறத்திணையியல் 31-ஆம் நூற்பாவின் நச்சினர்க்கினியர் உரையிலும், செய்யுளியல் 74-ஆம் நூற்பாவின் பேராசிரியர் உரையிலும் மேற்கோளாக எடுத்தாளப்பெற்றுள்ளது.

(பா - வே.) 3-4. ஆழித்தேர் குத்தி ; 9. பாய் செய்த ; 11. ருேன்றிற்றே ; 14. கோதை.

# யானையின் பெருமிதம்

சோழனின் செங்கோலாட்சி செவ்வனே நடைபெறுகின்றது. அவனது தோள்கள் கல் மலையையொத்துப் பருத்துத் திண்மையானவை. அவனது களிற்றியானை நிரைகளும் மதமும் கதமும் சிறந்து நிற்கின்றன. இந்நிலையில் யாதோ ஒரு காரணத்தால் பகையரசர்களுடன் போர் நிகழ்கின்றது.

கிள்ளியின் யானைப் படைகளும் மாற்றூர் நாட்டை நோக்கிப் புறப்படுகின்றன. அவனது யானைகள் பகைவரின் கொடி கட்டிய மதிலைத் தம் கொம்புகளால் இடித்துத் தொலைக்கின்றன. இச்செயலில் ஒரு யானையின் கொம்புகள் ஒடிந்து போகின்றன. இதனாலும் அந்த யானைக்குச் சீற்றம் தணியவில்லை. அது மதிலை அழித்ததுடன் நில்லாது கோட்டையினுள்ளும் புகுந்து பகை மன்னர்கள்மீது பாய்ந்து அவர்களைத் தளளி அவர்தம் முடிகளை இடறிக்கொண்டே செல்லுகின்றது. இதனால் அதனுடைய கால் நகங்களும் தேய்ந்துபோகின்றன.

சோழனின் படைகள் வாகை சூடி ஊர் திரும்புகின்றன. ஊரில் போர் வீரர்களின் மனைவியர் வழிமேல் விழி வைத்துத் தத்தக் கணவன்மாரின் வருகையை எதிர் நோக்கிக் காத்திருக்கின்றனர்; அவர்களது கவலையும் கலைந்து மறைகின்றது. அரசனும் அந்தப்புரத்திற்குச் சென்று தன் தேவிமாரின் கவலையைப் போக்குகின்றான். போரில் பெரும் பங்குகொண்டு கொம்புகள் முறிந்து கால் நகங்கள் தேய்ந்த யானை மட்டிலும் கூடத்தின் வெளிப்புறத்தில் நிற்கின்றது. இதனைக் கவிஞர் காண்கின்றார். இவ்வாறு சிந்திக்கின்றார் :

"அட பாவமே, போரில் பங்கு கொண்ட வீரர்கள் யாவரும் வீட்டையடைந்து இன்புற்றிருக்க, இஃது இங்கேநிற்கின்றதே. ஓகோ, கொம்பொடிந்து நகங்களும் தேய்ந்த நிலையில் பிடியானை கண்டால் தன்னை எளிமையாகக் கருதுமே என்று நாணித்தான் இங்ஙனம் நிற்கின்றது போலும் !"

இந்தச் சிந்தனை ஓர் அழகிய பாடலாக வடிவங் கொள்ளுகின்றது.

இனி, பாடலைப் பார்ப்போம் :

> கொடிமதில் பாய்ந்திற்ற கோடு மரசர்
> முடியிடறித் தேய்ந்த நகமும் — பிடிமுன்பு
> பொல்லாமை நாணிப் புறங்கடை நின்றதே
> கல்லார்தோட் கிள்ளி களிறு.

இது யானைமறம் கூறும் பாடல் ; யானையின் பெருமிதத்தைக் காட்டுவது.

விளக்கம் : கொடிமதில் - கொடி கட்டிய பகைவரின் கல் மதில்மேல்; பாய்ந்து இற்ற கோடும் - பாய்ந்து அது காரணமாக முறிந்த கொம்புகளும்; அரசர் முடி இடறித் தேய்ந்த நகமும் - போர்களத்தில் பகை வேந்தரின் முடிகளை இடறியதால் தேய்ந்துபோன நகங்களும்; பிடி முன்பு பொல்லாமை நாணி - இவை காரணமாகப் பெண்யானையின் முன்பு அழகழிந்து தோன்றும் பொல்லாமைக்கு வெட்கி; புறங்கடை நின்றதே - கூடத்திற்கு வெளியே நின்றது; கல்லார் தோள் கிள்ளி - கல்லையொத்த தோளினையுடைய சோழனது; களிறு - ஆண்யானை.

இயல்பாகப் புறங்கடையில் நிற்கும் களிற்றினைக் கவிஞர் தன் கருத்தினை ஏற்றிக்கூறுவது, தற்குறிப்பேற்ற அணி.

பெருமிதத்தையும் காதலையும் இழிவில் வைத்துச் சொல்லுவதில் நகைச்சுவை தோன்றுகின்றது. யானையின் பெருமிதத்தையும் சோழனது அழகினையும் ஒன்றுகப் பாராட்டுகின்றது இப் பாடல். (5)

[63]

# நால்வாயின் நான்குகால் பாய்ச்சல்

பண்டைக்காலத்தில் அடிக்கடிப் போர்கள் நடைபெற்றுக் கொண்டே இருக்கும். இக்காலத்தில் தரையில் நடக்கும் போர் களில் டாங்கிப்படை (Tank) பயன் பட்டுவருவதைப் போலவே, அக்காலத்தில் யானைப்படை பயன்பட்டு வந்தது. அக்காலத்தில் பெரும்பாலும் தற்காப்புபற்றியே போர் நிகழ்ந்ததால் மக்கள் அதனைப் பாராட்டி வந்தனர். போருக்குரிய யானையை மிக அதிகமாகப் பாராட்டி மகிழ்ந்தனர். இலக்கியங்களிலும் யானைப் போரைப்பற்றிக் கவிஞர்கள் சிறப்பாக வருணிக்கும் வழக்கத்தைக் காணலாம். போர் யானையின் நடை அவர்களது கண்ணையும் கவர்ந்தது ; கருத்தையும் ஈர்த்தது. கவிஞர் ஒருவர் சோழ வேந்தனது யானையின் வேகத்தைக் கண்டு அனுபவிக்கின்றார். கவிஞரின் கற்பனையுள்ளத்தில் நிகழும் யானையின் நடையைக் காண்போம்.

உறந்தையர் கோனின் யானை உறையூரில் நின்று ஒரு காலை ஒரே எட்டில் காஞ்சிபுரத்தில் வைக்கின்றது ; அதிலிருந்து அடுத்த அடியை வடக்கேயுள்ள உச்சயினி நகரத்தில் வைக்கின்றது. அதன் பிறகு அது தெற்கு நோக்கித் திரும்பிவிடுகின்றது. ஒரு காலை இலங்கையில் வைத்து மற்றொரு காலை உறையூரிலேயே வைக்கத் தூக்கிக்கொண்டு நிற்கின்றது.

சோழ நாட்டில் போர் தொடங்கிவிட்டால் வேந்தன் வடபுலத்தில் உச்சயினிவரை சென்று வென்று திரும்புவான்; பிறகு அவன் தெற்கே திரும்பி ஈழம்வரை சென்று வென்று திரும்புவது வழக்கம். இதைக் காணும் கவிஞர் சோழனின் வெற்றியை யானையின் நடையில் வைத்து ஒரு வீரன் மற்றொரு வீரனிடம் விளம்பும் பாணியில் காட்டுகின்றார்.

இனி, பாடலைக் காண்போம் :

கச்சி யொருகான் மிதியா வொருகாலால்
தத்துநீர்த் தண்ணுஞ்சை தான்மிதியாப்—பிற்றையும்
ஈழம் ஒருகான் மிதியா வருமேநங்
கோழியர்கோன் கிள்ளி களிறு.

இது யானைமறம் ; உறந்தைக் கோமானது களிற்றின் விரைந்த பாய்ச்சலை விளம்புவது.

விளக்கம் : கச்சி - காஞ்சிபுரம்; தத்தும் நீர்த்தாள் உஞ்சை - தாவிப் பாயும் நீர்வளம் மிக்க தன்மையுள்ள உச்சயினி; உஞ்சை - உச்சயினி; பிற்றையும் - மேலும்; ஈழம் - ஈழநாடு ; இலங்கை. மிதியா - மிதித்து; 'மிதியா' என வரும் மூன்றும் செய்யா எனும் வாய்பாட்டு வினையெச்சங்கள். கோழி யொன்று யானையைப் போரில் வென்றதென்றும், அங்ஙனம் அது வென்ற நிலத்தில் அமைக்கப்பெற்ற நகர்க்குக் கோழி என்பது பெயராயிற்று என்றும் கூறுவர் அடியார்க்கு நல்லார்.* கோழியர் கோன் - சோழன்; களிறு - ஆண் யானை.

கற்பனை செறிந்த பாடல். யானையின் கம்பீரமான கதி மனத் திரையில் மறையாமல் அப்படியே அமைந்து விடுகின்றது. (6)

(பா - வே) 13. கோழியர் கோக்; கோழியர் கோற்.

* சிலப்பதிகாரம் - நாடுகாண்காதை - அடி 248-இன் உரை.

# பழக்கமே காரணம்

பாவ்லோவ் (Pavlov) என்ற இரஷ்ய அறிஞர் செய்த சோதனையொன்று உலகப்புகழ்பெற்றது. அவர் நாய் ஒன்றற்கு நாள்தோறும் மணி யொலியினை எழுப்பி, அதன் பிறகு உணவு ஊட்டி வந்தார். இவ்வாறு உணவு வருவதற்கு முன்னர் மணி யொலியினைக் கேட்டுப் பழகிய நாய் மணி யொலிக்கும் உணவு என்ற பொருளையே கண்டுவிடுகின்றது. உணவு வரும்போது நாயின் வாயில் உமிழ் நீர் ஊறுதல், வயிற்றில் அகட்டு நீர் ஊறுதல் போன்ற செயல்கள் மணியொலி கேட்டவுடனேயே நிகழ்கின்றன. இந்த உண்மையை உலகிற்கு எடுத்துக் காட்டிய பாவ்லோவ் இச்செயலை ஆக்கநிலை ஏறிய மறிவினை (Conditioned reflex) என்று பெயரிட்டார். உளவியல் பயில்வோர் இத்தகைய மறிவினைகள் கற்றலுக்குத் துணை செய்கின்றன என்பதை நன்கு அறிவர்.

x x x

இதற்கு ஒப்பான ஒரு நிகழ்ச்சியை நமது கவிஞர் குறிப்பிடுகின்றார்.

கிள்ளியினது யானை போர்மேற் செல்லுகின்றது. அதனைத் தொடர்ந்து பருந்துக் கூட்டங்கள் வருகின்றன ; கழுகு இனங்கள் ஆரவாரிக்கின்றன ; காட்டிலுள்ள நரிகள் நாலாபக்கங்களிலும் அதனைத் தொடர்ந்து ஓடி ஒருவித பரபரப்பை உண்டாக்குகின்றன. இவற்றுடன் பேய்க்கூட்டங்களும் வந்து குழுமுகின்றன ; போர்க்களத்தில் இறந்தவர்களுடைய குடல்களை இழுத்து மாலையாக அணிந்து கொண்டு ஊன் உண்ட மகிழ்ச்சியினால் பேய்மகளிர் கூத்தாடுகின்றனர். அடிக்கடி யானை போர்மேற் செல்வதனால் இந்நிகழ்ச்சிகளும் அடிக்கடி நடைபெறுகின்றன. கழுகினங்கள் முதலியவற்றிற்கு இஃது ஒரு பழக்கமாகவே ஆய்விடுகின்றது.

சாதாரணமாகப் போர் ஒன்றுமின்றிச் சோழனது போர்யானை ஓர் ஊரிலிருந்து பிறிதோர் ஊருக்குச் செல்லும்போதும் மேற்குறிப்பிட்ட கழுகு முதலாயின உடன் செல்லத் தொடங்குகின்றன !

போர்வீரன் ஒருவன் மற்றொரு வீரனுக்குக் கூறும் முறையில் கவிஞர் பாடலை அமைத்துள்ளார்.

பாடல் இது;

பாற்றின மார்ப்பப் பருந்து வழிப்படர
நாற்றிசையு மோடி நரிகதிப்ப—வாற்ற
அலங்கலம் பேய்மகளி ராட வருமே
இலங்கிலைவேற் கிள்ளி களிறு.

இது யானை மறம்; யானையின் கொலைத்தொழிலைக் கூறுவது.

விளக்கம்: பாற்றினம்=பாறு+இனம்-கழுகுக் கூட்டம்; பாறு-கழுகு; ஆர்ப்ப-கூச்சலிட; ஆரவாரம் செய்ய. வழிபடர - பின்தொடர்ந்து பறந்துவர; நாற்றிசையும்-நான்கு பக்கமும்; நரிகதிப்ப-நரிகள் பரபரப்போடு துள்ளியோட: ஆற்றின் - நாட்டியத்துக்குரிய ஒழுங்கில்; அலங்கலம் பேய்மகளிர் ஆட - 'அலங்கலம்' என்ற ஒருவகை நடனத்தைப் பெண் பேய்கள் ஆட; ஆட - ஆடுவதற்குக் காரணமாக; இலங்கு இலைவேல் கிள்ளி களிறு - ஒளி விடும் வேல் ஏந்திய சோழனது யானை; களிறு - ஆண் (போர்) யானை.

கிள்ளியின் யானை போர்மேல் செல்லுங்கால் கழுகினமும் உடன் செல்லும். போரே இல்லாமல் சாதாரணமாக ஓரூரிலிருந்து மற்றோர் ஊருக்கு யானையை நடத்திக்கொண்டு போகும்போதும் கழுகினங்கள் உடன் செல்லுமாம். என்னே இப்போர் யானையின் மறம்! (7)

(பா - வே.) 4. வழிபடர; 8. ஆற்றல்; 10 பொய் மகளி.

[65]

# பேய்களின் விளையாட்டு

ஒருவரது வீரத்தையும் வெற்றி மேம்பாட்டையும் புலப்படுத்த வேண்டுமாயின் பகைவர்கள் பட்டொழிந்த போர்க்களச் சிறப்பை எடுத்துரைத்தல்வேண்டும். கேட்பவர் என்றும் நினைவிலிருத்தக்கூடிய சில நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டல்வேண்டும். கலிங்கத்துப் பரணி போன்ற போர்பாடும் நூல்களில் இத்தகைய மறக்கமுடியாத நிகழ்ச்சிகள் பல உள்ளன.

x x x

சோழன் மகன் போர்மேற் செல்லுகின்றான்; புலிக்குப் பிறந்தது பூனையாகப் போகுமா? மணிமுடியணிந்த மன்னரெல்லாம் போரில் இறந்து படுகின்றனர். போரும் முடிவு பெறுகின்றது. இரவு வருகின்றது. ஒரே இருட்டு; பேய்க்கூட்டங்கள் வந்து பிணங்களை வயிறார உண்டு விட்டு விளையாடத்தொடங்குகின்றன. உண்டு வயிறு நிறைந்துவிட்டால் சிலரைப் பொறுத்தமட்டில் உள்ளக் கவலை ஒழிந்து போகின்றதல்லவா? மாண்ட வீரர்களின் மண்டையோட்டினைக் கீறி அகலாகவும், அவர்களின் மூளையினை நெய்யாகவும், குடர்களைத் திரியாகவும் கொண்டு விளக்கீடுசெய்து விளையாடுகின்றன.

இக் காட்சியினைக் கவிஞர் தம் கற்பனையில் காண்கின்றார். ஒரு வீரன் மற்றொரு வீரனுக்குப் படுகளச் சிறப்பினைக் கூறுவதுபோல் பாடல் அவர் கற்பனையில் வடிவம் பெறுகின்றது.

இனி, பாடலைக் காண்போம்:

> முடித்தலை வெள்ளோட்டு மூளைநெய் யாகத்
> தடித்த குடர்திரியா மாட்டி—யெடுத்தெடுத்துப்
> பேஎய் விளக்கயரும் பெற்றித்தே செம்பியன்
> சேஎய் பொருத களம்.

---

(பா - வே.) 15. களத்து.

இது போருகளத்தின் நிலைமையைக் கூறுவது.

விளக்கம்: முடித்தலை வெள்ளோட்டு - மணிமுடியோடு கூடிய மண்டையோட்டில்; குடுமியோடு கூடிய மண்டையோட்டில் என்றும் கொள்ளலாம்; மூளை நெய்யாக - வெண்மையான இலுப்பை நெய்போல் மூளை கட்டியாக நிற்க; எடுத்து எடுத்துப்போய் விளக்கு அயரும் - பல இடங்களில் விளக்குகளை வைத்து விளையாடும்; பெற்றித்தே - தன்மையதாக இருக்கும் செம்பியன் சேய் - சோழனுடைய மகனை இளவரசன்; பொருத களம்-போர் செய்த களம்.

போர்க்கள நிகழ்ச்சி நம் மனத்தில் படிந்து பெருமிதம், அச்சம் போன்ற பாவங்களை எழச் செய்கின்றன. (8)

[66]

# ஊமன் தாலாட்டு

சோழன் ஆட்சிக்குக் கீழ்ப்பட்டிருந்த குறுநில மன்னன் ஒருவன் ஒரு சமயம் சோழனின் ஆணைக்கு அடங்கி நடக்கவில்லை. செம்பியனுக்கு அளவு கடந்த சீற்றம் பிறக்கின்றது; போர் மூளு கின்றது. சோழனது பெரும் படைகள் குறுநில மன்னனின் நகரைத் தாக்குகின்றன. சிற்றரசனும் ஊராரும் சென்ற இடம் தெரியாமல் ஓடிவிடுகின்றனர்.

மகளிர் யாவரும் ஊருக்குப் புறத்தேயுள்ள சோலை முதலிய இடங்களில் போய் மறைந்து விடுகின்றனர். சூல் கொண்ட மகளிரும் அவர்களுள் பலர். நள்ளிரவில் அவர்களுள் சிலர் கரு வுயிர்க்கின்றனர். அந்தக் குழவிகளை இலைச்சருகுகளின்மீது படுக்க வைக்கின்றனர். குழந்தைகளோ கத்துகின்றன. அவர்கள் என்ன செய்வார்கள், பாவம்? அச்சத்தினால் சொல்லாடியோ, தாலாட்டுப் பாட்டுப் பாடியோ அவர்களால் குழவிகளை உறங்கவைக்க முடிய வில்லை. அப்படியே வாய்திறவாது வாளா இருக்கின்றனர். அப் பொழுது நள்ளிரவு; கூகைகள் 'கூ, கூ' வென்று குழறுகின்றன. இவ் வொலி குழந்தைகட்குத் தாலாட்டுவது போலிருக்கின்றது. அந்த ஒலியைக் கேட்டுக்கொண்டே குழந்தைகள் கண்ணயர்கின்றன.

இக்காட்சியைக் கவிஞர் சிந்திக்கின்றார். அவரது சிந்தனை அழகான பாடலாக உருவெடுக்கின்றது. சோழ நாட்டு நங்கை யொருத்தி தன் தோழிக்குக் கூறுவதுபோல் பாடல் வடிவம் பெற்று விடுகின்றது.

இனி, பாடலைப் பார்ப்போம் :

> இரியல் மகளி ரிலைஞெமலு ளீன்ற
> வரியிளஞ் செங்காற் குழவி—யரையிரவின்
> ஊமன்பா ராட்ட வுறங்கிற்றே செம்பியன்றன்
> நாமம்பா ராட்டாதார் நாடு. *

இது பகைப்புலம் பழித்தல்; செம்பியன்சீரைப் பாராட்டாதாருடைய நாட்டின் நிலையைக் கூறுவது.

விளக்கம்: இரியல் மகளிர் - படையெடுத்த சேனைக்கு அஞ்சி நிலை கெட்டு ஓடி யொளித்த பெண்கள்; இலை ஞெமலுள் ஈன்ற - இலைச் சருகின்மீது ஈன்று வைத்த; வரியிளஞ் செங்காற் குழவி - வரிக்கோடுகள் (மடிப்புக்கள்) உள்ள சிவந்த காலையுடைய குழந்தை; அரையிரவில் - நடு இரவில்; ஊமன் - கூகை; கூகை கத்தியது குழந்தைக்குத் தாலாட்டுவது போலிருந்தது என்றவாறு; செம்பியன்தன் - சோழனது; நாமம் பாராட்டாத நாடு - அவன் பெயரைத் தக்க இடங்களில் பொறித்து வாழாத குறுநில மன்னரது நாட்டில்.

செம்பியனுக்கு அடங்கி நடவாத பகைப்புல மன்னர்களை அச்சுறுத்தும் பாவம் பாட்டில் அருமையாக அமைந்துள்ளது. 'ஊமன் பாராட்ட' என்பதில் அவலத்தினிடையே நகையும் பளீச்சென்று ஒளிவிடுகின்றது ! (9)

---

* இது யாப்பருங்கல விருத்தி ஒழிபியலில் பதின்மூன்றெழுத்தடி வெண்பாவுக்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளப்பெற்றுள்ளது.

இப்பாடலை 14-ஆம் பாடலுடன் ஒப்பிடுக.

# வெண் கொற்றக் குடையின் சிறப்பு

திருப்பதியில் திருவிழாக் காலங்களில் இறைவன் திருவுலாக் காட்சியின்பொழுது இறைவனுக்குக் குடை பிடிப்பர், அதைத் தவிர வேறு இரண்டு பெரிய குடைகளை தனித்தனியாக இருவர் சுமந்து கொண்டு திருவுலாவுக்கு முன்புறமாகச் செல்வர். குடை வெண் பட்டினால் வேயப்பட்டிருக்கும். குடையின் கைப்பிடியாகிய காம்பு பொன்னினால் போர்த்தப்பெற்றிருக்கும். குடையின் உச்சியில் தங்கத்தினால் செய்யப்பெற்ற கலசம் ஒன்று பொதியப்பெற்றிருக்கும். விரித்த நிலையில் குடையின் குறுக்களவு கிட்டத்தட்ட ஒன்றரை பாகம் (ஆறு முழம் அல்லது ஒன்பது அடி அளவு) வரையிலும் இருக்கலாம். இந்தக் குடை இறைவனின் அருளாட்சிக்கு ஒரு அடையாளமாகக் கருதப்பெற்று வருகின்றது இப்பூவுலகிலுள்ள எண்ணற்ற உயிர்கள் அவனது அருள் நிழலில் வாழ்ந்து வருவதற்கும், அவர்கள்மீது அவன் வற்றாத தண்ணளியைச் சுரந்து வருகின்றான் என்பதற்கும் இந்த வெண் கொற்றக் கொடை அறிகுறியாக அமைந்துள்ளது. வெண்கொற்றக் குடையுடன் வெளி வரும் இறைவனின் திருவுலா ஒரு கண் கொள்ளாக் காட்சியாக அமைந்து அதைக் கண்டோர் அனைவரையும் பக்திப் பெருக்கில் திளைக்கச் செய்யும்.

அந்தக் காலத்தில் அரசனுக்கும் இத்தகைய வெண் கொற்றக் குடை பிடிப்பது வழக்கமாக இருந்து வந்தது. ஒரு சமயம் கவிஞர் சோழன் வெண்கொற்றக் குடையின்கீழ் வீற்றிருக்கும் காட்சியைக் காண்கின்றார். அக்காட்சி அவர் உள்ளத்தைக் கவர்கின்றது. உடனே அவரது கற்பனை செயற்படத் தொடங்குகின்றது. மந்தரமலையே குடையின் காம்பாக அமைந்திருப்பதாகக் கருதுகின்றார் கவிஞர். விண்மீன்கள் ஒளிரும் நீலவானமே குடைக்குரிய கூடாரமாக அமைந்திருப்பதாக அவருடைய கற்பனையுள்ளம் எண்ணுகின்றது. முழு மதியமே குடையின்மீது பொற்கலசமாக அமைந்திருப்பதாக நினைக்

கின்றார் அவர். இத்தகைய குளிர்ச்சியூட்டும் சோழனது வெண் கொற்றக்குடையின்கீழ் பரந்து பட்ட உலகம் முழுவதும் வாழ்கின்றது என்று சிந்திக்கின்றார் கவிஞர். அவரது சிந்தனை அழகான ஒரு பாடலாக வடிவங்கொள்ளுகின்றது.

இனி, பாடலைப் பார்ப்போம் :

மந்தரங் காம்பா மணிவிசும் போலையாத்
திங்க ளதற்கோர் திலதமா—எங்கணும்
முற்றுநீர் வைய முழுதும் நிழற்றுமே
கொற்றப்போர்க் கிள்ளி குடை.*

இது புகழ்; கிள்ளியினுடைய குடையின் தண்ணளி கூறுவது.

விளக்கம் : மந்தரம் - மந்தர மலை. காம்பா - கைப்பிடிக்கோலாகவும்; மணி விசும்பு - விண் மீன்கள் ஒளிரும் நீலவானம்; ஓலையா - குடைக்குரிய கூடாரமாகவும்; திங்கள்-சந்திரன்; திலதமா-நடு வட்டமாகவும்; எங்கணும்- எங்கும் பரந்ததாய்; முற்று நீர் வையம் - நான்கு பக்கங்களிலும் கடலால் சூழப்பட்ட உலகம்; நிழற்றும் - நிழலைச் செய்யும்; கொற்றப்போர் - வெற்றியைத் தரும் போர் செய்யும்.

குடையின்கீழ் இருப்பவர்கட்கு மழையாலும் வெயிலாலும் எப்படித் தொந்தரவு இல்லையோ அதுபோலச் செம்பியன் ஆட்சிக்குள் அடங்கியவர்கட்கும் எவ்வித நலிவும் இராது என்பது குறிப்பு. (10)

(பா - வே.) 13. கொற்றப் பேர்க்.

* தொல்காப்பியம் - பொருளதிகாரம் புறத்திணையியல் 35-ஆம் நூற் பாவின் உரையில் நச்சினார்க்கினியர் காட்டும் மேற்கோள்.

[68]

# பிறந்தநாள் கொண்டாட்டம்

சோழன் பிறந்த நாள் இரேவதி. அவனுடைய நகரிலுள்ளவர்கள் அந்த நாளை மிகச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். மன்னன் பிறந்த நாளைக் கொண்டாடுவதில் மக்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. பொங்கல் திருநாளுக்கு வீடுகளைத் துப்புரவு செய்து வெள்ளையடிப்பது போலவும், தெருக்களைச் சுத்தம் செய்து புதுமணல் பரப்புவது போலவும் அரசன் பிறந்தநாட் கொண்டாட்டத்திற்காகவும் தலை நகரைத் தூய்மை செய்கின்றனர் மக்கள். 'மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்' என்று புறநானூற்றுப் புலவன் கூறியுள்ளான் அல்லவா? அக்காலத்தில் மாநிலம் புரக்கும் மாண்புடைய மன்னனை மக்கள் உயிரெனவே கருதியிருந்தனர்.

பிறந்த நாளை முன்னிட்டுக் கிள்ளி தூயவுள்ளம் படைத்தவருக்குப் பெரிய பெரிய பரிசில்களை வழங்குகின்றான். ஆலய வழிபாடு செய்யும் அந்தணர் ஆவையும் பொன்னையும் பரிசாகப் பெற்றுச் செல்லுகின்றனர். நாவீறு படைத்த புலவர் பெருமக்கள் மந்தர மலையைப்போன்ற களிறுகளைப் பரிசிலாகப் பெற்று அவற்றின்மீது இவர்ந்து தத்தம் வீடு நோக்கிப் போகின்றனர். இக் காட்சிகளையெல்லாம் மக்கள் கண்டு களிக்கின்றனர். 'இந்த மாபெருந் திருநாளன்று—எல்லோரும் இன்புற்றிருக்கும் நேரத்தில்—சிலம்பிகள் தம் கூடுகளை இழந்து தவிப்பதற்கு யாது காரணமோ?'—என்று கழிவிரக்கம் கொள்ளுகின்றான் ஒருவன்.

திருவிழாக் காட்சியைக் கண்டான் ஒருவன் கூற்றில் வைத்து அக் காட்சியைத் தம் அழகிய பாடலால் நமக்குக் காட்டுகின்றார் கவிஞர்.

' இனி, பாடலைக்காண்போம் :

> அந்தண ராவொடு பொன்பெற்ருர் நாவலர்
> மந்தரம்போன் மாண்ட களிறூர்ந்தா—ரெந்தை
> இலங்கிலைவேற் கிள்ளி யிரேவதிநா ளென்னே
> சிலம்பிதன் கூடிழந்த வாறு.*

இது புகழ்; இரேவதித் திருநாள் இயம்பியது.

விளக்கம் : அந்தணர் - ஆலய வழிபாடுசெய்யும் குருக்கள்; புரோகிதர். ஆ - பசு; பொன் - பொற்காசுகள்; நாவலர் - புலவர்கள்; மந்தரம் - மந்தரமலை; மாண்ட - மாட்சிமை பொருந்திய ; உயர்ந்து பருத்த என்றலுமாம். களிறு - ஆண் யானை; எந்தை - எங்கள் வேந்தன்; இலங்கு இலைவேல்- ஒளி வீசுகின்ற இலைபோன்ற வேலை ஏந்திய; இரேவதி - சோழனது பிறந்த நட்சத்திரம்; சிலம்பி - சிலந்திப் பூச்சி; என்னே - என்ன காரணத்தினலோ.

வீடுகளைத் துப்புரவு செய்யுங்கால் சிலந்திப் பூச்சிகட்கு இடையூறு ஏற்பட்டு வருந்தினல் வருந்தலாமேயன்றி மற்று அங்குள்ள மக்களுக்கு யாதொரு துன்பமுமில்லை என்பது குறிப்பு.

பாடலின் முதல் மூன்று அடிகளில் மகிழ்ச்சி கொந்தளிக்க, நான்காவது அடியில் சிறிது அவலம் தட்டுப்படுகின்றது. ' என்னே, சிலம்பிதன் கூடிழந்தவாறு' என்பதை ஈனக்குரலில் சொல்லிப் பார்த்தால் இது புலனகும். (11)

(பா - வே.) 12. ளென்ன.

* இது தொல். பொருள். புறத்திணையியல் 36-ஆம் நூற்பாவின் வெள்ளணிக்கு நச்சினர்க்கினியர் காட்டும் மேற்கோள்.

[69]

# பெண் பழி பெரும் பழி

சோழன் உலா வருங்கால் அவனைக் கண்ணாரக் கண்டுகளிக்க வேண்டுமென்று எண்ணுகின்றனர் காரிகையார். அவன்மீது கழி பெருங் காதல்கொண்டு கைவளை சோரக் கவின் அழிகின்றனர். இதனைக் கண்ணுறும் அவர்களுடைய அன்னையர் அவர்களை உள் வீட்டில் வைத்துக் கதவுகளையும் அடைத்துவிடுகின்றனர்.

சிறிது நேரங்கழித்து வந்த செவிலித்தாயர்கள் இச்செயலை அறிகின்றனர். அடைபட்டுக் கிடக்கும் அரிவையரின் ஏக்கத்தைக் காண்கின்றனர். அவர்களுள் செவிலியொருத்தி மற்றவர்களை நோக்கி இவ்வாறு பேசுகின்றாள்: "அடைபட்டிருக்கும் மகளிர் அவலக் கவலையால் சாக்காட்டு நிலையை எய்திவிட்டால், அதனால் வரும் ஏதம் பெரிது; மிகப் பெரிது. பெண்பழி பெரும்பழியாகி விடும். முதலில் கதவுகளைத் திறந்துவிடுங்கள். உறைந்தையர்கோனை அவர்கள் கண்ணாரக் கண்டு களிக்கட்டும்! அதனால் தீமைகள் விளையுமாயின் அவற்றைப் போக்கும் வழிகளைப் பின்னர்ப் பார்த்துக்கொள்வோம்" என்கின்றாள்.

மகளிரின் மனநிலையை நன்கு அறிந்த கவிஞர் அதற்கு ஒரு கற்பனை வடிவம் அமைத்து அழகிய சொற்படமாக்கித் தருகின்றார்.

இதோ அப்படம்:

திறந்திடுமின் றீயவை பிற்காண்டும் மாதர்
இறந்து படிற்பெரிதா மேதம்—உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு. *

---

* இது தொல் - பொருள். செய்யுளியல் 210-ஆம் நூற்பாவிற்குப் பேராசிரியர் உரையில் காட்டிய மேற்கோள்.

இது கைக்கிளை; அடைபட்டிருக்கும் மகளிரைத் திறந்து விடுமாறு கூறுவது.

விளக்கம்: திறந்திடுமின் - உடனே திறந்துவிடுங்கள்; தீயவை பிற்காண்டும் - தீமைகள் வந்தால், அவற்றைப் போக்கும் வழிகளைப் பின்னர்ப் பார்த்துக்கொள்வோம்; ஏதம்தான் என்னும் - பெண்பழி எப்படி வரும் என்பதை யார் கண்டார்கள்; ஏதம் - பழி; உறந்தையர்கோன் - உறையூருக்கு அரசன்; தண் ஆர மார்பின் - குளிர்ந்த பூமாலையணிந்த மார்பையுடைய; தமிழர்பெருமானை - தமிழ்க் கவிஞர் சொந்தமாகப் பாராட்டும் சோழனை.

அம்பலும் அலரும் தூற்றப்பெறும் தீமையினும் பெண்பழி பெரும்பழி என்பது கருத்து. 'திறந்திடுமின்' என்று படபடப்பாய் சொல்லுவதில் செவிலியின் இரக்க உணர்வு வெளிப்படுகின்றது; 'கண்ணாரக் காணக் கதவு' என்ற இறுதியடியைத் தயங்கிச் சொல்லுவதிலும் இதனைக் காணலாம்.

இது பூட்டுவிற் பொருள்கோள். இப்பாடலில் 'திறந்திடுமின்' என்ற சொல் 'கதவு' என்பதனோடு பொருள் கொண்டமையால் பூட்டுவிற் பொருள்கோளாயிற்று. (12)

[70]

# நீயும் ஒரு பெண்ணோ?

காதல் உணர்ச்சி கங்குகரையின்றிக் கடந்து விடுமேயானால் அவ்வுணர்ச்சிவயப்பட்டவர்களைத் தம்மையும் அறியாமல் ஏதேதோ பேசத்தூண்டிவிடும். நங்கையொருத்தி சோழன்மீது காதல் கொள்ளு கின்றாள். காதல் வெறி எல்லை கடந்து சென்று விடுகின்றது. மாலை நேரத்தில் சோழன் உலாவரும் பொழுதெல்லாம் அவன்மீது வைத்த கண் வாங்காது அவனையே பார்த்துக்கொண்டிருப்பாள். கண் ணளவு கொள்ளும் காமம் செம்பாகத்தினும் பெரிதல்லவா? இப்படி எத்தனையோ நாட்கள் அவனைப் பார்த்திருந்தும் அவளது மனம் நிறைவு கொள்ளவில்லை.

ஒரு நாள் மாலையில் வழக்கம்போல் வளவன் பிடியானையின்மீது உலா வருகின்றான். அந்த யானை சற்று விரைவாக நடந்து செல்லு கின்றது. அதனால் வளவனின் எழில் நலத்தை நன்றாகப் பார்க்க முடியாமல் துடிதுடிக்கின்றாள் அக் காரிகை. அதன்மீது சினங் கொண்டு அதனை இவ்வாறு பழித்துக் கூறுகின்றாள் :

"பிடியே, நீலப்பூக்களாலான மாலையை யணிந்த சோழன் நின் மேல் ஏறியிருப்பவும் அவனைச் சிறிதும் பொருட்படுத்தாமல் 'திடு திடு' வென விரைவாக நடந்து செல்கின்றாயே. நீ பெண்பால் தானே! சிறிதளவாவது நாணம் வேண்டாவா? குளத்திலே மலர்ந் துள்ள நீல மலர்களின் பரப்பினைக் கண்டாற்போன்ற தோற்றமுள்ள கார்மேகங்கள் தவழும் பொழில் சூழ்ந்த காவிரி நாட்டுப் பெண் தன்மை நின்பால் காணப்பெறவில்லையே. தமிழ் நாட்டுப் பெண்கள் கொண்டானையும் ஏவல் கொள்பவர்கள்; அவர்கள் 'பெய்!' என்றால் மழை பெய்யுமே! அத்தகைய கற்பின் பெருமையை உணராது நாண மற்றுச் செல்லும் நீயும் ஒரு பெண்ணோ?" என்கின்றாள்.

பெண்ணின் ஒருதலைக் காமத்திற்கு வடிவந் தந்த கவிஞரின் சொல்லோவியம் இது:

நீணீலத் தார்வளவ னின்மேலா னாகவும்
நாணின்மை யின்றி நடத்தியா—னீணீலங்
கண்டன்ன கொண்டல் வருங்கா விரிநாட்டுப்
பெண்டன்மை யில்லை பிடி.*

இது கைக்கிளை; தலைவி பிடியை நோக்கிக் கூறுவது.

விளக்கம்: நீள் நீலத்தார் வளவன் - வளமான நீண்ட இதழ் கொண்ட குவளைமலர் மாலை யணிந்த சோழன். நீலம் - நீலப்பூ; குவளைமலர். தார் - மாலை. வளவன் - சோழன். நின்மேலான் ஆகவும் - உன்மீது ஏறியிருந்தும். நாணின்மை - நாணினது தன்மை. நடத்தியால் - (நாடோறும்) நடந்து வருகின்றாய். நீள் நீலங் கண்டன்ன கொண்டல் - நீண்ட குவளை மலரின் பரப்பினைக்கண்டாற்போன்ற தோற்றமுள்ள கார்மேகங்கள். பெண்தன்மை இல்லை - பெண்ணுக்கான உணர்ச்சி இல்லை. பிடி - பெண்யானை.

ஒரு பெண்ணுக்குக் காதல் வெறியில் எந்தப் பொருளையும் தன்னைப்போலவே ஒரு பெண்ணாகக் கருதிப் பேசத் தோன்றும் என்ற உண்மையை விளக்கும் இப்பாடல் உயர்ந்த கவிதை நெறியைச் சார்ந்தது. பாடலைப் பன்முறைப் படித்து அனுபவித்தால் இது புலனாகும். (13)

(பா - வே.) 1. நீணிலத்; 5. நாணிமை; 9 - 12. கண்டன்மை கொண்டலருங் காவிரிநீர் நாட்டுப்.

* இப்பாடலை 27-ஆம் பாடலுடன் ஒப்பிடுக.

[71]

# சாளரத்தில் கெண்டைகள்!

'பாடலம்' என்பது சோழனுடைய குதிரையின் பெயர். ஒரு நாள் சோழன் அதன்மீது ஏறி உலா வருகின்றான். கையில் சுடரொளி பரப்பும் வேலுடன் அவன் குதிரையின்மீது வீற்றிருக்கும் தோற்றம் பார்த்தவர்களுடைய கண்ணையும் கருத்தையும் கவர்கின்றது; ஈர்க்கின்றது.

அவன் உலா வருவதைத் தெருவின் இருபுறங்களிலும் உள்ள வீடுகளின் சாளரங்களின் வழியாகப் பருவமங்கையர் காண்கின்றனர். சாளரங்களில் மெல்லிய வலைகள் பின்னப்பெற்றுள்ளன. குதிரையோ விரைந்து நடைபோட்டுச் செல்லுகின்றது. உலாக் காட்சியைக் காணும் அம் மங்கையர் உள்ளத்தில் ஒருவித கொந்தளிப்பு ஏற்படு கின்றது. சிலர் காதல் நோக்குடன் அவனைக் காண்கின்றனர். சிலர் அவனை மயக்கத்துடன் வெறித்துப் பார்க்கின்றனர். சிலர் கடைக் கண்ணால் நோக்குகின்றனர். சிலர் அவனை விழுங்கிவிடுவதுபோல் உற்று நோக்குகின்றனர். சிலர் அவனுடைய அழகில் ஈடுபட்டு இப் படியும் அப்படியுமாகத் தத்தளித்துத் தடுமாறிப் பார்க்கின்றனர்.

இங்ஙனம் அவனைப் பார்க்கும் மகளிரின் கண்கள் பல்வேறு விதமாகப் பிறழ்ந்து பிறழ்ந்து நோக்குகின்றன. ஆனால், வளவன் அவர்களை ஏறெடுத்தும் பார்க்கவில்லை. அவன் கம்பீரமாகப் போய்க் கொண்டே இருக்கின்றான். வழியில் செல்வோர் அவன் செல்லும் நெறியையும் நங்கையர் பல்வேறு விதமாக அவனை நோக்குவதையும் காண்கின்றனர். "தொடர்ந்து வளவனையே நோக்கி நிற்கும் இவ் வனிதையரின் கண்கள் செம்படவர்களின் நீலவலையில் அகப்பட்ட கெண்டை மீன்கள் பிறழும் தோற்றத்தையல்லவா ஒத்திருக் கின்றது?" என்று பேசிச் செல்லுகின்றனர். 'சாளரத்திலும் கெண்டைகள் உள்ளனவே!' என்று வியப்படைகின்றனர்.

இனி, பாடலைப் பார்ப்போம் :

> சுடரிலைவேற் சோழன்றன் பாடல மேறிப்
> படர்தந்தான் பைந்தொடியார் காணத்—தொடர்புடைய
> நீல வலையிற் கயல்போற் பிறழுமே
> சாலேக வாயிருறுங் கண்.*

இது கைக்கிளை; பலகணி வழியாகப் பார்த்திபனை பார்க்கும் பைந்தொடியார் நிலையினைப் பகர்வது.

விளக்கம் : சுடர் இலைவேல் சோழன் - ஒளிவீசும் இலைபோன்ற வடிவுடைய வேலைத் தாங்கும் சோழன். பாடலம்-சோழனது குதிரையின் பெயர்; வெண்சிவப்பு நிறம் அமைந்த குதிரை. படர்தந்தான் - உலாப் போந்தான். பைந்தொடியார் காண - மகளிர் காண்பதற்கு வாய்ப்பாக. கயல் - கெண்டை மீன். பிறழுமே - பிறழ்ந்து நோக்கும். சாலேகம் - சாளரம்; சன்னல்.

கண்களின் அரிய பாவங்களை எடுத்துக்காட்டும் பாணியில் 'கண்' என்ற சொல் ஈற்றடியின் இறுதிச் சொல்லாக அமைந்து நிற்கின்றது. (4)

---

* நீள்எ முத்தொடர் வாயிலில் குழையொடு நெகிழ்ந்த
ஆள கத்திறே(டு) அரமியத் தலத்தினும் அலர்ந்த;
வாள்அ ரத்தவேல் வண்டொடு கெண்டைகள் மயங்கச்
சாள ரத்தினும் பூத்தன தாமரை மலர்கள்.

—கம்ப - அயோத் - மந்திரப் - செய் 56.

என்று வாயில்களிலும் உபரிக்கைகளிலும் சாளரங்களிலும் தாமரை மலர்கள் பூத்திருக்கும் செய்தி கூறும் கம்பராமாயணப் பாடலை இஃதுடன் ஒப்பிட்டு அனுபவித்து மகிழ்க.

[72]

# இது நீதியா?

ஆத்திமாலை சூடிய சோழன் உலா வருகின்றான். நங்கை யொருத்தி அவன்மீது காதலாகிக் கசிந்துருகுகின்றாள். ஊணும் உறக்கமுமின்றி உடல் மெலிகின்றாள். தோளும் மெலிகின்றது. காதல் வெறியில் தோழியிடம் இவ்வாறு பேசுகின்றாள் :

"தோழி, வளவன் உலாப்போந்தான். அவன் எழில் நலத்தை என்னுடைய கண்கள் கண்டு களித்தன. என்னுடைய நெஞ்சமும் அவனோடு கலந்து அனுபவித்தது; ஒன்றிவிட்டது என்று கூடச் சொல்லலம். எண்ணிப் பார்த்தால் இவை இரண்டுமே குற்றம் இழைத்தாகக் கொள்ளலாம். என்னுடைய தோள்களோ ஒரு குற்ற மும் புரியவில்லை. குற்றத்திற்காகத் தண்டனை விதிப்பது முறை. ஆனால் குற்றம் செய்யாதவர்களை ஒறுப்பது முறையாகுமா? ஒரு குற்றமும் அறியாத எனது தோளைத் தண்டிப்பது நீதியா? உறந்தையார் கோனுக்கு முறையல்லாதனவெல்லாம் முறையாக அமையும் போலும்! வல்லான் வகுத்ததே வாய்க்காலல்லவா?" என்கின்றாள்.

தலைவியின் உணர்ச்சிக்குக் கவிஞர் இவ்வாறு வடிவம் அமைக் கின்றார் :

> கண்டன வுண்கண் கலந்தன நன்னெஞ்சந்
> தண்டப் படுவ தடமென்றோள்—கண்டா
> யுலாஅ மறுகி லுறையூர் வளவற்
> கெலாஅ முறைகிடந்த வாறு.

இது கைக்கிளை : தலைவி தோழிக்கு உரைப்பது.

விளக்கம் : உண்கண் - மையுண்ட கண். கலந்தன - குலவியது, தண்டப்படுவது - தண்டிக்கப்படுவது. தடமென் தோள் - வளமான மெல்லிய தோள்கள். தோள்கள் அனுபவித்தனவா ? அதுதான் இல்லை. கண்டாய் - பார்த்தாயா தோழி ! உலாஅ மறுகில் உறையூர் - உலா போவதற்கு அகலமாக அமைந்த தெருக்களையுடைய உறையூரை ஆளும் வளவற்கு - சோழனைப் பொறுத்தமட்டிலும். எலாஅம் முறை கிடந்தவாறு - எவ்வளவு முறை பிறழ்ந்தாலும், எல்லாம் நீதிதான் !

தோள்கள் மெலிவுற்றன என்பதை அரசன் தண்டனைக்கு உள்ளாக்கினான் என்று எண்ணுவதில் குழந்தைகளின் பாவனை ஆற்றலும் பருவமங்கையின் காதல் வெறியும் ஒன்றாகக் கலந்து கிடக்கின்றன ! (15)

[73]

# ஆறில் ஒன்றுதானே!

பனிதையொருத்தி வளவனைக் காண்கின்றாள். அவன்மீது காதல் கொள்ளுகின்றாள். காதல் வெறியாக முற்றிவிடுகின்றது. இதன் காரணமாக நெஞ்சம் நிலைகுலைந்து போய்விடுகின்றது. அதனால் நாணமும் பறந்து போய்விடுகின்றது. பெண்களுக்குரிய எழிலும் பெயர்ந்து போய்விடுகின்றது. எல்லாம் இழந்தும் அவளுக்குப் பயன் ஒன்றும் விளையவில்லை.

தோழி வருகின்றாள். அவளிடம் தனது மனக்குறையைச் சொல்லித் தீர்க்கின்றாள்; "அழகிய தோழியே, உலகில் அரசர்கள் குடிகளிடமிருந்து கொள்ளும் பொருள் ஆறில் ஒரு கூறுதானே! அங்ஙன மிருப்பவும் நமது மன்னன்—காவிரிப் புனல் பாயும் சோணாட்டு வேந்தன்—என்னுடைய நெஞ்சம், நாணம், எழில்நலம்—இவை எல்லாவற்றையும் கவர்ந்துகொண்டான். இஃது என்னே! முறை செலுத்தும் மன்னனே இங்ஙனம் முறைகேடாக நடந்து கொண்டானே. இஃது அரச நீதிக்கும் புறம்பானதன்றோ" என்கின்றாள்.

நங்கையின் மனநிலையைக் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது:

> என்னெஞ்சு நாணு நலனு மிவையெல்லாம்
> மன்னன் புனனாடன் வெளவினு—னென்னே
> யரவக லல்குலா யாறிலொன் றன்றே
> புரவலர் கொள்ளும் பொருள்.

• கலி-85 இன் உரை காண்க.

இது கைக்கிளை ; தலைவி தோழியிடம் உரைப்பது.

**விளக்கம் :** புனல் நாடன் - காவிரியின் புனல் பாயும் சோழ நாட்டு அரசன். வௌவினான் - கைப்பற்றிக்கொண்டான்; கொள்ளைகொண்டு போனான். என்னே - என்ன வியப்பு. அரவு அகல் அல்குலாய் - பாம்பினது அகன்ற படத்தின் புறத்தைப் போலத் தொடைகளின் மேற்புறம் அழகாக அமையப்பெற்ற தோழியே. அல்குல் - தொடைக்குமேலும் இடைக்குக் கீழு முள்ள பகுதி. அதன் மேற்பகுதி சுருங்குதலின் - சிறுத்தலின் - ' அல்குல் ' எனப்பட்டது. அல்குதல்-சுருங்குதல். தொடைக்கும் இடைக்கும் நடுவிலுள்ள பகுதியின் பின் பக்கமே - முதுகிற்குக் கீழுள்ள பகுதியே - அல்குல் எனப் படும். * அல்குல் - பெண்குறி என்றது பிற்கால வழக்கு. ஆறில் ஒன்று அன்றோ புரவலர் கொள்ளும் பொருள் - மன்னனுக்குச் சேரவேண்டிய வரிப் பணம் ஆறில் ஒரு பகுதிதானே. புரவலர் - அரசர்.

ஆத்திரமும் அதிலிருந்து எழுந்த நகையும் கலந்த பாவம் பாட்டில் நிழலிடுகின்றது. வெறிகொண்ட நிலையில் முரணான பாவங்கள் கலத்தல் இயல்புதானே. (16)

# இரண்டு குற்றவாளிகள்

காதல் உணர்ச்சி மீறிவிட்டால் அது மனத்தை நிலைகுலைத்து விடும். சில சமயம் அது குழந்தை மனப்பான்மையையும் உண்டாக்கி விடும். சிறு குழந்தைகள் காரணமின்றிக் குறை கூறுவதைப் போலவே காதல் வயப்பட்டவர்களும் காரணமின்றிக் குறைகூறுவர்.

சோழன்மீது காதல்கொண்ட ஒருத்தி தன் தோழியிடம் இவ்வாறு கூறுகின்றாள்: "தோழியே, சோழனைக் கண்ணால் பார்த்தாவது என் மனவேதனையைத் தீர்த்துக்கொள்ளலாம் என நினைந்தேன். அவனும் நேற்றிரவு கனவில் என்னிடம் வந்தான். அப்பொழுது கண்கள் மூடிக்கொண்டமையால் அவனைப் பார்க்க முடியாது போயிற்று. தெருவில் அவன் உலா வருங்கால் விழித்துக்கொண்டு தான் இருந்தேன். ஆனால் அப்பொழுது நாணம் முன் வந்து அவனைக் காண வொட்டாது விலக்கிவிட்டது. வளவனுடைய செங்கோலாட்சியில் கண்ணும் நாணமும் செங்கோலுக்குக் குற்றம் இழைக்கும் முறையில் தகாத செயல்களில் இறங்குகின்றன. இதைக் கண்டிப்பவர் யார்?" என்கின்றாள்.

தலைவியின் மனநிலையைக் காட்டும் கவிஞரது பாடல் இது:

> கனவினுட் காண்கொடா கண்ணுங் கலந்த
> நனவினுண் முன்விலக்கு நாணு—மினவங்கம்
> பொங்கோதம் போழும் புகாஅர்ப் பெருமானார்
> செங்கோல் வடுப்படுப்பச் சென்று. *

(பா - வே.) 2. காண்டொறுங்.

* இது தொல், பொருள் - செய்யுளியல் 160-ஆம் நூற்பாவின் உரையில் பேராசிரியர் காட்டியுள்ள மேற்கோள்.

இப் பாடலை 47-ஆம் பாடலுடன் ஒப்பிடுக.

இது கைக்கிளை ; தலைவி தோழியிடம் சொல்வது.

விளக்கம் : கனவினுள் காண்கொடா கண்ணும் - சொப்பனத்தில் கண் மூடியிருப்பதால் காதலனைக் காணமுடியவில்லை. கலந்த நனவினுள் - வாய்ப்பாக விழிப்பில் நேராக வந்தபொழுது. முன் விலக்கும் நாணும் - நாணம் முன்பதாக வந்து முகத்தைத் திருப்பிவிடுகின்றது. இனவங்கம் — கூட்டம் கூட்டமாகச் செல்லும் மரக்கலங்கள். ஓதம் - அலைகளை. போழும் - கிழித்தோடும். புகாஅர்ப் பெருமானார் - புகார் நகரத்து அரசனது. செங் கோல் வடுப்படுப்பச் சென்று – நீதி முறைமைக்கு மாறாகப்போய்.

சோழன் ஏதோ செங்கோலாட்சிதான் நடத்துகின்றான். அந்த ஆட்சியில் இந்தக் கண்ணும் நாணமும் தகாத செயல்களை நடத்தித் தான் வருகின்றன ! (17)

[75]

# ஆடையிழந்த அணங்கு!

உலா வந்த சோழன்மீது காதல் கொள்ளுகின்ருள் காரிகை யொருத்தி. காதல் முற்றிச் செயலழிந்து கிடக்கின்ருள். இந்த நிலையில் ஒரு நாள் கனவு காண்கின்ருள். கனவில் சோழன் தன் ஆடையைப் பிடித்து இழுப்பதுபோன்றும், ஆடையைக் கவர்ந்து இவளைத் தவிக்க விடுவதுபோன்றும் செயல்கள் நடைபெறுகின்றன. தன்னை இங்ஙனம் அவமானப்படுத்திய காவலனைத் தானும் அவமானப் படுத்தவேண்டும் என்று கருதுகின்ருள் காரிகை. தன் நெஞ்சினிடம் இவ்வாறு சொல்லிக்கொள்ளுகின்ருள் :

"நெஞ்சே, ஆண் யானைகளையும் பெண் யானைகளையும் பரிசிற் பொருள்களாகத் தரும் வள்ளன்மையுடையவன் வளவன்; குளிர்ந்த மணம் வீசும் மலர்மாலைகளை அணிந்தவன். அத்தகைய பெருந் தகை (!) என் கனவில் வந்து எனது ஆடைகளைக் கவர்ந்துகொண்டு ஓடிப்போயினன். இஃது அவனது செங்கோன்மைக்கு அடுக்குமா? இனி, அவனை நான் சும்மா விடப்போவதில்லை. நாளை இத்தெருவில் அவன் உலாவருங்கால் இந்த முறைகேடான செயலை அவனது பரி வாரங்களும் அறியும்படி சந்திசிரிக்க வைத்து விடுகின்றேன்! கனவில் என்னைத் தனிமையில் பீடழித்த காவலனை நனவில் பலர் முன்னிலையில் பீடழித்து விடுகின்றேன், பார்!" என்கின்ருள்.

நங்கையின் உணர்ச்சி நிலைக்குக் கவிஞர் தந்த சொல்வடிவம் இது :

> தானைகொண் டோடுவ தாயிற்றன் செங்கோன்மை
> சேனை யறியக் கிளவேனே—யானை
> பிடிவீசும் வண்டடக்கைப் பெய்தண்டார்க் கிள்ளி
> நெடுவீதி நேர்பட்ட போது.

(பா. வே.) 2. டோடும

இது கைக்கிளை; தலைவி நெஞ்சொடு கிளப்பது; தோழியிடம் சொல்லுவதூஉமாம்.

விளக்கம்: தானை கொண்டு ஓடுவதாயின் - ஆடையைக் கவர்ந்து கொண்டு அரசன் ஓடுவானாயின். தானை - ஆடை. தன் செங்கோன்மை - செங்கோலாட்சி புரியும் அவனுடைய இந்த அழகிய முறையை. சேனை அறியக் கிளவேனோ - உலாவருங்கால் அணிவகுத்துச் செல்லும் அவனுடைய பரிவாரங்கள் அறியும்படி விளம்பரப்படுத்தி விடுகின்றேன். யானை, பிடி வீசும் வண்தடக்கை - ஆண் யானைகளையும் பெண் யானைகளையும் வரையாது வழங்கும் வள்ளன்மையுள்ள நீண்ட கை; அதாவது முழந்தாள் அளவும் நீண்ட கை என்றவாறு. செய்தண்தார் - மலர் செறிந்த குளிர்ந்த மாலையணிந்த, கிள்ளி-சோழன். நெடுவீதி நேர்பட்டபோது - பெரிய தெருவில் எதிர்ப்பட்டபோது.

ஆத்திரம், நகை, இழிவரல் இவையெல்லாம் கலந்த பாவமுடைய பாடல். (18)

# எங்ஙனம் காவலன்?

வழக்கம்போல் வளவன் உலா வருகின்றான்; வனப்புடைய வனிதை யொருத்தி அவனைக் காண்கின்றாள்; அவன்பால் மால் கொண்டு மனம் உருகுகின்றாள். அவனையே நினைந்து நினைந்து ஏங்குகின்றாள். இந்நிலையில் கோவலர் ஊதும் குழலோசை அவளது செவியில் விழுகின்றது. மாலை நேரம் வந்ததைக் காட்டும் அடையாளங்களுள் இடைச் சிறுவர்கள் ஊதும் புல்லாங்குழல் ஓசையும் ஒன்று. அஃது அவளது காதலுணர்ச்சியைக் கொழுந்துவிட்டெரியச் செய்கின்றது. பிரிந்தாரை வருத்துவதும் சேர்ந்தாரைக் களிப்பிப்பதும் அல்லவா இசையின் செயல்? இதனை நன்கு உணர்ந்துதான் வள்ளுவப் பெருந்தகையும்,

> அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
> குழல்போலும் கொல்லும் படை. *

என்று அதன் வலிமையை எடுத்துரைத்துள்ளார். ஆதலால் அவ்வோசை அவளுக்கு அளவற்ற துன்பத்தை விளைவிக்கின்றது. அதனால் மிகவும் வாடுகின்றாள். வாடிய நிலையில் தனக்குள்ளேயே இவ்வாறு குறைபட்டுக்கொள்ளுகின்றாள் :

"நெஞ்சமே, தெளிவான தடாகத்தில் பூத்த நறுமலர் மாலையணிந்த சென்னி என்னும் இளவளவனை மண்ணுலகக் காவலன் என்று மக்கள் யாவரும் மார்தட்டிப் புகழ்கின்றனரே. உண்மையாக அவன் மண்ணுலகினைக் காப்பவனாக இருந்தால், அவன் என்னிடம் வந்து இக்குழலோசை எனக்குத் துன்பம் தராதவாறு காக்க வேண்டும். அல்லது குழலூதாது கோவலரையாவது தடுத்திருக்க வேண்டும். ஒன்றையும் செய்கின்றானில்லையே. இத்தகைய கொடியவனை யல்லவா உலகம் காவலன் என்று கதறுகின்றது! பார்த்திபன் என்று பள்ளு பாடுகின்றது! இஃது என்ன அறியாமை!" என்கின்றாள்.

* குறள்—1228

மங்கையின் மனக் குமுறலுக்கு ஒரு வடிவம் தந்து கவிஞர் புனைந்த சொல்லோவியம் இது :

> தெண்ணீர் நறுமலர்த்தார்ச் சென்னி யிளவளவன்
> மண்ணகங் காவலனே யென்பரால்—மண்ணகங்
> காவலனே யானக்காற் காவானோ மாலைவாய்க்
> கோவலர்வாய் வைத்த குழல்.

இது கைக்கிளை ; தலைவி நெஞ்சொடு கூறுவது.

விளக்கம் : தெண்ணீர் நறுமலர்த்தார் - தெளிந்த நீர் நிலைகளில் மலர்ந்த செங்கழுநீர்ப் பூக்களை மாலையாகத் தொடுத்துச் சூடிய. சென்னி இளவளவன் - சென்னி என்று பாராட்டப்பெறுகின்ற இளவரசனாகிய சோழன். வளவன் - சோழன். சென்னி என்பது, சோழர்குடிச் சிறப்புப் பெயர்களுள் ஒன்று. மண்ணகம் - மண்ணுலகம். காவலன் - காக்கின்றவன் ; அரசன். காவானோ - கட்டளை பிறப்பித்துத் தடுக்கமாட்டானோ. மாலைக்கண்-மாலைப்பொழுதில். கோவலர் வாய் வைத்த குழல்-ஆயச்சிறுவர்கள் வாயில் வைத்து ஊதுகின்ற புல்லாங்குழலை. குழல் என்பது இங்கு குழலின் இசையைக் குறிக்கும் ஆகுபெயர்ப் பொருளில் வந்தது.

உண்மைப் பாங்கும் இரக்கப் பாங்கும் கலந்த பாடல். இவற்றுடன் நகைச்சுவைப் பண்பும் பாட்டின் நிலையை உயர்த்துகின்றது. கவிதையனுபவம் நல்கும் அரிய பாடல் இது. (19)

[77]

# வேறுசான்றும் வேண்டுமா?

சோழன் பாடலம் என்ற குதிரையின்மீது ஏறி உலா வருகின்றான். அவனை ஒரு நங்கை காண்கின்றாள்; கழிபெருங்காதல் கொள்ளுகின்றாள். அவனை நினைந்து நினைந்து உருகுகின்றாள்; உள்ளம் அழிகின்றாள். வீட்டில் பல இடங்களில் உட்கார்ந்து பார்க்கின்றாள். ஆங்காங்குள்ள படுக்கைகளில் படுத்தும் பார்க்கின்றாள். ஒரு வழியிலும் அவளது மனம் அமைதி பெறவில்லை.

உணர்ச்சிவச மிழந்த அவளது செயல்களினால் கையிலுள்ள வளையல்கள் எப்படியோ கழன்று விழுந்து எங்கேயோ தொலைந்து போகின்றன. இதை அவள் உணரவில்லை. அங்குமிங்கும் அவற்றைத் தேடுகின்றாள்; அவை அகப்படவில்லை. இந்நிலையில் சிலர் சோழ மன்னனைச் செங்கோல் வேந்தன் என்று புகழ்கின்றனர்! முறை செய்து காப்பாற்றும் மன்னவன் என்று பள்ளு பாடிப் பாராட்டுகின்றனர். இவற்றைக் கேட்கும் அவளுக்கு எரிச்சல் உண்டாகின்றது. காதல் வெறியில் தோழியிடம் இவ்வாறு பேசுகின்றாள்:

"தோழியே, மதயானைகள் வருவதற்கு முன்னே, 'யானை வருகின்றது; தூர விலகி நில்லுங்கள்!' என்று பறையறைவோர் எச்சரிக்கை தருகின்றனர். அதற்குப் பிறகு மதயானைகள் வருகின்றன. அத்தகைய யானைப்படைகளையுடையவன் சோழன்; நன்றாக அசையும் தொங்கல் மாலையினையும் உடையவன். அவனை எல்லோரும் முறை வழுவா நெறியில் நின்றொழுகுபவன் என்று வாயாரப் புகழ்கின்றனர். என்ன முறை செய்கின்றான்? என்னுடைய நெஞ்சம், நாணம், எழில் நலன், கைவளை இவையனைத்தையும் கவர்ந்து பெரிய முறைகேடான செயலையல்லவா செய்துவிட்டான்? அந்த முறைகேட்டினை என் கைவளையல்களே பறை சாற்றுமே. வேறு சான்றும் வேண்டுமோ?" என்கின்றாள்.

தலைவியின் காதல் உணர்ச்சிக்கு வடிவம் கொடுத்த கவிஞரின் சொல்லோவியம் இது :

அறைபறை யானை யலங்குதார்க் கிள்ளி
முறைசெயு மென்பராற் றோழி—யிறையிறந்த
வங்கோ லணிவளையே சொல்லாதோ: மற்றவன்
செங்கோன்மை சென்றின்ற வாறு.

இது கைக்கிளை; தலைவி தோழிக்குச் செப்புவது.

*விளக்கம்* : அறைபறையானை - 'எல்லோரும் விலகுங்கள்!' என்று எச்சரிக்கை தரும் முறையில் பறையறைவிக்கப்பட்டு வெளியே வரும் மதயானை. அலங்குதார்க் கிள்ளி - அங்குமிங்கும் அசைகின்ற மாலையணிந்த சோழன். முறை செய்யும் என்பரால் - நீதி செலுத்துகின்றான் என்று புகழ்வர் இறை இறந்த - முன்கையை விட்டுப்போன, அங்கோல் அணிவளை - நெளிவு வேலைப்பாடு அமைந்த அழகிய வளையல்களே. சொல்லாதோ - நன்றாகச் சொல்லி விடாவோ. வேறு சான்றும் வேண்டுமா? மற்றவன் செங்கோன்மை சென்றின்ற ஆறு-அந்தச் சோழனின் செங்கோன்மை செவ்விதாக நிலைபெற்ற நெறியை.

காதல் வெறியில் வஞ்சப்புகழ்ச்சியும் எழும் ; கிண்டலும் எழும். இந்த பாவம் பாடலில் அமைந்திருப்பதைக் கவனிக்கவேண்டும். பாடலைத் திரும்பத் திரும்பப் பாடினால் இது பாடலினின்றும் புறப்படுவது புலனாகும். (20)

(பா - வே.) 41. செங்கின்ற

# பாவம் ஒரு பக்கம்—பழி ஒரு பக்கம்

தேரை என்பது தேங்காயைப் பற்றும் ஒருவித நோய்; தேங்காய்க்குள் உள்ள சத்துப் பகுதியை யெல்லாம் தின்றுவிடும் நோயாகும் இது. இஃது ஒரு வகையான காளான் போன்றது. தேங்காயை வாங்கி உடைப்போம்; உள்ளே ஒன்றும் இராது! வெறும் ஓடு மட்டிலுமே காணப்படும். இத்தகைய தேங்காயைத் 'தேரையோடி' என்று வழங்குவர். இது மருவி 'தேரோடி' என்று வழங்கி வருகின்றது. ஆனால், மக்கள் தரையிலுள்ள தேரைதான் தேங்காய்க்குள் நுழைந்து அதன் உள்ளீட்டைத் தின்று விட்டதாக நம்புகின்றனர். பழி எப்படியோ தேரையின்மீது விழுந்து விட்டது. பாவம் ஒரு பக்கம், பழி ஒரு பக்கந்தானே, இவ்வுலகில்?

x x x

வளவன்பால் மனம் போக்குகின்றாள் வனிதை யொருத்தி. சதா அவன் நினைவாகவே இருக்கின்றாள். ஊணும் உறக்கமும் இன்றி வாடுகின்றாள். அக்கம் பக்கத்திலுள்ளவர்களோ வெறும் வாயை மெல்லும் பேர்வழிகள்! அவர்கட்கு அவல் கிடைத்தால் சொல்லவும் வேணடுமா? இவளது நிலையைக் கண்டு ''சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி, மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி, மறுகிற் பெண்டிர் அம்பலும்''* அலரும் தூற்றத் தொடங்குகின்றனர். இதைக் கண்ட அன்னையும் அவளைச் சிறுகோல் கொண்டு அடித்துத் துன்புறுத்துகின்றாள். வளவனுக்கும் தனக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்பதை எப்படி மெய்ப்பிப்பது? வீண் பழியால் தொல்லைப்படுகின்றாள். தெங்குண்ட தேரையின் கதைதான் இவளது கதையும். ஒரு சமயம் தன்னிடம் வந்த தன் ஆருயிர்த் தோழியிடம் தன் நிலையை இவ்வாறு உரைக்கின்றாள்:

''தோழியே, அன்னை என்னைக் கோல்கொண்டு துன்புறுத்துகின்றாள். அயலவரும் பழிச் சொற்களால் என்னைத் தாக்குகின்றனர். அகத்திலும் தொல்லை; புறத்தேயும் தொல்லை. புறத்தே படும் தொல்லை

* நற்றிணை—149.

உள்ளத்தைத் துன்புறுத்துகின்றது. அகத்தே பெறும் தொல்லை உடலை வருத்துகின்றது. தேரை தேங்காயை உண்ணாமலேயே பழி சுமக்கின்ற தன்றோ? அங்ஙனமே யானும் வளவனை அணையாமலேயே பழி சுமக்கின்றேன். அடிக்கட்டும், தூற்றட்டும்; அது பற்றிக் கவலை இல்லை. சோழனை அணைந்தேன் என்று இருந்தால் போதும்! அஃது இல்லையே!!" என்கின்றாள்.

நங்கையின் மனநிலையைக் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது:

அன்னையுங் கோல்கொண் டலைக்கு மயலாரு
மென்னை யழியுஞ்சொற் சொல்லுவர்—நுண்ணிலைய
தெங்குண்ட தேரை படுவழிப் பட்டேன்யான்
திண்டேர் வளவன் றிறத்து.

இது கைக்கிளை; தலைவி தோழிக்கு உரைப்பது.

**விளக்கம்:** அலைக்கும் - அடித்துத் துன்புறுத்துக்கின்றாள். அழியுஞ் சொல் - வருந்தும்படியான அவர் மொழி; பழிச் சொல். நுண்ணிலைய தெங்கு உண்ட - நுண்மையான தேங்காயை உண்ட. இளநீர்ப் பருவத்திலேயே தேங்காயைத் தேரை நோய் பற்றும் என்றும், பருப்பு முதிரமுதிர அந்நோய் பருப்பினை அரித்துத் தின்று விடும் என்றும், ஒரு தென்னையில் தேரை விழத் தொடங்கி விட்டால் அந்த மரம் உள்ளளவும் அது காய்க்கின்ற காய்களெல்லாம் தேரையோடிகளாகவே இருக்கும் என்றும் தென்னை வளர்ப்போர் நம்புகின்றனர். நுண்மை-சிறுமை. தேரை படுவழிப் பட்டேன் யான்-யாதொரு தொடர்பு மில்லாத தேரைக்குப் பழிவந்தது போல, எனக்கும் வந்தது - 'தேரையார் செவ்விளநீர் உண்ணார் பழி சுமப்பர்' * என்புழிப்போல. திண்தேர் வளவன் திறத்து - வலிய தேரின்மீது உலா வரும் சோழன் காரணமாக.

"தேரைக்குப் பழி தேங்காய் காரணமாக ஏற்பட்டது; அஃது எனக்குத் தேர்மீது உலாவருவானே சோழன், அந்த மகானுபாவன் காரணமாக ஏற்பட்டது!" என்பது தலைவியின் குறிப்பு. இந்த அருமையான பாவத்தைப் பாவலர் பாவடிவில் காட்டி விட்டார். பாடலைப் பன்முறைப் படித்துத் துய்க்க வேண்டும். (21)

* தமிழ் நாவலர் சரிதம்—74.

# கண் குளிரக் காணேன்!

வளவன்மீது காதலாகிக் கசிந்துருகி நிற்கின்றாள் வனிதை யொருத்தி. உலா வரும்பொழுதெல்லாம் அவனைக் கண்டு அனுபவிப்பாள். ஆனால் நாணம் வந்து தடுப்பதனால் அவனை நன்கு உற்று நோக்கி அனுபவிக்கும் வாய்ப்பினைப் பெறுவதில்லை. தோழி இதனை நன்கு அறிவாள். ஒரு நாள் அவள் 'நேற்று நீ நின் தலைவனைக் கண்ணாரப் பருகினையோ?' என வினவுகின்றாள். அன்றுதான் தலைவி கற்பனை இன்பத்தில் திளைத்திருந்தாள். அந்த எக்களிப்பில் தோழியிடம் பேசுகின்றாள் :

"வளவன் இன்பந்துய்க்க என்பால் வந்தான். அவனைக் கண் குளிரக் காணும் வாய்ப்பே எனக்குக் கிட்டவில்லை. புலவி நிகழ்ந்த காலத்தில் யான் அவனைச் செயிர்த்துச் சினந்து நோக்கவில்லை; அப்பொழுது அவனுக்கு முகங்காட்டி நிற்காமல் வேறு பக்கமாகத் திரும்பிக்கொண்டேன். அவன் என்னை நெருங்கித் தழுவின காலத்தில் நாணத்தினால் தலைகவிழ்த்து அவனைக் காணாது கீழ்நோக்கி நின்றேன். அவன் என்னைப் புணர்ந்த காலத்தில் இன்பக் களிப்பில் புலன்கள் யாவும் மயங்கி நின்ற காரணத்தால் அவனைப் பார்க்க முடியவில்லை; விழித்திருந்தும் அவனைக் காண முடியாது போய் விட்டது. இங்ஙனம் மண்ணாளும் செங்கோன்முறை வழுவாத வளவனைப் புலவியும் நாணமும் கலவியும் கண்ணாரக் காணமுடியாது செய்து விட்டன. என் செய்வேன்?" என்கின்றாள்.

பாவனை யுலகில் தலைவி பெற்ற எக்களிப்பைக் கவிஞர் தீட்டும் சொல்லோவியம் இது :

> புலவி புறங்கொடுப்பன் புல்லிடினு ணிற்பன்
> கலவி களிமயங்கிக் காணே—னிலவியசீர்
> மண்ணாளுஞ் செங்கோன் வளவனை யானிதன்றே
> கண்ணாரக் கண்டறியா வாறு.

இது கைக்கிளை : தலைவி தோழியிடம் கூறுவது.

விளக்கம் : புலவி - ஊடல். புறங்கொடுப்பன் - அவனைப் பார்க்காது வேறு பக்கம் திரும்பிக்கொண்டு முதுகு காட்டி நிற்பேன். புல்லிடின் - தழுவினால். நாண் நிற்பன் - நாணி முகம் கவிழ்ந்து நிற்பேன். கலவி - கூடல்; புணர்தல். களி மயங்கி - இன்பத்திலே திளைத்து மயங்கி. நிலவிய சீர் - நிலையாக வளங்கொண்ட. மண் ஆளும் - சோழ மண்டலத்தைப் புரக்கும். செங்கோல் வளவனை - செங்கோன்மை வழுவாத சோழனை. கண்ணார - கண்குளிர.

மங்கை ஓர் எக்களிப்பான வெறியினால் 'வளவனைக் கண்ணாரக் கண்டறியேன்' என்று உண்மையான பாவத்துடன்தான் கூறுகின்றாள். அதைக் கேட்கும் நமக்குத்தான் நகைப்பும் திகைப்பும் கலந்த பாவம் ஏற்படுகின்றது!

[80]

# நாரையுடன் நங்கை

தமிழ் இலக்கியங்களில் காதற் கவிதைகட்குக் குறைவில்லை. காதல் உணர்ச்சியை மேம்போக்காக எடுத்துரைத்தால், அது சிறந்த காதற் கவிதை யாகாது. மேனாட்டுக் கவிதைகளில் பெரும்பாலானவை இந்த வகையைச் சேர்ந்தவை. பெருங் கவிஞர்கள் காதல் காரணமாக எழுந்த ஒரு வெறியைக் கண்டு வியப்பெய்தி அந்த வெறியிலிருந்தே கவிதையை மலரச் செய்வர். * இலக்கியங்களில் காதல் உணர்ச்சியை அனுபவிப்பதற்கு உள்ளத் தூய்மை வேண்டும்; நமது மனத்தில் தேங்கிக் கிடக்கும் கேவலமான காம வெறியாகிய சிந்தனையுடன் இத்தகைய பாடல்களைச் சுவைக்கப் புகுவது அவற்றை இகழ்வதோடொக்கும்.

x x x

உறையூருக்கு வடபால் சிறிது தூரத்தில் அமைந்துள்ள சிற்றூர் ஒன்றிலுள்ள நங்கை யொருத்தி சோழன்பால் மனத்தைப் பறிகொடுக்கின்றாள். அவன்பால் கொண்ட காதல் கரை கடந்து பெருகுகின்றது. ஒரு நாள் தன் ஊரிலுள்ள குளத்திற்கு நீராடப் போகின்றாள் அந்நங்கை. அப்பொழுது வடதிசையிலிருந்து பறந்து வந்த நாரை யொன்று குளத்திலிறங்குகின்றது. அது சிறிது நேரத்தில் தெற்கேயுள்ள உறந்தைமாநகருக்குச் செல்லக்கூடும் என்று எண்ணுகின்றாள் அந் நங்கை. யார் மூலமாவது தூது போக்க வேண்டும் என்று நினைத்திருந்த அவளுக்கு நாரை வந்தது நல்லதாய்ப் போயிற்று. தன் குறையை அதன்மூலம் சொல்லியனுப்ப நினைக்கின்றாள். காதல்வெறி அவளை இவ்வாறு பேசச் செய்கின்றது:

"சிவந்த கால்களையுடைய இள நாரையே, உன் கால்மேல் என் கைகளை வைத்து வணங்கிக் கேட்டுக் கொள்ளுகின்றேன். நீ தென்பால் உள்ள உறையூருக்குப் போனால், சோழனிடத்து யான் உற்ற நோயைச் சொல்லி வருவாயா ? அங்குச் சென்றால் காவிரிக்

* பாரதியின் கண்ணன் பாட்டு, குயில் பாட்டு, ஆழ்வாராதிகள், நாயன்மார்களின் பக்திப் பாடல்கள் இவ்வகையைச் சார்ந்தவை.

கரையருகில் உராய்ந்து உராய்ந்து விழுகின்ற மீனை மிகுதியாகப் பிடித்துத் தின்னலாம். உனக்கும் பயன் உண்டு. சோழனும் காவிரிக் கரைக்கு நீராட வருவான். அவ்வமயம் என் குறையையும் நீ அவனிடம் கூறுதல் எளிது. செய்வாயா ?" என்கின்றாள்.

காரிகையின் காதல் துடிப்பைக் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது:

> செங்கான் மடநாராய் தென்னுறந்தை சேறியே
> னின்கான்மேல் வைப்பனென் கையிரண்டும்—நன்பாற்
> கரையுரிஞ்சி மீன்பிறழுங் காவிரிநீர் நாடற்
> குறையாயோ யானுற்ற நோய்.

இது கைக்கிளை ; நங்கை நாரையை நோக்கிக் கூறுவது. *

*விளக்கம்:* செங்கால் - சிவந்த கால்களையுடைய. மட நாராய் - இளமையான நாரையே. தென் உறந்தை சேறியேல் - தென்பாலுள்ள உறையூருக்குச் செல்வாயாயின். நின்கால் மேல் வைப்பன் என் கையிரண்டும் - நின் காலைத் தொட்டு வணங்குவேன். நன்பால் - மருத நிலம் ; காவிரி தான் செல்லும் இடத்தை யெல்லாம் நன்பாலாக்கும் என்பது குறிப்பு. கரை உரிஞ்சி மீன் பிறழும் - கரையின் மீது உராய்ந்து உராய்ந்து ஏறிய மீன் மறுபடியும் நீரில் விழுந்து விடுகின்ற. காவிரிநீர் நாடற்கு - சோழனுக்கு. யான் உற்ற நோய் - எனக்கு நேர்ந்துள்ள காதல் நோயை.

காதலுற்ற பெண் தோழியைப் பார்த்துப் பேசினாள் என்று கவிஞர் கூறுவதில் காதல் கடுவேகம் கொள்ளுகின்றது. காதலும் சோகமும் கலந்த பாவம் கவிதையில் கவினுற அமைந்து கிடக்கின்றது. 'உரையாயோ யான் உற்ற நோய்' என்ற இறுதியடியைப் பல தடவைப் பாடிப் பார்த்தால் இது வெளிப்படுவது தெளிவாகும்.

நாயன்மார் ஆழ்வாராதிகளின் பாடல்களிலும், கலம்பகம் தூது போன்ற பிரபந்தங்களிலும் இத்தகைய தூதுப் பாடல்களைக் காணலாம். (23)

* உயிர் இல்லாத பொருளை உயிர் உள்ளனபோலவும், உணர்வு இல்லாத பொருள்களை உணர்வு உடையனபோலவும், பேசாதவற்றைப் பேசுவனபோலவும் கவிஞர்கள் அமைத்தலைத் தொல்காப்பியரும் குறிப்பிடுகின்றார் (தொல். பொருள் - பொருளியல் நூற். 2). இது பிற்காலத் 'தூது இலக்கியங்கட்குக்' கருவாக அமைந்தது.

[81]

# அன்னையின் அன்பு இவ்வளவுதானா?

சின்னஞ் சிறுவயதில், மகளிர் மழலைச் சொற்களால் பெற்றோர்களை மகிழ்வூட்டி வரும் பருவத்தில், தாய்மார் அவர்களிடம் கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவர். விளையாட்டாக எத்தனையோ செய்திகளைப் பேசிக் களிப்பர். அப் பருவத்தில் தாய்மாரோ பாட்டிமாரோ அவர்களிடம் பேசுவது வியப்பாகவும் வேடிக்கையாகவும் இருக்கும். ஓர் இளவரசரின் படத்தைக் காட்டி, "கண்மணியே, இந்த ராஜாவை உனக்குக் கட்டி வைப்போமோ ?" என்று பாட்டியோ அன்னையோ கேட்பதை நாம் அறிவோம். குழந்தையும் அமிழ்தத்தையும் வெல்லும் மழலை மொழியில் 'ஊ . . . ம்' என்று அதற்குப் பொருளறியாமல் ஒப்புக்கொள்ளும். இந்த விதமான வேடிக்கைச் செயல்கள் சதா நடந்து கொண்டே இருக்கும். இதில் அன்னைமார்கட்குச் சிறியதளவேனும் சலிப்பே இருப்பதில்லை. இவையாவும் குழந்தையின் அறியாப் பருவத்தில் நிகழும் வேடிக்கை நிகழ்ச்சிகளாகும்.

x x x

ஒரு சமயம் கோழிக் கோமான் உலா வந்து கொண்டிருப்பதை மங்கை யொருத்தி காண்கின்றாள் ; அவன்மீது மால் கொள்ளுகின்றாள். சதா அவனையே நினைந்து நினைந்து உள்ளம் உருகி நிற்கின்றாள். ஊணும் உறக்கமும் சரியாக இல்லாததால் அவளது உடலில் பெரு மாற்றம் காணப்படுகின்றது. அவளுடைய அன்னை தன் மகளின் நிலையைக் கண்ணுறுகின்றாள் ; கவலை கொள்ளுகின்றாள். உடனே அவள் மகளிடம் வந்து "இனிமேல் நீ வீட்டை விட்டு வெளியே தலை நீட்டக் கூடாது !" என்று கடுமையான எச்சரிக்கை தருகின்றாள். என்ன செய்வாள் மகள் ? மிக்க ஆற்றாமையால் அவள் இவ்வாறு தன் நெஞ்சுடன் சொல்லிக் கொள்ளுகின்றாள்.

"நெஞ்சமே, யான் மழலைமொழி பேசும் பருவத்தில் உறந்தையர் கோனைக் கணவனாகப் பெறுவாயாக !" என்று சொன்னாள் அன்னை. அப்படிச் சொன்னதெல்லாம்போய் இப்பொழுது, 'அவனைப்பாராதே ;

நினைக்கவும் செய்யாதே; மறந்துவிடு!' என்றெல்லாம் சொல்லுகின்றாளே. இஃது என்ன ஆச்சரியம்? பாலை நிலத்தில் உள்ள கானல் நீர் விலங்கினங்கட்குத் தண்ணீர்போல் காட்சி அளித்து அவை தன்னை நோக்கி வருங்கால் வெட்ட வெளியாகத் தோன்றி மயக்கின நிலையைப்போல் அல்லவா இருக்கின்றது இவளது செயல்? என்னே அன்னையின் அன்புடைமை!" என்கின்றாள்.

மங்கையின் மனநிலையைக் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது:

குதலைப் பருவத்தே கோழிக்கோ மானை
வதுவை பெறுகென்ற வன்னை—யதுபோய்த்
விளைந்தவா வின்று வியன்கானல் வெண்டேர்த்
துளங்குநீர் மாமருட்டி யற்று.

இது கைக்கிளை; தலைவி நெஞ்சொடு சொல்லுவது.

விளக்கம்: குதலைப் பருவம் - மழலைச்சொற்கள் பேசும் பருவம்; இளமைப் பருவம். கோழிக் கோமான் - உறையூர் மன்னனாகிய சோழன். வதுவை - திருமணம். அதுபோய் - அப்படியெல்லாம் சொல்லும் நிலை மாறி. விளைந்தவா இன்று - இப்பொழுது சோழனைக் கண்ணால் காணவும் கூடாது என்று சொல்லும்படியான தன்மையுடையவளாக மாறின நிலைமை. வியன் கானல் வெண் தேர் துளங்கு நீர் - அகன்ற பாலைவனத்தில் ஒளியாக அசைகின்ற கானல் நீர், வெண் தேர் - பேய்த் தேர்; கானல் நீர். துளங்கு நீர் - அலையடிப்பதாகத் தோன்றும் நீர்ப்பரப்பு. மா மருட்டியற்று - மான் முதலிய விலங்குகளை ஏமாற்றியது போன்றது. மா - விலங்கு.

அறியாப் பருவத்தில் நடைபெறும் பொருளில்லாத விளையாட்டு காதலுடன் பிணைந்து அரியதோர் உணர்ச்சி பாவத்துடன் மிளிர்கின்றது இப்பாடலில். பாடலைப் பன்முறை இசையூட்டிப் பாடினால் இப் பாவம் தட்டுப்படுவதை அறியலாம். (26)

(பா - வே.) 14. மான்மருட்டி.

# நான் சொன்னதைக் கேட்டால்தானே?

அக்கால வழக்கப்படி மன்னன் சில சமயம் தெரு வழியாக உலா வருவது வழக்கம். மன்னனைக் காணும் மக்கள் மழையைக் கண்ட பயிர்கள் போலவும், தாய்முகம் காணும் குழந்தைகள் போலவும் மகிழ்ச்சி அடைவர். இந்த முறையில் சோழன் ஒரு நாள் உலா வருகின்றான். அவன் அணிந்துள்ள ஆத்திமாலை இப்படியும் அப்படியுமாக அசைந்து கவர்ச்சியினைத் தருகின்றது. அவனுடைய தோள்களோ மாற்றாரையெல்லாம் கொன்று வெற்றிப்பொலிவுடன் திகழ்கின்றன. இத்தகைய தோற்றத்துடன் அவன் பரியின்மீது ஏறி வருகின்றான். நகர் மக்கள் யாவரும் தத்தம் வீட்டைவிட்டு வெளியே வந்து அவனைக் கண்டு களித்து வணக்கம் செலுத்துகின்றனர்.

பருவப் பெண் ஒருத்தி வளவனைக் காணச் செல்லுகின்றாள். அவளுடைய செவிலித்தாய், "எங்கே போகின்றாய்? வீட்டுக்குள் செல்!" என்று குறுக்கிட்டுத் தடுத்தும் அதற்குச் சிறிதும் செவி சாய்க்காமல் கூட்டத்துடன் சென்று வளவனைக் காண்கின்றாள். அவனது தோற்றப் பொலிவு இவளது நெஞ்சத்தைக் கவர்கின்றது; அவன்மீது கழிபெருங் காதல் கொள்ளுகின்றாள். அன்றுமுதல் அவள் சரியாக உண்பதும் இல்லை; உறங்குவதும் இல்லை. உடல் வாடிவிடுகின்றது; உடலின்மீது பசலையும் படர்கின்றது. எழிலும் எங்கோ சென்று மறைந்துவிடுகின்றது. இந்த நிலையைக் கண்ட செவிலி இவ்வாறு தன் நெஞ்சொடு சொல்லிச் சலிப்படைகின்றாள்:

"நெஞ்சமே, அப்பொழுதே நான் எவ்வளவோ சொல்லித் தடுத்துப் பார்த்தேன்; சோழனைப் பார்க்கக்கூடாது என்று சொன்னேன். கேட்டாளா அவள்? இப்பொழுது வேதனைப்படுகின்றாள். உடல் வாடிப்போய்விட்டது. மேனியெல்லாம் பீர்க்கம்பூ நிறத்தில் பசலை பூத்துவிட்டது. அப்பொழுது என் சொல் நீர்மேல் திரியிட்டுப் பற்றச் செய்கின்ற நெருப்பின் தன்மையைப்போல் பயனற்றுப்

போயிற்று. இப்பொழுது தொல்லையை அனுபவிக்கின்றாள். யான் என் செய்வேன்?'' என்கின்றாள்.

செவிலியின் மனநிலையைக் காட்டும் கவிஞரின் சொல் லோவியம் இது:

அலங்குதார்ச் செம்பிய னாடெழிற்றோ ணோக்கி
விலங்கியான் வேண்டா வெனினு—நலந்தொலைந்து
பீர்மேற் கொளலுற்ற பேதையர்க் கென்வாய்ச்சொல்
நீர்மே லெழுந்த நெருப்பு.

இது கைக்கிளை; செவிலி தன் நெஞ்சோடு கூறுவது.

விளக்கம்: அலங்குதார்ச் செம்பியன் - அசைந்தாடும் மாலைகளை அணிந்த சோழன். செம்பியன் - சோழன். ஆடு எழில் தோள் - பரியின் மீது இவர்ந்து வருங்கால் அசைந்து அசைந்து அழகு செய்யும் தோளை. நோக்கி - பார்த்து. விலங்கியான் வேண்டா எனினும் - இவளை விலக்கி, உலாவைப் பார்க்க வேண்டா என்று சொல்லியும். விலங்கி - குறுக்கிட்டு. நலன் தொலைந்து - எழிலெல்லாம் அழிந்து. பீர்மேல் கொளலுற்ற - பீர்க் கம் பூவின் நிறமான பசலையை உடல் முழுதும் பெற்றுக்கொண்ட. பேதை யர்க்கு - மகளிர்க்கு (இங்கு, தன் வளர்ப்புப் பெண்). என் வாய்ச்சொல் - என்னுடைய அறிவுரை. நீர்மேல் எழுந்த நெருப்பு - நீர் ஊறிய திரியில் சுடர் பற்றுகின்ற தன்மை போலத்தான்.

நங்கையின் ஏக்க பாவமும் செவிலியின் இரக்க பாவமும் பாட லில் நிழலிடுகின்றன. (25)

(பா - வே.) 11. பேதையாக்.

# [83]

## கனவிலும் ஏமாற்றமா?

சோழியர்கோன்மீது காதல் கொள்ளுகின்றாள் கோதை யொருத்தி. காதல் வளர்கின்றது. சோழனையே நினைந்து நினைந்து அவள் நெஞ்சழிகின்றாள். ஒருநாள் உறங்கினவள் திடுக்கிட்டெழு கின்றாள். சோழன் தன்னைத் தழுவ வருவதுபோன்றும், தான் இணங்காது ஊடுவதுபோன்றும் கண்ட கனவு அவளை எழுப்பி விடுகின்றது. சோழன் கூடுவதற்குத் தன்னை நெருங்கி வருங்கால் உறக்கம் கெட்டழிகின்றது. அதற்குமேல் விடியும் வரையில் அவ ளுக்குத் உறக்கமே வரவில்லை.

காலையில் தலைவியைப் பார்க்கத் தோழி வருகின்றாள். தலைவி யின் வாட்டத்தைக் கண்டு அதற்குக் காரணம் வினவுகின்றாள். அதற்குத் தலைவி இவ்வாறு மறுமொழி பகர்கின்றாள் :

"தோழியே, நீ வருவதற்குச் சில மணி நேரத்திற்கு முன்னர் கனவொன்று கண்டேன். வானோங்கி வளர்ந்துள்ள தென்னம் பாளையில் பொருந்திய தேனடைகளையும் நீர் வளத்தையுமுடைய சோழ நாட்டின் இளமையோடு கூடிய மன்னன் நான் உறங்கிக் கொண்டிருந்தபொழுது என்னை மருவ வருவதாகக் கனவு கண்டேன். அப்பொழுது யான் ஊடினேன். அந்த ஊடலும் ஓர் அளவுடன் நில்லாது எல்லையின்றி விரிந்தது. அதற்குள் விழிப்பு வந்துவிட்டது. கூடும் வாய்ப்பு பெறவில்லை. இந்த ஊடல் என்ற ஒன்று வந்து தோன்றிக் காரியத்தையே கெடுத்துவிட்டது. இப்பொழுது தவித்து நிற்கின்றேன். என்செய்வேன்?" என்கின்றாள்.

இங்ஙனம் தவிக்கும் நிலையிலுள்ள நங்கையின் மனநிலையைக் காட்டும் கவிஞரின் சொற்படம் இது :

> **ஊட லெனவொன்று தோன்றி யலருறாஉங்**
> **கூட லிழந்தேன் கொடியன்னாய்—நீடெங்கின்**
> **பாளையிற் றேன்றொடுக்கும் பாய்புன னீர்நாட்டுக்**
> **காளையைக் கண்படையுட் பெற்று.**

இது கைக்கிளை; தலைவி தோழியிடம் உரைப்பது.

விளக்கம்: ஊடல் - கணவன் மனைவியரிடையே தோன்றும் சிறு பிணக்கு. அலர் உறூஉம் - அஃது அளவின்றி விரிந்தால். ஊடல் அலர்த லாவது, உப்பமைந்ததுபோல் ஓரளவுடன் நில்லாமல் அளவின்றிப் பரத்தல். கூடல் - கூடலை; முயங்கலை. கொடியன்னாய் - பூங்கொடியை யொத்த தோழியே. நீள் தெங்கின் பாளையில் தேன் தொடுக்கும் - நீண்ட தென்னையின் பாளையில் தேனீக்கள் தேனடைகளைத் தொடுத்து வைக்கின்ற. பாய்புனல் நீர் நாட்டுக் காளையை - நீர் பாய்கின்ற புனல் நாடாகிய சோணாட்டை ஆளு கின்ற காளைப் பருவமுள்ள சோழனை. கண்படையுள் பெற்று - உறக்கத்தில் தோன்றிய கனவில் கண்டு. கண்படை - உறக்கம்.

கனவில் வந்து கிட்டாமல் போனதையே ஓர் இழப்பாகக் கருதி ஆற்றாது இருக்கும் நங்கைக்கு நனவில் இத்தகைய நிகழ்ச்சி நேரிட் டால் எத்தகைய ஏமாற்றமும் துயரும் ஏற்படும் என்பது கவிஞர் பெறவைக்கும் குறிப்பு. (26)

# ஊசலாடும் உள்ளம்

சில மாதங்களாகக் கிள்ளி வழக்கம்போல் உலா வருவதில்லை. அவனைக் காணப்பெறாமல் மக்கள் ஏங்குகின்றனர். "அவன் தோள்களைக் காணும் நாள் எந்நாளோ? வெண்கொற்றக் குடையின்கீழ் உயர்தனிச் செங்கோலோச்சும் உத்தமனைக் காணும் பேறு நம் கண்களுக்கு என்று கிடைக்குமோ?"...என்றெல்லாம் எண்ணுகின்றனர். பெரும்பாலான மக்கள் அவனது தோள் அழகினைப்பற்றியே அதிகமாகப் பேசிக்கொண்டிருக்கின்றனர். நங்கையொருத்தி இதனைக் கேட்டுக் கிள்ளியின்மீது காதலுறுகின்றாள். அந்தக் கிள்ளியின் தோள்களைப் பார்க்கவேண்டுமென்று அவளுடைய மனம் ஏங்கிக்கொண்டிருக்கும்பொழுது சோழனது உலா அறிவிக்கப்பெறுகின்றது. மக்கள் தெருவிலும் அவரவர்கள் வீட்டு வாயில்களிலும் திரள் திரளாகக் கூடுகின்றனர். அரசன் ஒவ்வொரு தெருவாகச் சென்று அரண்மனைக்குப் போவதற்குள் நள்ளிரவு ஆகிவிடும். இந்த நங்கை இருக்கும் வீட்டருகில் வருங்கால் யாமம் வரப்போகின்றது.

பார்க்கத் துடித்துக்கொண்டிருக்கும் நங்கை வீட்டின் வெளியே வந்து அவனைக் காணவேண்டுமென்று நினைக்கின்றாள். வாயிற் கதவு வரையில் அவள் மனம் வருகின்றது. நாணம் அதற்குமேல் போகவொட்டாமல் தடுத்து நிறுத்துகின்றது. மீண்டும் மனம் உள்ளே சென்றுவிடுகின்றது. ஆயினும், சோழன்பால் வைத்த காதல் மனத்தை நெகிழ்விக்கின்றது; மீட்டும் அது கதவு வரையில் வருகின்றது. இங்ஙனம் அவளுடைய மனம் போவதும் வருவதுமாக அலைகின்றது; இரண்டு பக்கங்களிலும் நெருப்பு பற்றப்பெற்ற மூங்கிற் குழாயினுள் அகப்பட்ட எறும்பு இங்குமங்குமாக அலைந்து திண்டாடுவதுபோல அவளது மனமும் திண்டாடுகின்றது; இங்குமங்குமாக ஊசலாடுகின்றது.

தலைவி தனது நிலையைத் தன் நெஞ்சுடன் சொல்வதுபோல் கவிஞர் புனைந்த சொல்லோவியம் இது:

நாணொருபால் வாங்க நலனொருபா லுண்ணெகிழ்ப்பக்
காமருதோட் கிள்ளிக்கென் கண்கவற்ற—யாமத்
திருதலைக் கொள்ளியி னுள்ளெறும்பு போலத்
திரிதரும் பேருமென் னெஞ்சு.

இது கைக்கிளை; தலைவி தன் நெஞ்சுடன் நவில்வது.

விளக்கம்: நாண் ஒரு பால் வாங்க-நாணம் ஒரு பக்கத்திற்கு இழுக்க. வாங்க-இழுக்க. நலன் ஒருபால் உள் நெகிழ்ப்ப-காதல் நலன் ஒருபக்கம் மனத்தை இளக்கிவிட. காமரு தோள் கிள்ளிக்கு-அழகிய தோள்களையுடைய கிள்ளியின் காரணமாக. கண்கவற்ற-கண் மனத்தில் கவலையை யுண்டாக்க (கவல்-பகுதி). இருதலைக் கொள்ளியின் உள் எறும்புபோல-இரண்டு பக்கமும் நெருப்பு பற்றிக்கொண்டு எரியும் மூங்கிற் குழாய்க்குள் அகப்பட்ட எறும்புபோல. யாமத்து-நள்ளிரவில். என் நெஞ்சு-என் மனம். திரிதரும் பேரும்-சோழனைக் காணச் செல்லும், மீண்டும் திரும்பும், இவ்வாறு அலையும்.

'திரிதரும் பேரும் என் நெஞ்சு'—என்ற இறுதி யடியைத் திரும்பத் திரும்பப் பாடினால் தலைவியின் நெஞ்சத் துடிப்பு நமக்குத் தட்டுப்படும்; அதனால நம் உள்ளமும் கனிந்து குழையும். (27)

# கண்ணோட்டம் வேண்டாமா?

சாதாரணமாகக் காதலைப்பற்றிய செய்திகளை அறிவித்தற்குத் தலைவிக்குச் சிறந்த கருவியாயிருப்பவள் தோழி. சில சமயம் காதல் மீதூர்ந்து நிற்கும்பொழுது தலைவியின் நெஞ்சமே தலைவனிடம் செய்திகளை அறிவிப்பதாகப் பாவனை செய்துகொள்ளுதலும் உண்டு. இது தன்மை நவிற்சியே. காதல் மயக்கத்தில் தலைவியின் மனம் காதலனிடம் சென்று அவனுடன் ஒன்றி நிற்பது உண்மையல்லவா? மனம் தோழிபோலவே ஒரு தனியான தத்துவமாகக் கருதப்பெறுகின்றது. நாரை, அன்னம், கிளி, தென்றல் போன்றவைகளும் செய்திகளைக் கொண்டுசெல்வதாகத் தலைவி கருதுதல்—காதல் வெறியினால்தான்.

x x x

சோழன் உலா வருங்கால் அவனைக் கண்ட நங்கை யொருத்தி அவன்மீது மையல்கொண்டு விடுகின்றாள். உலாவின்பொழுது பார்த்த புலிக்கொடி அவளது மனத்தைவிட்டு நீங்கவில்லை. சதா அவனையே நினைத்துக்கொண்டே இருக்கின்றாள் அவள்; அவனுடைய புனல் நாடும் அவளது நினைவிலிருக்கின்றது. உணவும் அவள் சரியாக உண்பதில்லை; உறக்கமும் கொள்வதில்லை. இதனால் உடல் மெலிகின்றது; தோளும் மார்பும் மெலிவடைகின்றன. உடலெங்கும் பசலை படர்கின்றது. காதல் வெறியால் அவள் தன் மனத்தையே தூதாக அனுப்ப நினைத்து அதனிடம் இவ்வாறு பேசுகின்றாள்:

"நெஞ்சமே, உனக்கு அதிக வலிமை உண்டு; அதனை நான் நன்கு அறிவேன். எனினும், உன்னைத் திடப்படுத்திக்கொள்வாயாக. காதலன் உன்னை நெருங்கி வருங்கால், நாணும்படியாக நேரிட்டாலும் நேரிடலாம். அங்ஙனம் நாணுவதற்கு இடங்கொடுக்காதே. ஒளிபொருந்திய புலிக் கொடியையுடைய சோழன் வருங்கால் அவனுக்கு வணக்கம் செலுத்துவாயாக. பிறகு துணிந்து பேசுக. உன்னுடைய தோள், மார்பு இவை முன்னிருந்த நிலையையும் இப்பொழுதிருக்கும் நிலையையும் எடுத்துக் கூறுக. 'அரசர்கட்கு உள்ள கண் மரக்கண்ணோ? சிறிதேனும் இரக்கம் வேண்டாமா?' என்று சொல்லி இரந்து கேள்; தொழுது கேள்." என்கின்றாள்.

மங்கையின் மனநிலையைக் கவிஞர் இங்ஙனம் காட்டுகின்றார் :

வரக்கண்டு நாணாதே வல்லையா னெஞ்சே
மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென் —றிரக்கண்டாய்
வாளுழுவை வெல்கொடியான் வண்புனனீர் நாடற்கென்
தோளழுவந் தோன்றத் தொழுது. *

இது கைக்கிளை ; நங்கை நெஞ்சொடு நவில்வது.

விளக்கம் : வரக்கண்டு - நீ தூதாக வந்திருக்கும் செய்தி கேட்டு அவன் உன்னிடம் வருங்கால். நாணாதே - நாணங்கொண்டுவிடாதே. வல்லை - வலியுடையை (என்பதை நான் அறிவேன்). மண் ஆள்வார் கண் - பூமியை ஆளும் மன்னர்களது கண். இரக் கண்டாய் - யாசித்துக் கேள். கண்டாய் என்பது, முன்னிலை அசை. வாள் உழுவை - ஒளி பொருந் திய புலியை எழுதிய. வெல்கொடியான் - வெற்றியைத் தரக்கூடிய கொடி யைக் கொண்ட சோழன். வெல் கொடி, வினைத்தொகை. வண்புனல் நாடற்கு - நீர்வளம் பொருந்திய சோழநாட்டு வேந்தருக்கு. தோள் அழுவம் - என்னுடைய தோளிலுள்ள குழி. அழுவம் - குழி. இது உடல் மெலிவினால் ஏற்பட்டது. தோன்றத் தொழுது - அவனுக்குத் தெரியும்படி யாக விளக்கி. அவனைப் பணிந்து, 'நெஞ்சே, வல்லை ; நாணாதே ; தொழுது இர' என்று முடித்துப் பொருள் காண்க.

காதல் துடிப்பு நெஞ்சைப் பார்த்து இங்ஙனம் பேசச் செய்கின் றது. 'காணாதே,' 'வல்லை,' 'நெஞ்சே'—இவற்றில் ஆர்வ பாவம் தொனிக்கின்றது. 'மரக் கண்ணோ மண் ஆள்வார் கண்' என்ற மன வேதனையிலும் இது தட்டுப்படுகின்றது. 'இரக் கண்டாய்' என்று வலியுறுத்துவதிலும், 'தோள் அழுவம் தோன்ற' என்ற பரிவிலும், 'தொழுது இரக் கண்டாய்' என்று கெஞ்சுவதிலும் இது நிழலிடு கின்றது. இந்த ஆர்வ பாவம் வெளிப்படுமாறு பாடலைப் படித்தால் கவிதையனுபவத்தின் கொடுமுடியைக் கண்டுவிடலாம் ! (28)

---

* மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.

என்ற குறளுரையில் (குறள் - 576) 'மண்ணோடு இயைந்த மரத்தனையர்' என்பதற்கு 'சுதை மண்ணோடு கூடிய மரப்பாவையை யொப்பர்' என்ற மணக்குடவர் உரையை மறுத்து, "அஃதுரையன்மை, காணப்படுங்கண்ணா னன்றி அதனுண் மறைந்து நிற்கின்ற ஒருசாருள்ளீட்டாதாற் கூறினமை யானும், 'மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென் - றிரக்கண்டாய்' என்பதனானுமறிக" என்று விளக்குவர் பரிமேலழகர்.

[ 86 ]

# வாடையுடன் வாது

பாய்ந்து செல்லும் பரிகள் பூட்டிய தேரேறி கிள்ளி உலா வருகின்றான். யானைகளும் அவனைச் சூழ்ந்து வருகின்றன. ஊரில் ஒரே பரபரப்பு ; உலாவினைக் காண ஊர் மக்கள் ஆங்காங்குத் திரளுகின்றனர். வீட்டு வாயிலில் நின்றுகொண்டு நங்கை யொருத்தி உலாக் காட்சியைக் காண்கின்றாள். கிள்ளி தேரின்மீது வீற்றிருந்த பெருமிதத் தோற்றமும், அவனைச் சூழநின்ற யானைகளின் கம்பீர நடையும் அவளது உள்ளத்தை ஈர்த்துவிடுகின்றன. அன்று முதல் அவள் அரசன்மீது மையல்கொண்டு மயங்குகின்றாள். ஊணும் உறக்கமுமின்றி உள் வீட்டிலிருந்துகொண்டிருக்கின்றாள். போர்வையை இழுத்துப் போர்த்திக்கொண்டு எதை எதையோ எண்ணியவாறு படுத்துக் கிடக்கின்றாள். பின்வாயிற் கதவுகளும் சாளரக் கதவுகளும் சரியாகப் பொருத்தி வைக்கப்பெறவில்லை.

அது கூதிர்க் காலம். வாடைக்காற்று 'ஓ' வென்ற இரைச்சலுடன் திடீரென்று பின்வாயிற் கதவுகளின்மீது மோதுகின்றது. வேறு உலகில் உலவிக்கொண்டிருந்த அவளது உள்ளம் திடுக்கிடுகின்றது. பிறகு கதவைத் தள்ளித் திறந்தது வாடைக் காற்று என்பதை அறிகின்றாள். வாடையை நட்பாக்கிக்கொண்டு அதனுடன் இவ்வாறு பேசுகின்றாள் ;

"குளிர்ந்த பனி நிறைந்த வாடையே, நீயா, வா ; நான் ஏதோ பேய்தான் இவ்வளவு வேகமாகக் கதவைத் திறக்கின்றது என நினைத்தேன். ஓகோ ! இப்பொழுது புரிகின்றது, செய்தி. கிள்ளியை யான் கண்டேன் அல்லவா ? திறைப்பொருளை வாங்கிவரும்படி உன்னை ஏவினனோ ? பெண்ணாகப் பிறந்தவர்கள்தாமா உனக்கு வரி செலுத்தும் குடிகள் ? உன் செயல் நன்றாக இருக்கின்றது ! யானைப் படைகளையும் தேர்ப் படைகளையும் உடைய கிள்ளியை நான் அறிவேன் ; அவன் எனக்கு அருள் செய்வான் ; அவனிடம் பேசிக்கொள்

கின்றேன். இதற்கிடையில் யான் சோர்வுற்ற காலம் பார்த்து என்னைக் கொல்லப் பார்க்கின்றாயா ? இது தகாது'' என்கின்றாள்.

நங்கையின் மனநிலையைக் காட்டும் கவினுருடைய சொல்லோவியம் இது :

> பேயோ பெருந்தண் பனிவாடாய் பெண்பிறந்தா
> ரேயோ உனக்கிங் கிறைக்குடிகள்—நீயோ
> களிபடுமால் யானைக் கடுமான்றேர்க் கிள்ளி
> அளியிடை அற்றம்பார்ப் பாய்.

இது கைக்கிளை; கிள்ளியின்பால் நைந்துருகும் நங்கை வாடையிடம் கூறுவது.

விளக்கம் : பேயோ - பேய் போலல்லவா இருக்கின்றது. தண் - குளிர்ந்த, வாடாய் - வாடைக் காற்றே. பெண் பிறந்தாரேயோ - பெண்ணாகப் பிறந்தவர்கள்தாமா. இறைக்குடிகள் - வரி செலுத்தும் குடிமக்கள். களிபடு மால்யானை - செருக்கு வளர்கின்ற மதயானை. கடுமான் தேர் - விரைந்து செல்லும் பரிகள் பூட்டப்பெற்ற தேர். கிள்ளி - சோழன். அளியிடை - அவன் வந்து கூடி அருள் புரிவதற்கு இடையில். அளி - அருள். அற்றம் - சோர்ந்திருக்கும் காலம்.

'பெண் பிறந்தாரேயோ உனக்கிங் கிறைக்குடிகள் ?' என்ற பகுதியைத் திரும்பத் திரும்பப் பாடினால் நங்கையின் காதல் துடிப்பும் ஏக்க பாவமும் தட்டுப்படுவதை அறியலாம். (29)

[ 87 ]

# வாடையே, ஓடிப்போய்விடு

நலங்கிள்ளி உறையூரை அரசோச்சிய காலத்தில் நங்கை யொருத்தி புகார் நகரிலிருந்து யாதோ ஓர் அலுவல் நிமித்தம் உறையூர் வர நேர்கின்றது. வழியில் தாமரை, குவளை மலர்கள் அழகாக மலர்ந்திருப்பதையும் வண்டுகள் அவற்றில் தேன் அருந்திக் கொண்டிருப்பதையும் காண்கின்றாள். தலைநகரில் சோழன் உலா வருவதைப் பார்க்கின்றாள்; அவனது கையிலுள்ள அச்சந்தரும் வேலைக் காண்கின்றாள். சோழனின் பெருமிதத் தோற்றம் அவளது உள்ளத்தைக் கவர்கின்றது. அவன்மீது காதல் கொள்ளுகின்றாள்; காதல் கருக்கொண்டு வளர்கின்றது.

சில நாட்கள் கழிகின்றன. ஒருநாள் உறந்தையர்கோன் இவள் வாழும் பட்டினத்திற்கு அரசு அலுவலின் நிமித்தம் வந்துபோனதைக் கேள்விப்படுகின்றாள் நங்கை. இதனால் இப்பட்டினமும் அவனது ஆட்சிக்குட்பட்டது என்பதை அறிகின்றாள். அன்று இரவு அவள் சோழனைப் பற்றிய நினைவினால் உறக்கமின்றி இருக்கின்றாள். இச் சமயத்தில் ஒரு வண்டு ஒலித்துக்கொண்டு அவள் இருந்த அறைக்கு வந்து உலவிச் செல்லுகின்றது. வண்டினை அரசன் விட்ட தூதாகவே கருதுகின்றாள். வண்டு போன பிறகு வாடை வருகின்றது அது எலும்பைத் துளைக்கும் அளவுக்குக் கடுமையாக வீசுகின்றது. அவளால் அதன் வேகத்தைத் தாங்கமுடியவில்லை. உடனே வாடையை நோக்கி இவ்வாறு பேசுகின்றாள்:

“பனி வாடையே, இனிமேல் இப்பக்கம் எட்டிப்பார்க்காதே. இதற்கு முன்னர் இப்பட்டினம் காவலின்றி இருந்தது. நீ விருப்பப்படி உள்நுழைந்து எம்போன்ற மகளிரை வருத்தினாய். இப்பொழுது நகர் கிள்ளியின் காவலில் இருக்கின்றது. அவன் வந்தால் உன்னை அழித்திடுவான். அவனது கையில் அஞ்சத்தக்க வேலும் உள்ளது. அவன் வருவதாகத் தூது அனுப்பிய வண்டும் இப்பொழுதுதான் வந்து போயிற்று. பகலே வந்திருக்கவேண்டிய வழியில் செங்கமலம், செங்கழுநீர்ப் பூக்களில் பொழுதைப் போக்கி இப்பொழுதுதான் வந்தது. ஓடு, நில்லாதே; போ” என்கின்றாள்.

நங்கையின் காமம் மிக்க கழிபடர் கிளவியைக் காட்டும் கவி ஞரின் சொல்லோவியம் இது :

நாம நெடுவேல் நலங்கிள்ளி சோணாட்டுத்
தாமரையு நீலமுந் தைவந் — தியாமத்து
வண்டொன்று வந்தது வாரல் பனிவாடாய்
பண்டன்று பட்டினங் காப்பு *

இது கைக்கிளை ; வனிதை வாடையை அச்சுறுத்துவது.

விளக்கம் : நாம நெடுவேல் - அச்சந்தரும் நீண்ட வேலைத் தாங்கிய. நாமம் - அச்சம். சோணாட்டு - சோழநாட்டிலுள்ள. நீலம் - குவளை மலர். தை வந்து - மெல்ல மெல்லத் தடவி, யாமத்து - நள்ளிரவில். வாரல் - வராதே. பனிவாடாய் - குளிர்ந்த வாடையே. பண்டன்று - முன்னைய காலம் அல்ல இது ; (அப்பொழுது நகரம் காவலின்றி இருந்தது). பட்டினம் காப்பு - இப்பொழுது பட்டினம் காவலில் இருக்கின்றது.

வாடையுடன் பேசுவதும் வண்டு வந்துப் போனதாகச் சொல்லு வதும் காதல் களிமயக்கில். காதல் இதையும் பேசச் செய்யும் ; இன்னமும் பேசச் செய்யும். பகலே புறப்பட்ட வண்டு தாமரையை யும் குவளையையும் தைவந்து தாமதித்து யாமத்தில் வந்ததைப் போலவே, கிள்ளியும் உரிமை மகளிரையும் பிறமகளிரையும் ஏமாற்றி விட்டு யாமத்திற்குப் பிறகு இங்கு வருவான் என்பது குறிப்பு. (30)

---

* நெய்க்குடத் தைப்பற்றி ஏறும்
 எறும்புகள்போல் நிரந்து எங்கும்
கைக்கொண்டு நிற்கின்ற நோய்காள் !
 காலம்பெற உய்யப் போமின் ;
மெய்க்கொண்டு வந்து புகுந்து
 வேதப் பிரானார் கிடந்தார் ;
பைக்கொண்ட பாம்பு அணையோடும்
 பண்டு அன்று பட்டினம் காப்பே.

என்ற பெரியாழ்வார் திருமொழியிலும் (5 : 2 - 1) இதனையடுத்துவரும் இப்பதிகப் பாசுரங்களனைத்திலும் ஈற்றடிகளில் 'பண்டன்று பட்டினங் காப்பு' என்ற சொற்றொடர் வருதல் கண்டு மகிழ்க.

(பா - வே.) 12. பனிவாடை.

# சேர நாட்டின் செவ்வி

இயற்கைப் பொருள்கள் இன்பமயமான சமாதியில் அடங்கிக் கிடக்கின்றன. அந்தச் சமாதியில் நாம் கலந்துகொள்ள முயல வேண்டும். அங்ஙனம் கலந்துகொள்ளும் இயல்புடையவர்கள் கவிஞர் கள்; இயற்கையுடன் இன்பமாகப் பழகும் திறம் வாய்ந்தவர்கள் அவர்கள். இயற்கையின் இன்பப் பெருக்கில் திளைத்த கவிஞர்கள் பாடிய பாடல்களில் அந்த இன்பப் பெருக்கின் ஒன்றிரண்டு திவலைகள் இருக்கத்தான் செய்யும். அது போகட்டும்.

x x x

இயற்கைவளஞ் செறிந்த சேரநாட்டில் மாலை நேரத்தில் மைவிழியார் இருவர் உலாவச் செல்லுகின்றனர். அவர்களுள் ஒருத்தி தலைவி; மற்றொருத்தி தோழி. வீடு திரும்பத் தொடங்கும் பொழுது கையெழுத்து மறைகின்ற நேரம்; வீட்டை அடைவதற்குள் இருள் கவிந்துவிடுமோ என்று அஞ்சுகின்றாள் தோழி.

தலைவி கூறுகின்றாள்: "நம் மன்னன் கோதையின் ஆட்சியில் நாம் அஞ்சவேண்டியதில்லை. அவன் கையிலுள்ள நஞ்சூட்டிய வேல் பகைவர்கள் அஞ்சும் தன்மையுடையது. ஒன்னார் தீக்கொளுவு வதாலும், கள்வர்கள் சூறையாடுவதாலும் பிறநாடுகளில் ஆரவாரம் மிகுந்து மக்கள் கலங்குவதாகச் சொல்லுகின்றனர். நம் நாட்டில் அத்தகைய அச்சம் ஒன்றும் இல்லை."

இதற்குள் அவர்கள் ஒரு தடாகத்தினருகில் வருகின்றனர். நீர்வாழ் பறவைகள் ஆரவாரிக்கின்றன. தடாகத்திலும் நீர் நிறைந் திருக்கின்றது. செவ்வாம்பல் மலர்கள் விரிகின்றன. பகல் முழு வதும் நீந்தி அலைந்து திரிந்த பறவையினங்கள் ஓரத்திலுள்ள புதரினை அடைகின்றன; தம் குஞ்சுகளை அருகில் அழைத்துச் சிறகினுள் அணைத்துக்கொள்ளுகின்றன. இதனால் ஆரவாரம் மிக்குள்ளது.

தோழி கூறுகின்றாள்: "'நம்முடைய நாட்டில் கவ்வை இல்லை' என்றாயே. இதோ பார். நீரில் தீப்பற்றிக்கொண்டது என்று

பறவை இனங்கள் அஞ்சுகின்றன; சுற்றுப்புறப் புதர்களில் மறைகின்றன. தம்முடைய குஞ்சுகளேயும் தம்முடைய சிறகினுள் ஒடுக்கிக்கொள்ளுகின்றன.''

தான் ஏதோ ஒன்றைக் கண்டுபிடித்துவிட்டதாகத் தோழி பெருமிதங் கொள்ளுகின்ருள்.

சேரநாட்டின் இயற்கைவளத்தைக் கண்டு அதில் திளேத்த கவிஞர் அதைப் பாராட்ட நினேக்கின்ருர். தம்முடைய கருத்தைத் தலேவி—தோழியர் பேச்சாக அமைத்துத் தமது கற்பனே நலம் தோன்ற அழகிய பாடலாக அமைத்திருக்கின்ருர்.

அப்பாடல் இது:

அள்ளற் பழனத் தரக்காம்பல் வாயவிழ
வெள்ள நீப் பட்ட தெனவெரீஇப்—புள்ளினந்தன்
கைச்சிறகாற் பார்ப்பொடுக்குங் கவ்வை யுடைத்தரோ
நச்சிலேவேற் கோக்கோதை நாடு.

இது சேர நாட்டின் செவ்வி கூறுவது.

விளக்கம்: அள்ளல் - சேறு. பழநம் - நீர்ப்பொய்கை. அரக்காம்பல் - சிவந்த நிறமுடைய ஆம்பற்பூக்கள். வாய் அவிழ - மெள்ள மெள்ள இதழ் விரிய. வெள்ளம் - நீர். தீப்பட்டது என வெரீஇ - தீப்பற்றிக்கொண்டது என்று பயந்து. புள் இனம் - (நீர் வாழ்) பறவையினங்கள். கைச் சிறகால் - கை போன்ற இறக்கைகளால். பார்ப்பு - இளங் குஞ்சுகளே 'பார்ப்பும் பிள்ளேயும் பறப்பவற் றிளமை'* என்பது தொல்காப்பியம். கவ்வை - அச்சத்துடன் கூடிய ஆரவாரம். உடைத்தரோ - உண்டு. அரோ என்பது அசை. நச்சிலே வேல் - நஞ்சுபோல் அச்சத்தை விளேவிக்கும் இலே வடிவம் போன்ற வேலேயேந்திய. கோக்கோதை - சேரமன்னன்.

வெள்ளத்தில் அரக்காம்பலாகிய தீப்பிடித்துள்ளது என்று கூறுவது 'தற்குறிப்பேற்றம்'

'நாட்டில் பயப்படவேண்டிய செயல் ஒன்றும் இல்லே என்பது உண்மைதான். ஆயினும், இந்தப் புள்ளினங்கள் அஞ்சித் தவிக்கின்றனவே'—என்ற நகைச்சுவையுடன் கூடிய தோழியின் கூற்றில் சேரநாட்டுச் சிறப்பு புலனுகின்றது; நாட்டு வளமும் வேலின் கொற்றமும் காட்டப்பெறுகின்றன. (1)

(பா - வே.) 4. வாய் நெகிழ. 8. புள்ளினங்கள்.

* தொல் - பொருள் - மரபியல் - நூற் 4.

# வஞ்சி நகரின் வளம்

பண்டை காலத்துத் தமிழ் மறவர்கட்கு மது அருந்துவது தண்ணீர் அருந்துவதுபோல. படைவீரர்கட்கு மது வழங்குவதே ஒரு மரபாக வந்திருக்கின்றது. மறவர்கள் ஒருவருக்கொருவர் மதுவைப் பரிமாறி மரியாதை செய்துகொள்வது வழக்கம். மதுவை வாங்கிக் கொள்வோர் மிகவும் பக்தியாக ஏற்றுக்கொள்வர். இப்பொழுதும் இரண்டு போர்வீரர்கள் பிராந்தி போன்ற மதுவைப் பருகும்பொழுது ஒருவர் கிண்ணத்தை மற்றொருவர் கிண்ணத்துடன் மெதுவாக மோதி ஓசை செய்வதைக் காணலாம். ஒருவரது கிண்ணத்திலிருந்து மற்றவரது கிண்ணத்திற்கு மதுவை ஊற்றும் முற்கால வழக்கமே இப்பொழுது கிண்ணங்களைத் தட்டி ஒலிக்கும் 'சடங்காக' மாறியிருக்கின்றது !

மதுவை உண்பதற்கு முன்னர் அதில் சிறிதளவு விரல்களினால் எடுத்து நிலத்தில் உதிர்த்துவிட்டு—இது நிலமகட்கு உவந்து வழங்கும் படைப்புப்போலும் !—அதன் பின்னரே மதுவைத் தாம் அருந்துவர். வஞ்சிமா நகரின் தெருக்களில் கள் விற்போர் ஏராளமாகச் சூழ்ந்திருக்கின்றனர். அவர்களிடம் கள்ளை வாங்கி மேற்கூறிய வழக்கப்படி பூமியில் தெளிக்கும் கள்ளின் துளிகள் சேர்ந்து வெள்ளம்போல் பாய்கின்றன. அத்தெருக்களின் வழியாகக் களிறுகள் கூட்டம் கூட்டமாக வருங்கால் இந்தக் கள் வெள்ளத்தை மிதித்தலினால் தெருவெல்லாம் சேறாகிவிடுகின்றது. எங்கும் ஒரே சேறுமயம் ! இதனால் மறவர்களின் கூட்டமும், கள்ளின் மிகுதியும், யானைகளின் பெருக்கமும் நிறைந்த வஞ்சிமா நகரின் வளன் தெளிவாகின்றது.

மேற்கூறிய காட்சியைத் தமது கவிதையில் நிறுத்தி வஞ்சியின் வளத்தை விளக்குகின்றார் கவிஞர். அவருடைய பாடல் இது :

**களிகள் களிகட்கு நீட்டத்தங் கையாற்**
**களிகள் விதிர்த்திட்ட வெங்கட்—டுளிகலந்**
**தோங்கெழில் யானை மிதிப்பச்சே றாகுமே**
**பூம்பொழில் வஞ்சி யகம்.**

இது வஞ்சி நகரின் வளம் இயம்புவது.

விளக்கம் : களிகள் - கள்ளைப் பருகும் மறவர். களிகட்கு - ஏனைய மறவர்கட்கு. நீட்ட - வழக்கப்படி மதுக் கிண்ணத்தை நீட்ட, தம் கையால் களிகள் விதிர்த்திட்ட - தமது கைகளினால் தொட்டு நிலத்தில் தெளித்த. வெம்கள் துளிகலந்து - விருப்பந்தரும் கள்ளின் எண்ணிறந்த துளிகள் யாவும் சேர்ந்து. 'வெம்மை வேண்டல்' (தொல்காப்பியம்). ஓங்கு எழில் யானை மிதிப்ப - (மறவர்கள் போனபிறகு) யானை நிரைகள் மிதிப்பதனால். சேறு யிற்றே வஞ்சி அகம் – சேறாகப்போய்விட்டது சேரனது வஞ்சிமா நகரம். இதனால் மறவர்களின் தொகை அறியப்படும். பூம்புனல் - நீர்வளம் பொருந்திய. வஞ்சி - தற்காலத்துக் கொச்சி. இன்றும் கொச்சியில் தோணியை 'வஞ்சி' என்று வழங்குகின்றனர். வஞ்சி வளங்கொண்ட தீவுகளாய் நகரம் அமைந்ததுபற்றி 'வஞ்சி மாநகர்' என்று பெயர் அமைந்தது போலும் !

வெங்கள் துளி கலந்து, யானை மிதிப்பச் சேறான இடம் எது? அதுதான் 'பூம்புனல் வஞ்சி அகம்!' இதில் முத்தாய்ப்பு வைத்த மாதிரி வியப்புச் சுவை தொனிக்கின்றது. *(2)*

(பா - வே.) 6. விதித்திட்ட; 8. டளிகலந்; 12 - 13. றாயிற்றெம் பூம்பொழில்

# வில்லெழுதி உய்வீர்களாக!

சேரனது ஆட்சி செம்மையுற நடைபெறுகின்றது. மக்கள் அமைதியாக வாழ்கின்றனர், இந்நிலையில் சிறுமதியுள்ள சிற்றரசர்கள் சிலர் ஒன்றுகூடி திறை கொடாமலிருந்து விடுகின்றனர், சீற்றங்கொள்ளுகின்றான் சேரன். தண்டெடுத்துச் சென்று அந்தக் குறுநில மன்னர்களின் அகந்தையை அடக்கி வருமாறு தானைத் தலைவனை அனுப்புகின்றான்.

அது போர்க்களம். இருபக்கத்துப் படைகளும் சந்திக்கின்றன. இன்னும் போர் தொடங்கவில்லை. தானைத் தலைவனோ ஆண்மையுடன் அறிவும் மிக்கவன். போர் தொடங்கினால் பகைவர்களின் யானைப் படைகளும் பல நாட்கள் முயன்று பலமாகக் கட்டிய வள மதில்களும் வீணாக அழிந்துவிடுமே என்று இரக்கப்படுகின்றான்; ஒன்னாரையும் உவந்தாராக்கிக்கொள்ள முயல்கின்றான். பகை மன்னர்கட்கு அறிவுகொளுத்தலாம் என்று எண்ணி அவர்களை நோக்கி இவ்வாறு பேசுகின்றான் :

"யானைப் படைகளையுடைய வேந்தர்களே, நீங்கள் யானைப் படைகளுடன் வந்தாலும் பயனில்லை. அவை போன இடம்கூடத் தெரியாமல் போய்விடும். வளப்பமாக அமைந்த நும் கோட்டைகளும் நுமக்குத் துணை நிற்கா. அதோ விண்ணில் காணுங்கள் வான வில்லை! வானவர்களும் எம் மன்னனுக்கு அடங்காமல் வாழ இயலாது. அதனால்தான் அவர்கள் வானகத்தில் வில்லெழுதி எங்கட்கு அடங்கி அமைதியாக வாழ்கின்றனர். அதனை நோக்கியேனும் உய்யும் வழியை அறிந்துகொள்ளக் கூடாதா ? வழக்கப்படி திறையைச் செலுத்திவிடுங்கள்! நீங்கள் எங்கள் மன்னனுக்குப் பணிந்ததற்கு அடையாளமாக உங்கள் கோட்டை மதில்களில் ஓவியரைக்கொண்டு வில் எழுதிவிடுங்கள்! இதுவே உய்யும் வழி. இப்படிச் செய்துவிட்டால் உங்கட்கு விபத்து என்றும் நேரிடாது" என்கின்றான்.

இந்தச் செய்தி கவிஞர் காதுக்கு எட்டுகின்றது. நிகழ்ச்சிக்கு அழகிய வடிவங்கொடுக்க எண்ணுகின்றது அவரது கவிதையுள்ளம். உடனே பாடலும் உருப்பெற்று இந்த வடிவம் கொள்ளுகின்றது :

பல்யானை மன்னர் படுதிறை தந்துய்ம்மின்
மல்ல னெடுமதில் வாங்குவிற் பூட்டுமின்
வள்ளிதழ் வாடாத வானோரும் வானவன்
வில்லெழுதி வாழ்வர் விசும்பு.

வில்லவனின் தானைத் தலைவன் மாற்றார் முன்னின்று திறை தந்துய்யுமாறு நெடுமொழி கூறுவது.

விளக்கம் : பல்யானை மன்னர் - பல யானைப் படைகளையுடைய மன்னர்காள்! (அண்மை விளி). படுதிறை - விதிக்கப்பெறும் கப்பப் பொருளை. தந்து உய்ம்மின் - செலுத்திப் பிழையுங்கள். மல்லல் நெடுமதில் - பலமாகக் கட்டிய, உயர்ந்தும் நீண்டுமுள்ள மதிற்சுவர்களில். வாங்குவில் பூட்டுமின் - வளைந்த வில்லைப் பூட்டியமாதிரி ஓவியம் எழுதுவியுங்கள். வள்ளிதழ் வாடாத வானோரும் - வளப்பமான இதழ்கள் வாடாத மாலையை யணிந்த தேவர்களும். வானவன் - சேரன். வில் - சேரனது கொடியிலுள்ள சின்னம். விசும்பு - வானம்.

இயல்பாக வானத்தில் வண்ண வில் காணப்படுவதை விண்ணோர்கள் சேரனுக்கு அடங்கியதாகக் கூறுவது ‘ தற்குறிப்பேற்றம் ’.

‘ விண்ணவரும் வானவனுக்கு அஞ்சி வில்லெழுதி வாழ்கின்றனர். நீவிர் எம்மாத்திரம் ?’ என்ற தானைத் தலைவனின் குறிப்பு பெருமிதச் சுவை நிறைந்தது. (3)

(பா . வே.) 2. ‘ மன்னர் ’ என்பது ‘ மன்னீர் ’ என்றிருப்பின் பொருந்தும்.

[91]

# சீற்றந் தணியாத யானை

சேரனது படைகட்கும் மாற்றரசர்களின் படைகட்கும் போர் நிகழ்கின்றது. வேழமுடைய மலைநாட்டுச் சேரனின் படையில் பெரும் பகுதி யானைப்படையாக உள்ளது. போர் நடக்கும்பொழுது வீரர்கள் யானைகட்குக் கள்ளை அதிகமாக ஊட்டி அவற்றை வெறிகொள்ளச் செய்து போர்க்களத்திற்கு அனுப்புவது வழக்கம்.

பகையரசன் இருக்கும் இடத்தை அவனுடைய வெண்கொற்றக் குடை குறிப்பிடும். சேரனது யானையொன்று மிக்க வெறிகொண்டு பகைவர்களின் படைகளை யெல்லாம் தாக்கித் தேய்க்கின்றது; மிதித்து நாசமாக்குகின்றது. இறுதியில் பகையரசனின் குடையருகில் சென்று அதைப் பிடுங்கித் தரையில் அடித்துச் சுக்குநூறுக நொறுக்குகின்றது. அடிக்கடி இங்ஙனம் குடைகளை நொறுக்கி நொறுக்கி யானைக்கு இது ஒரு பழக்கமாகவே போய்விடுகின்றது.

பகலெல்லாம் இவ்வாறு போர் நடைபெறுகின்றது; மாலையும் நெருங்கி வருகின்றது. யானைக்குச் சினந்தணிந்தபாடில்லை. மாலையில் போர் நின்று ஓய்ந்த பிறகும் சினவெங்களி யானையின் செயல் அடங்கவில்லை. அப்பொழுது வானத்தில் முழுமதியம் ஒளிர்கின்றது. அந்த வான்திங்களை நோக்குகின்றது யானை. விண்ணில் விளையாடும் பொன்னிலவையும் மாற்றரசனது வெண்கொற்றக் கொடையெனக் கருதி அதனையும் பற்றிச் சிதற அடிக்க எண்ணுகின்றது. அதனைப் பற்றுவதற்கும் தன் கையை நீட்டுகின்றது.

இந்தக் காட்சியைச் சேரனது தானைத்தலைவன் தன் நண்பன் ஒருவனுக்குக் கூறுவதுபோல் கவிஞரது பாடல் அமைகின்றது.

அப் பாடல் :

வீறுசான் மன்னர் விரிதாம வெண்குடையைப்
பாற வெறிந்த பரிசயத்தாற்—றேறாது
செங்கண்மாக் கோதை சினவெங் களியானை
திங்கண்மேல் நீட்டுந்தன் கை.

இது யானைமறம்; சேரனது சினக்களிற்றின் சீர்த்தியைச் செப்புவது.

விளக்கம்: வீறுசால் மன்னர் - சிறப்பு மிக்க பகைவேந்தரது. விரிதாம வெண்குடையை - விரிந்து கவிந்து முத்துச்சரங்கள் அணி செய்யும் வெண்கொற்றக் குடையை. தாமம் - மாலை. பாற எறிந்த பரிசயத்தால் - நொறுங்கிப்போகும்படி தரையில் அடிக்கும் பழக்கத்தால். பாற - நொறுக்க. பரிசயம் - பழக்கம். தேறாது - தெளியாமல். செங்கண்மாக் கோதை - சிவந்த அழகிய கண்ணையுடைய சேர மன்னனது. சினவெங்களியானை-சீற்றத்துடன் கூடிய வெறி கொண்ட யானை. திங்கள் - சந்திரன். கை - துதிக்கை.

பாட்டைப் பன்முறைப் பாடி அனுபவித்தால் நம் மனக்கண் முன்னர் யானையின் கை உயர்ந்து காணப்பெறும். பாடலிலும் அந்தக் கை தனித்து (தனிச்சீரில்) உயர்ந்து நிற்கின்றது ! (4)

# செருக்களக் காட்சி

**போ**ர் முடிந்தபிறகு போர்க்களத்தில் காணப்பெறும் காட்சிகள் ஒவ்வொன்றும் அச்சத்தை விளைவிக்கும்; அருவருப்பையும் தரும். ஆயினும், போர் வெறியில்—வெற்றியடைந்த களிப்பில்—அவை அனுபவிக்கத் தக்கனவாகவே இருக்கும். ஆறுகள் போல் இரத்தம் பெருக்கெடுத்து ஓடுவதும், அதில் பிணங்கள் குறுக்கிட்டுத் தடையாகக் கிடப்பதும், அறுபட்ட கையும் காலும், உடல்வேறு தலை வேருகக் கிடக்கும் நிலையும், இன்னோரன்ன பிறவும் வெற்றியடைந்தோருக்கு மகிழ்ச்சியைத் தந்தாலும் நமக்கு அருவருப்பையே உண்டாக்கும். ஆனல், கவிஞன் இத்தகைய காட்சிகளைக் கவிதைகளில் தரும்பொழுது அவை நமக்குச் சுவையைத் தருகின்றன; நமது உள்ளத்தைப் பூரிக்கவும் செய்கின்றன. இதுவே சுவையியலின் தத்துவம். இத்தகைய அருவருப்புச் சுவையைத்—பீபத்ஸ ரஸம்—தரும் காட்சிகளைக் கலிங்கத்துப் பரணியில்தான் கண்டு அனுபவிக்கவேண்டும்.

x x x

சேரனது செருக்களத்தில் ஒரு காட்சி. சேரன்மீது பொருமை கொண்டு எதிர்த்த சிறுமதி மன்னர்கள் பலர் தம் படைகளுடன் பொருது மடிகின்றனர். பலர் மார்பில் அம்பு தைத்த நிலையுடன் வீழ்ந்து கிடக்கின்றனர். அவர்களுடைய கைகள் இருபக்கமும் நீண்டநிலையில் மண்ணில் கிடக்கின்றன. கழுத்தில் பச்சைக் கல்லாலான கண்டி கிடக்கின்றது. தோள்களில் பருத்த பொன் வளையங்கள் மின்னுகின்றன. முன் கைகளில் கனத்த வயிரக் கடகங்கள் கிடந்து விளங்குகின்றன. இறந்து கிடக்கும் இப்பிணங்களைத் தின்பதற்கு நரிக்கூட்டங்கள் வருகின்றன. அவற்றுள் ஒரு சிறு நரிக்குட்டி வயிரக் கடகமிட்ட கையைக் கடித்து இழுக்கின்றது. வயிரம் வாயைக் கிழித்துவிடுகின்றது. தோள்வளையமும் கழன்று கீழே நழுவிவந்து நரியின் தலையில் வேகமாக மோதி புண்படச்

செய்கின்றது. வாயிலும் தலையிலும் புண்ணுற்றுக் குருதியொழுகிய நிலையில் அது வலி பொறுக்கமாட்டாமல் கதறித் தாய் நரியைக் கூவியழைக்கின்றது. இப்படிப் பல இடங்களில் நடைபெறு கின்றன. எங்கும் நரிக்குட்டிகள் ஊளையிடும் இரைச்சல்தான்.

இக் காட்சியைச் சேரனது படைவீரன் ஒருவன் தன் நண்ப னுக்குக் கூறுகின்றான்.

இக்காட்சியைக் காட்டும் கவிஞரது சொல்லோவியம் இது :

மரகதப்பூண் மன்னவர் தோள்வளை கீழா
வயிரக் கடகக்கை வாங்கித்—துயருழந்து
புண்ணுற் றழைக்குங் குறுநரித்தே பூழியனைக்
கண்ணுற்று வீழ்ந்தார் களம்.

இது சேரன் பொருத செருக்களம் செப்புவது.

விளக்கம்: மரகதப்பூண் - பச்சைக் கல்லாலாகிய கழுத்திலணியும் கண்டி. தோள்வளை - தோளிலணியப்படும் பொன்வளையம். கீழே - கீழாக. வயிரக் கடகக் கைவாங்கி - வயிரம் பதித்த கடகமிட்ட கையைக் கடித்து இழுத்து. வாங்குதல் - இழுத்தல். கையை வேகமாகக் கடித்து இழுக்கும் பொழுது மரகதப் பூண் மார்பில் அணிந்த மன்னர்களது தோளில் அணியப் பெற்றுள்ள தோள்வளையம் கீழே கழன்று விழுகின்றது. துயருழந்து - துன்ப மடைந்து. புண்ணுற்று அழைக்கும் - புண்பட்ட காரணமாகத் தாய் நரியை நினைத்து ஊளையிடும். குறு நரித்தே-பல சிறு நரிகள் இவ்வாறு துயருழந்தன. பூழியனைக் கண்ணுற்று வீழ்ந்தார் - சேரனைப் போரில் எதிர்ப்பட்டனர், அவ் வளவுதான்; மார்பில் அம்பு தைத்து மண்ணைக் கவ்வினர். பூழியன் - பூழி நாட்டையுடைய சேரன். 'பூழியர்கோக்கோதை' (பாடல்-100) என்று வருதலுங்காண்க. களம் - இப்படியாகப் பலா வீழ்ந்து மாண்டு கிடந்தபோர்க் களம் என்றவாறு.

அச்சத்துடன் அருவருப்பும் கூடிய பாவத்தைப் பாடலில் காணலாம். (5)

(பா - வே.) 4. கீளா.

[93]

# பேரினல் ஏற்படும் அழிவு

அமைதியான காலத்தில் ஒரு நாடு ஏரிகளினலும், அணைகட்டிய ஆற்றுப் பாய்ச்சலாலும், பிற நீர்ப்பாசனத் திட்டங்களாலும் வளம் பெற்றிருக்கும்; நஞ்சை வயல்களும், பழமரத்தோப்புக்களும் செறிந்து காணப்பெறும். உழவர்கள் பண்ணையைப் பண்படுத்திப் பாங்குற வைத்திருப்பர். இத்தகைய நாட்டில் போர் நிகழ்ந்தால், பகைவர்கள் ஏரிகளை உடைப்பர்; அணைகளை அழிப்பர்; பாலங்களைச் சிதைப்பர்; மக்களையும் பலவிதமாக அலைக்கழித்து எங்கும் தங்கமுடியாத பீதியை நிலவச்செய்துவிடுவர். நாளடைவில் நாடும் பாழாகும்; பாலைவன மாகவும் மாறிவிடும். இஃது எக்காலத்திலும் நடைபெறுவது.

x x x

திறைகொடாது சிறுமதிக் குறுநில மன்னர்கள் சேரனை எதிர்த்துத் தோற்று அழிகின்றனர். சேரனது கொடி அந்நாடுகளில் பறக்கத்தான் செய்கின்றது. ஆயினும், பயன் என்ன?

'எழுநிலை மாடங் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பா ழாயினு மாகும்' *

என்றவாறு நாடு முழுவதும் பாழாகின்றது; நாடு இடுகாட்டினும் பாழாக மாறிவிடுகின்றது. பூஞ்சோலை புழுதி மேடாகிவிடுகின்றது; வளமான நாடு வறண்ட பாலைநிலமாகின்றது. பகையரசர்கள் வீணுகச் சேரனது சீற்றத்திற்கு ஆளாகிப் பாழ்படுகின்றனர்.

இக் கொடுமையான காட்சிகளைக் காண்கின்றார் கவிஞர்; கண்ணீர் பொழிகின்றார். கோதையைக் காண்கின்றார். அவனது வீரத்தைப்பற்றிப் பேசுவதற்கு இதனை வாய்ப்பாகவும் கொள்ளு கின்றார்:

"நின்னுடைய மதயானைப் படைகளையும் பொருட்படுத்தாது, பகையைக் கொல்லும் நினது திண்டோள்களையும் மதியாது நினக்குச்

---

* நறுந்தொகை - 54.

சினமூட்டிய நாட்டின் நிலை மிகக் கேவலமாகிவிட்டது. புரப்பார் இன்மையினால் பூம்பொழில்கள் அழிந்து பாழாயின. வெயிலின் வெப்பந் தாங்காது செடிகளனைத்தும் கருகிப்போய்க் கிடக்கின்றன. அச் செடிகளிருந்த இடங்களிலெல்லாம் முட்கள் நிறைந்த கண்டங் கத்திரிச் செடிகள் மலிந்து காணப்பெறுகின்றன. எங்குப் பார்த் தாலும் குறுநரிக் கூட்டங்கள் அங்கு மிங்குமாக நடமாடுகின்றன. நாளடைவில் முள்ளிச்செடிகளும் கரிந்து தீய்ந்துபோய்வருகின்றன.'' என்கின்றார்.

இக் காட்சியைக் காட்டும் கவிஞரது சொல்லோவியம் இது:

கரிபரந் தெங்குங் கடுமுள்ளி பம்பி
நரிபரந்து நாற்றிசையுங் கூடி—யெரிபரந்த
பைங்கண்மால் யானைப் பகையடுதோட் கோதையைச்
செங்கண் சிவப்பித்தார் நாடு.

இது பகைப்புலம் பழித்தல்; சேரனது சீற்றத்தைக் கிளப்பி விட்டவர் நாட்டின் நிலையைக் கூறுவது.

விளக்கம்: கரிபரந்து - நெருப்பு பற்றி எரிந்ததால் எங்கும் கரிமய மாகி. இது தீக்கொளுத்தின உடனே நிகழ்வது. கடுமுள்ளி பம்பி - முள்ளிச் செடிகள் (கண்டங் கத்திரிச் செடிகள்) நிறைந்து. இ:து எதிர்காலத்தில் நிகழ்வது. நரி பரந்து - நரிகள் இங்குமங்குமாக உலவி. நரிகள் கூடுவது இறந்தவருடைய ஊனை உண்டற்கு நிகழ்வது. இது போர் நடை பெற்று முடிந்தவுடன் நிகழும்; அதன்பின்னர் அக் களம் நரி வாழும் இடமாகவும் மாறிவிடும். நால் திசையும் எரி பரந்த - முள்ளிச்செடிகளும் நாளடைவில் கரிந்து தீய்ந்து காணப்பெறுகின்றன. பைங்கண்மால் யானை - பசிய கண் களையும் மதத்தையும் கொண்ட யானை. பகையடுதோள் - பகைவர்களை ஒடுக்கவல்ல திண்தோளையுடைய, செங்கண் சிவப்பித்தார் நாடு - செந் தாமரைக் கண்ணைக் கோவைப்பழம் போலச் சிவக்கும்படிச் சினமூட்டிய பகைவரது நாடு.

பாட்டைப் பலமுறைப் பாடி அனுபவித்தால் பாழ்பட்ட நாட்டின் காட்சி மனத்திரையில் விழுவதைக் காணலாம். (6)

[94]

# பாழடைந்த பகைவர் நாடு

பண்டைக்காலத்தில் அரசர்கள் போர்மேற் செல்லுங்கால் தும்பைமாலையைச் சூடிக்கொள்ளுவது வழக்கம். போரில் வெற்றி பெற்றுத் திரும்பும்பொழுது அவர்கள் வாகை மாலையை அணிந்து கொள்வர். சேரனது நாட்டில் அமைதி நிலவியதால் அவனுக்கு இத்தகைய மாலைகளைச் சூடுவதற்கு வாய்ப்பே இல்லை. அரும்பு அவிழ்ந்த பூக்களாற் கட்டப்பெற்ற மாலையை அணிந்துகொண்டு அமைதியாக வாழ்கின்றனன் கோதை. இந்நிலையில் சிறுமதி மன்னர்கள் சிலர் அவனுக்குச் சீற்றத்தை விளைவிக்கின்றனர். அவர்கள் உறங்கிக்கொண்டிருக்கும் அரிமாவின்மீது சிறு நரி பாய்ந்தது போன்ற நிலையை உண்டாக்குகின்றனர்.

சேரன் சீறி எழுகின்றான். தண்டெடுத்துச் சென்று மாற்றாருடைய நாடுகளையெல்லாம் மண்ணோடு மண்ணாக்குகின்றான். ஊர்களை அழிக்கின்றான். எல்லாம் இடுகாடாகின்றன; ஊர்கள் இருந்த இடங்களில் ஆனை அறுகம்புல் ஆள் உயரத்திற்கு வளர்கின்றது; காட்டுச் சுரைக்கொடி அடர்த்தியாகப் படர்கின்றது; தை மாதத்தில் மிகுதியாக உண்டாகும் வேளைச் செடிகள் நிமிர்ந்து பூத்துக்கிடக்கின்றன. இவற்றால் அங்கே ஊர்கள் இருந்தன என்பதற்கு அடையாளம் கூட அறிந்துக்கொள்ள முடியவில்லை.

இந்நிலையைக் கண்ணுறுகின்றவர்கள் ஏனையோரிடம் இதனைக் கூறுகின்ற பாணியில் கவிதையை அமைக்கின்றார் கவிஞர்.

அவருடைய கவிதை இஃது:

வேரறுகை பம்பிச் சுரைபடர்ந்து வேளைபூத்
தூரறிய லாகா கிடந்தனவே—போரின்
முகையவிழ்தார்க் கோதை முசிறியார் கோமா
னகையிலைவேல் காய்த்தினார் நாடு. *

(பா - வே.) 5. தோராறிய

* இது தொல். பொருள் - புறத்திணையியல் 8-ஆம் நூற்பாவின் 'குன்றாச் சிறப்பின் கொற்றவள்ளையும்' என்பதற்கு நச்சினார்க்கினியரால் எடுத்துக்காட்டாக ஆளப்பெற்றுள்ளது.

இது பகைப்புலம் பழித்தல்; கோதையின் கோபத்திற்கு ஆளானவர்களுடைய நாட்டின் நிலையைக் கூறுவது.

விளக்கம்: வேர் அறுகை - ஆனை அறுகம் புல் கீழே வேர் ஓடி. பம்பி - பரவி; நெருங்கி வளர்ந்து. சுரை - பேய்ச்சுரைக்காய்க் கொடி. வேளை - தை மாதத்தில் அதிகமாக வளரும் வேளைச் செடி முகை அவிழ் தார்க் கோதை - அப்பொழுதுதான் விரிந்த மொட்டுக்களாலான மாலையைச் சூடிய சேரன். கோதை - சேரன். முசிறியார் கோமான் - முசிறி என்ற துறைமுகப் பட்டினத்தின் தலைவனுடைய. நகையிலை வேல்காய்த்தினார் நாடு - ஒளி பொருந்திய இலைபோன்ற வேலைப் போருக்குத் தூண்டிய பகைவருடைய நாடு.

முசிறி - சேரநாட்டின் பெரிய துறைமுகப் பட்டினம். இது சுள்ளியம் பேரியாறு கடலொடு கலக்குமிடத்தில் உள்ளது. முற்காலத்தில் (கிறித்துவின் காலத்திற்கு முன்பே) மேற்புல நாடுகளின் மரக்கலங்கள் மிளகு முதலியன கொள்ளற்கு மிகுதியாகத் தங்கின இடம் இது.

> ' சேரலர்,
> சுள்ளியம் பேரியாற்று வெண்ணுரை கலங்க
> யவனர் தந்த வினைமாண் நன்கலம்
> பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
> வளங்கெழு முசிறி ' *

என்ற அகப்பட்டடிகளால் இதனை அறியலாம். பெரிபுளூசு, தாலமி, பிளினி முதலிய மேற்புல யாத்திரிகருடைய குறிப்புக்களும் இதனை வலியுறுத்துகின்றன. இப்பட்டினத்தைப் பாண்டியன் ஒருவன் வளைத்துப் பெரும் போர் புரிந்து அதன்கண் இருந்த சேரர்க்குரிய அழகிய உருவச் சிலையைக் கவர்ந்து சென்றனன் என்பது மேற் கூறிய அகப்பாட்டின்,

> வளங்கெழு முசிறி ஆர்ப்பெழ வளைஇ
> அருஞ்சமங் கடந்து படிமம் வவ்விய
> நெடுநல் யானை அடுபோர்ச் செழியன்

என்ற அடிகளால் அறியப்பெறும். (7)

* அகம் - 129.

[95]

# மீன்சேர் மதியனையான்

விற்கொடி கட்டி வாழும் வேந்தனது புகழ் எங்கும் பரவுகின்றது. எங்குச்சென்ருலும் மக்கள் மன்னனது புகழ் பாடுகின்றனர். இதைக் கவிஞரும் அறிகின்ருர். ஒருநாள் கவிஞரும் அவருடைய மாணுக்கர் ஒருவரும் வெளியே உலாவச் செல்லுகின்றனர். அவர்கள் வீடு திரும்பும்போது சுமார் மணி ஏழு இருக்கும். அன்று முழுமதியநாள். வானத்தில் அது வனப்போடு ஒளிர்கின்றது; வானமெங்கும் விண்மீன்கள் கண்ணைச் சிமிட்டிப் பார்ப்பனபோல் மின்னிக்கொண்டிருக்கின்றன. இருவரும் பல்வேறு செய்திகளைப் பற்றி உரையாடிக்கொண்டு வருகின்றனர். வானவன் புகழும் அவர்களது உரையாடலில் இடம் பெறுகின்றது.

மாணுக்கர்: கவிஞர் பெருமானே, கோதையின் ஆட்சியிலுள்ள நிலப்பரப்பு எத்துணை அளவு?

கவிஞர்: அதுவா? அதற்கு அளவே இல்லை. இதோ பார், வானத்தை. அதன் அகற்சி எவ்வளவோ அவ்வளவு விரிவுடையது கோதையின் நிலப்பரப்பு.

"வானிற்கு வையகம் வென்றது!"

மாணுக்கர்: ஆகா, எவ்வளவு பெரிய நாடு! இந்தப் பெரிய நாட்டை ஆளும் வேந்தனின் கீழ் எத்தனைக் குறுநிலமன்னர்கள் உள்ளனர்?

கவிஞர்: தம்பீ, வானத்தை உற்று நோக்குவாயாக. வான வெளியில் எத்தனை விண்மீன்கள் மின்னுகின்றன? விண்மீன்கள் எத்துணையோ அத்துணையர் சிற்றரசர்கள்.

"வானத்து, மீனிற் கனையார் மறமன்னர்."

மாணுக்கர்: மிக நன்று, பெரியீர், அந்த வேந்தன் எத்தகையவன்?

கவிஞர் : கீழ்வானத்தைப் பார். முழுமதியம் எத்துணை அழகாக விண்ணில் எழும்பிக் கொண்டிருக்கின்றது! அந்தச் சந்திரனைச் சுற்றியுள்ள தாரகைகளை நோக்குவாயாக. நமது அரசன் அந்த வண்மதியை ஒத்தவன்.

"வானத்து, மீன்சேர் மதியனையன்."

மாணுக்கர் : தாங்கள் தரும் விளக்கம் எனக்கும் கவிதை யுள்ளத்தைத் தருகின்றதே. வள்ளால், வானத்தைக் கொண்டே எல்லாவற்றையும் விளக்கிவிட்டீர்கள்! இது வியப்பினும் வியப்பாக இருக்கின்றது.

கவிஞர் : அதோ இந்தப் பக்கமாகத் திரும்பிப் பார். அவன் ஆட்சியிலுள்ள கொல்லிமலையும் விண்ணை முத்தமிட்டுக்கொண் டிருப்பது தெரிகின்றதா? நமது வேந்தனும் வானவன்தானே. வானவனை எண்ணும்போது வானிலுள்ள பொருள்களே உவமைகளாக அமைவதில் என்ன வியப்பு?

"விண்ணுயர் கொல்லியார்
கோன்சேரன் கோதையென் பான்."

கோதையின் புகழைப்பற்றிப் பேசிவந்த பேச்சே பாடலாக அமைந்துவிடுகின்றது.

அப்பாடல் இது :

வானிற்கு வையகம் வென்றது வானத்து
மீனிற் கனையார் மறமன்னர்—வானத்து
மீன்சேர் மதியனையன் விண்ணுயர் கொல்லியார்
கோன்சேரன் கோதையென் பான்.

இது சேரனது புகழ் கூறுவது.

விளக்கம் : வையகம் - பூமி. வென்றது - ஒத்தது (உவம உருபு). வானத்து மீனிற்கு - விண்ணில் காணப்பெறும் நட்சத்திரங்களுக்கு. அனையார் - ஒப்பாராயினர். மீன் சேர் மதியனையன்-நட்சத்திரங்களைச் சேர்ந்துள்ள முழுமதியத்தை ஒத்துள்ளான். விண்ணுயர் கொல்லியார் கோன் - வானத்தை அளாவும் கொல்லிமலையிலுள்ளார்க்கு அரசன். கோதை - சேரனுக்குரிய பல பெயர்களுள் ஒன்று.

உவமை நயம் பாட்டினைச் சிறப்பிக்கின்றது. கோதையின் புகழும் இதனால் சிறந்து பொலிகின்றது. (8)

(பா - வே.) 3. போன்றது. 5 - 8. மீனிற்கு மின்னனைய ராகு மறமன்னர்.

[96]

# வெற்றிவேல் விழா

சேரனை எதிர்த்த பகைவர்கள் யாவரும் இறந்துபடுகின்றனர். சேரன் வெற்றிபெற்று வாகை சூடுகின்றான். பகைவரை வென்று வெற்றிபெறுவதற்குத் துணையாக இருந்த வெற்றிவேலுக்கு விழா எடுக்கின்றான். எத்தனையோ மன்னர்களைக் கொன்று சாய்த்த அந்த வேலைப் பகைவரின் மார்பிலிருந்து பறித்துக்கொண்டு வந்து பீலி அணிந்து மாலைசூட்டுகின்றனர் வீரர்கள். அதன் கைப்பிடியில் புனுகு நிறைந்த சந்தனத்தை அப்புகின்றனர்.

வேலின் ஒருபக்கத்தில் மரணத்தை முத்தமிட்ட மாற்றாரின் புலவு நாறுகின்றது; அதன் மற்றொரு பக்கத்தில் சந்தனத்தின் நறுமணம் வீசுகின்றது. ஒருபக்கம் செஞ்சாந்தின் மணங்கண்டு வண்டுகள் வட்டமிட்டுப் பண்ணிசைக்கின்றன; மற்றொருபக்கம் புலால் நாற்றம் வீசுவதைக் கண்டு குறுநரிகள் சூழ்ந்துகொண்டு ஊளையிடுகின்றன. வேலிற்கு விழா நடத்திய வீரர்கள் வேறு வினையின்பொருட்டு வேற்றிடஞ் சென்று திரும்பியபொழுது இக் காட்சியினைக் காண்கின்றனர்; மகிழ்கின்றனர். தங்களைத் தவிர வண்டினங்களும் நரியினங்களும் விழாவில் பங்கு பெறுவதைக் கண்டு கழிபெருங் களிப்பெய்துகின்றனர்.

இந்த நிகழ்ச்சியைக் காணும் படைஞன் ஒருவன் மற்றொரு வனுக்குக் கூறும் பாணியில் பாட்டிசைக்கின்றார் பாவலர்.

அப்பாடல் இது :

> **அரும்பவிழ்தார்க் கோதை யரசெறிந்த வெள்வேல்**
> **பெரும்புலவுஞ் செஞ்சாந்தும் நாறிச்—சுரும்பொடு**
> **வண்டாடும் பக்கமு முண்டு குறுநரி**
> **கொண்டாடும் பக்கமு முண்டு. ***

---

(பா - வே.) 4. வொள்வாள். 13. யுண்டாடு.

* இது தொல் - பொருள். புறத்திணையியல் 36-ஆம் நூற்பாவின் 'வாண் மங்கலத் துக்கு' எடுத்துக்காட்டாக நச்சினார்க்கினியரால் எடுத்தாளப்பெற்றுள்ளது.

இது கோதையின் வேல்விழாக் கூறி அவன் புகழ் பாடுவது.

விளக்கம்: அரும்புஅவிழ்தார்க் கோதை - அரும்பு அப்பொழுது தானே கட்டவிழ்ந்த பூமாலே சூடிய சேரன். அரசு எறிந்த வெள் வேல் - மாற்றரசர்களைக் குத்திச் சாய்த்த வேலானது. பெரும் புலவும் செஞ்சாந்தும் நாறி - கொழுவில் ஊனும் பிடியில் சந்தனமும் கமழ்ந்து. சுரும்பொடு வண்டாடும் - தேனீக்களோடு வண்டுகள் மொய்க்கும். பக்கமும் உண்டு - (கைப்பிடிப்) பக்கமும் உள்ளது. குறுநரி கொண்டாடும் பக்கமும் உண்டு - ஊன் ஒட்டிக்கொண்டிருப்பதன் காரணமாகக் குள்ளநரிகள் அனுபவிக்கின்ற (கொழுப்) பக்கமும் உள்ளது.

இப்பாடல் 'நிரனிறைப் பொருள் கோளுக்கு எடுத்துக்காட்டு. புலால் நாறலால் குறு நரியும், செஞ்சாந்து நாறலால் வண்டினமும் கொண்டாடும் என்று கொள்க. (9)

# தாயர் - மகளிர் போராட்டம்

மாலை நேரம். வண்டுகள் மொய்க்கும் வண்ணமலர் மாலையைச் சூடிவரும் கோதை உலா வருகின்றான். அரண்மனை வாயிலிலிருந்து உலா புறப்படுகின்றது. அரசன் தாவிச்செல்லும் குதிரைகள் பூட்டிய தேரில் வீற்றிருக்கின்றான். சேரன் உலா வருவதை எல்லோரும் நன்கு அறிவர்.

ஓர் இல்லத்தில் தாயும் பருவமடைந்த அவளுடைய மகளும் வசிக் கின்றனர். தன் மகள் சேரனைக் கண்ணுற்றால் அவளுக்குக் காதல் நோய் பற்றிவிடும் என்று அஞ்சுகின்றாள் அன்னை. ஆதலால் வாயிற்கதவை அடைத்து உட்கட்டிற்குச் செல்லுகின்றாள். அன்னை அந்தப்புறம் அகன்றதும் மகள் கதவைத் திறக்கின்றாள்; பவனி வரும் பார்த்திபனைப் பார்க்கவேண்டுமென்று துடிக்கின்றது அவளது உள்ளம்; மன்னனை எதிர்நோக்கி நிற்கின்றாள். உள்ளே சென்றிருந்த அன்னை கதவு திறக்கும் ஒலியைக்கேட்டுத் திரும்பவும் வந்து கதவை அடைக்கின்றாள்; பிறகு வீட்டினுள் சென்றுவிடுகின்றாள். மறுபடியும் கதவைத் திறந்துகொண்டு நிற்கின்றாள் மகள். இங்ஙனம் கதவு பலமுறை மூடப்பெற்றும் திறக்கப்பெற்றும் அலைபடுகின்றது. இதனால் கதவின் இருப்புக் குமிழ் ஆடுகின்றது; கதவின் குடுமியும் திறக்கத் திறக்கத் தேய்கின்றது.

இப்படி ஒரு வீடா? பல வீடுகள். மன்னனைக் கண்டால் தம் மக்கள் மால்கொண்டுவிடுவர் என்று கதவுகளைத் தாழிட்டு அடைக் கின்றனர் தாயர். காவலனைக் கண்டு களிக்கவேண்டுமென்று கதவுகளைத் திறக்கின்றனர் காரிகையார். காதல் உள்ளத்திற்கும் காப்புள்ளத்திற்கும் இடையே நடைபெறும் போராட்டத்தில் கதவு இடைநின்று பெரும்பாடு படுகின்றது.

மேற்கூறிய நிகழ்ச்சிகளை விளக்கும் கவிஞரது பாடல் இது :

நாயி ரடைப்ப மகளிர் திறந்திடத்
தேயத் திரிந்த குடுமியவே—ஆய்மலர்
வண்டுலா அங் கண்ணி வயமான்றேர்க் கோதையைக்
கண்டுலா அம் வீதிக் கதவு. *

இது கைக்கிளை ; உலாவினைக் காணவிடாத செவிலியர்க்கும் காணவிழையும் காரிகையார்க்கும் இடையே நடைபெறும் போராட்டத்தைக் காட்டுவது.

*விளக்கம் :* குடுமி - கீலின்றி நிலையோடு பொருந்துமாறு அமைந்த கதவின் கீழும் மேலும் அமைந்த முனைக்குமிழ். தேயத்திரிந்த குடுமியவே - வாயிற் கதவின் குடுமிகள் திரிந்து திரிந்து தேய்கின்றன. 'குடுமியவே' என்ற பன்மையால் பல வீடுகளில் இச் செயல் நடைபெறுவதை அறிகின்றோம். வண்டுலாம் கண்ணி - வண்டுகள் மொயத்துக்கொண்டிருக்கும் கண்ணி. கண்ணி - தலையில் சூடும் மாலை. வயமான்தேர் - வலிய குதிரைகள் பூட்டிய தேரில் உலா வருகின்ற. கோதை - சேரனின் குடிப் பெயர்களுள் ஒன்று.

பாட்டில் இளம்பெண்ணின் காதல் துடிப்பு நிழலிடுகின்றது. வண்டுலா அங், கண்டுலா அம் என்பதிலுள்ள அளபெடைகள் முறையே ஏக்க பாவத்தையும் சோக பாவத்தையும் காட்டுகின்றன. (10)

---

* வருவார் கொழுநர் எனத்திறந்தும்
வாரார் கொழுநர் எனவடைத்தும்
திருகுங் குடுமி விடியளவுந்
தேயுங் கபாடந் திறமினோ

என்ற போருக்குச் சென்ற கொழுநரின் வரவினை எதிர்பார்த்து ஏங்கி நிற்கும் மகளிரின் நிலையினைக் காட்டும் கலிங்கத்துப்பரணியின் தாழிசை (தாழிசை - 69) ஈண்டு நினைவிற்கு வருகின்றது.

# இஃது அரசனுக்கு அழகா?

மாந்தை மன்னனாகிய சேரன் ஒருநாள் மாலை உலா வருகின்றான். அவனைக் காணும் காரிகையார் அவன்மீது கழிபெருங்காதல் கொள்ளுகின்றனர். ஊணும் உறக்கமுமின்றி வாடுகின்றனர். அவர்களின் கைவளையல்கள் நழுவி விழுகின்றன; அவர்களுடைய உடலெங்கும் பசலை பாய்கின்றது.

இந்நிலையைக் கவிஞர் ஓரங்க நாடகம்போல் அமைத்துக் காட்டுகின்றார். காரிகை ஒருத்தியிடமிருந்து தோழியொருத்தி மாந்தையரசனிடம் தூது செல்லுகின்றாள்; அரசனைக் கண்டு இவ்வாறு கூறுகின்றாள் :

"மலையை நிகர்க்கும் மார்பினையுடைய மாமன்னா! வணங்கா முடிகளையும் வணங்கவைக்கும் வேற்படைகளையுடைய மாந்தைக் கோவே! வளையல்கள் அணிந்த வனப்புடைய வனிதையர்களின் உடலையும் உள்ளத்தையும் குலைப்பது நின் செயலுக்கு அழகாகுமோ? அந்த மங்கையரை ஈன்ற அன்னைமார் நின்னைச் செந்நெறியுடைய செங்கோலன் அல்லன் எனத் தூற்றுகின்றனர். உனக்கு எதற்கு இந்தக் கெட்ட பெயர்? நின் தகுதிக்கு இஃது ஏற்றதல்லவே" என்கின்றாள்.

தோழி தூது செல்வதாகக் கூறுவது கற்பனை. கவிஞர் தன் கருத்தினை அல்லது தான் கண்ட நிலையினை இங்ஙனம் புலப் படுத்துவது கவிதை மரபு.

கவிஞரது பாடல் இது :

> வரைபொரு நீண்மார்பின் வட்கார் வணக்கும்
> நிரைபொரு வேன்மாந்தைக் கோவே—நிரைவளையார்
> தங்கோலம் வவ்வுத லாமோ வவர்தாய்மார்
> செங்கோல னல்ல னென.

---

(பா. வே.) 3. வாராச்.

இது கைக்கிளை ; மன்னனிடம் நங்கையின் தோழி கூறுவது.

**விளக்கம் :** வரைபொரு நீள்மார்ப - மலைபோன்ற அகன்ற மார்பை யுடைய மன்னனே. வட்கார் வணக்கும் - பகைவரை வணங்கச் செய்ய வல்ல. நிரைபொரு வேல் மாந்தைக் கோவே - வரிசை வரிசையாக வடித்த வேல்களை வைத்திருக்கும் மாந்தை நகரின் மன்னனே. மாந்தை - சேரநாட்டி லுள்ள ஒரு கடற்கரை நகரம். நிரை வளையார்தம் கோலம் வவ்வுதல் ஆமோ -வரிசையாக வளையணிந்த மகளிரது உடல் வனப்பும் மனநிலையும் கெடும்படியாகச் செய்தல் உனக்குத் தகுமா. வவ்வுதல் - பறித்தல். ஒன்னாரை யும் உவந்தாரையும் ஒரு படியாக நினைப்பது குற்றந்தானே என்பது தோழியின் குறிப்பு.

தோழியின் நகைச்சுவை பொதிந்த பேச்சு அனுபவித்து மகிழத் தக்கது. (11)

[99]

# பொன்னிறமே உயர்ந்தது !

உலா வந்த சேரனைக் கண்ட சேயிழையாள் ஒருத்தி அல்லும் பகலும் அவனையே நினைந்து நைந்துருகுகின்றாள். அவனது அழகில் அவள் தன்னையே மறந்து காதல் வெள்ளத்தில் மூழ்குகின்றாள். நாட்கள் ஆக ஆக வேதனையால் வாடுகின்றாள் அதன்விளைவாக அவளது மாமைநிறம் அழிகின்றது; மேனியில் பசலைநிறம் படர்கின்றது. இதனைக் கண்ணுற்ற அவள் தன் நெஞ்சினை நோக்கிக் கூறுகின்றாள் :

"நெஞ்சமே, தாவிப் பாயும் குதிரைகள் பூட்டப்பெற்ற தேர்ப் படையையுடைய சேரமன்னன் தனக்கேற்ற பரிகள் பூட்டப்பெற்ற தேரின்மீது உலாவருங்கால் அவனைக் கண்ட மகளிர் இழப்பது மாமைநிறம் மட்டிலுந்தானே. அதனால் குறைவு ஒன்றுமில்லை. அதற்குப்பதிலாக என் உடல் முழுவதும் பொன்னூறினாற்போன்று உடலெங்கும் பரவியிருக்கும் பசலைநிறம் அதனைவிடப் பன்னூறு மடங்கு பயனுடையதுதானே. யான் இழந்த பருவ அழகைவிடப் பெற்ற மாமைநிறம் அதிகமாக இருக்கும்பொழுது நீ ஏன் கவலை கொள்ளுகின்றாய் ? வருந்தாதே" என்கின்றாள்.

நங்கையின் மனநிலையைக் காட்டும் கவிஞரது பாடல் இது :

> வாமான்றேர்க் கோதையை மான்றேர்மேற் கண்டவர்
> மாமையே யன்றோ விழப்பது—மாமையிற்
> பன்னூறு கோடி யுருதோவென் மேனியிற்
> பொன்னூறி யன்ன பசப்பு.

இது கைக்கிளை; தலைவி தன் நெஞ்சை நோக்கிக் கூறுவது.

விளக்கம்: வாமான் தேர்க்கோதை - தாவுகின்ற குதிரைகள் பூட்டிய தேர்ப்படையையுடைய சேரன். வாவுதல் - தாவுதல். மான் தேர்மேல் கண்டவர் - ஏற்ற குதிரைகள் பூட்டிய உலாத் தேர்மீது கண்ட மங்கையர். மாமை - மாந்தளிர் போன்ற நிறம். மாமையில் - மாமையைக் காட்டிலும். பன்னூறு கோடி - பல நூறு கோடி. உருதோ - அடையாதோ. மேனி - உடல். பசப்பு - பசலை நிறம்.

சேரனைக் காதலித்துப் பெற்ற பசலையாதலின், பசலைநிறம் மாமையைவிடப் பன்னூறு மடங்கு உயர்ந்ததாகின்றது. நெஞ்சுக்குக் கூறும் பாணியில் சேரனைப் பழிக்கும் தொனியும் காணப்பெறுகின்றது. (12)

(பா - வே.) 11. பழுதோவென்.

# காதல் நெருப்பு

அவள் சிறு குழந்தையாக இருந்தபொழுது மிகத் துடுக்காக இருப்பாள். 'துருதுரு' வென்று இங்கு ஓடுவாள்; அங்கு ஓடுவாள். கண்ட பொருள்களையெல்லாம் வாங்கித் தரும்படி ஓயாது தொல்லை தருவாள். எதற்கெடுத்தாலும் சண்டித்தனம் செய்வாள். ஆனால், பெற்றோர்கள் மட்டுமின்றி அக்கம்பக்கத்திலுள்ளாரும் அவளுடைய கூர்த்தமதியைக் கண்டு அவளிடம் அளவற்ற அன்பும் பரிவும் காட்டிவந்தனர். அவள் ஏதாவது ஓர் ஏக்கம் பற்றி மனம் நொந்து அழுதுகொண்டிருந்தால், அக்கம்பக்கத்திலுள்ள யாராவது ஒருவர் அவளைத் தோளில் தூக்கிக்கொண்டு கடைத்தெருவில் பல இடங்கட்குச் சென்று பராக்குக் காட்டுவர்; பொம்மைகள் வாங்கித்தருவர். கோயிலுக்குத் தூக்கிச் சென்று சுவாமியைக் காட்டுவர். ஆற்றிற்கோ குளத்திற்கோ தூக்கிச்சென்று பலவிதமான வேடிக்கைகளைக் காட்டுவர். தாம் குளித்த பிறகு அவளையும் குளிப்பாட்டுவர். இவையெல்லாம் அவளது அறியாப் பருவத்தில் நிகழ்ந்தவையாகும்.

இங்ஙனம் அவள்பால் பரிவும் ஊக்கமும் காட்டிய ஊரார் அவள் பருவமடைந்து திருமண வாழ்க்கையில் புகும் நிலையிலும் அவளிடம் ஆர்வமும் அக்கறையும் காட்டுவது இயல்பு. இதை எவரும் எதிர்பார்ப்பர். அந்தப் பெண்ணும் இதனை எதிர்பார்ப்பது இயல்புதானே!

x x x

அவள் பருவப் பெண்ணாக இருக்கும்பொழுது மாலை நேரத்தில் உலாவரும் சேரனைப் பார்க்கின்றாள். அவனையே திருமணம் செய்துகொள்ளவேண்டும் என்று துடிதுடிக்கின்றாள். அவளது காதல், வெறியாக மாறிவிடுகின்றது. அவனை எப்படியாவது அடையவேண்டும், அணையவேண்டும் என்று அவளது நெஞ்சு அழன்று கொதிக்கின்றது. என்னசெய்வது? தானாகச் சாதித்துக்கொள்ளக்கூடிய செயலா இது? இந்த நிலையில் அவள் தனியாக ஓரிடத்தில் அமர்ந்துகொண்டு என்னவெல்லாமோ சிந்திக்கின்றாள். அந்த இடத்தில் யாரும் இல்லை. தன்னைப் பாராட்டிவந்த ஊராரை நினைக்கின்றாள்; அவர்கள்

தன் முன்னிலையில் நிற்பதாக ஒருவித பகற்கனவு காண்கின்றாள்; ஒருவித உருவெளித்தோற்றம் அவளது கண்ணுக்குத் தென்படு கின்றது. அதனை நோக்கி இவ்வாறு பேசுகின்றாள்.

"நீரும் நிழலும் போலும் பிறர்க்குதவும் ஊரார்களே, என் குறைக்குச் சற்றுச் செவி சாயுங்கள். ஈரநெஞ்சமும், விருப்பு வெறுப்பற்ற நல்லுணர்ச்சியும் உங்கள் உடன்பிறந்த பண்புகள் அல்லவா? போர்க்களத்தைக் காண விருப்பங்கொள்ளும் மதயானை களையுடைய பூழியர்கோனின்பால் காதல் கொண்டேன். அந்தக் காதல் என் நெஞ்சகத்தில் கிடந்து தீயைப்போல் எரிக்கின்றது. அந்த நெருப்பின் வெம்மையைத் தாங்கிக்கொள்ளும் ஆற்றல் எனக்கு இல்லை. அருளுள்ளம் படைத்த நீங்கள்தான் அதனின்றும் என்னைக் காத்தருளவேண்டும்" என்கின்றாள்.

நங்கையின் மனநிலைக்குக் கவிஞர் தந்த பா வடிவம் இது:

> நீரு நிழலும்போ னீண்ட வருளுடைய
> ஊரிரே யென்னை யுயக்கொண்மின்—போரிற்
> புகலுங் களியானைப் பூழியர்கோக் கோதைக்
> கழலுமென் னெஞ்சங் கிடந்து.

இது கைக்கிளை; தலைவி ஊரினர்க்கு உரைப்பது.

**விளக்கம்:** நீரும் நிழலும் போல் நீண்ட அருளுடைய - நீர்போன்ற ஈர நெஞ்சினையும் நிழல்போன்ற தாராளமான அருளையும் உடைய. உயக் கொண்மின் - யான் பிழைக்கும்படியாகக் காப்பாற்றுங்கள். போரிற் புகலுங் களியானை - போரில் பெரு விருப்பங்கொண்ட மதக்களிப்புள்ள யானை. புகலும் - விரும்பும். பூழியர்கோக் கோதைக்கு - பூழி நாட்டரசனான கோதை யின் காரணமாக. அழலும் என் நெஞ்சம் கிடந்து - காதல் நோயால் என் நெஞ்சு சதா கொதித்த வண்ணமுள்ளது. ஊரிரே, என்னை உயக்கொண்மின் என்றவாறு.

'அழலும் என் நெஞ்சம் கிடந்து' என்ன இறுதியடியைத் திரும்பத் திரும்பப் பாடிப் படித்தால் தலைவியின் காதல் துடிப்பு ஒருவாறு நமக்கும் தட்டுப்படும். (13)

(பா - வே) 13. கனலுமென்.

# ஊர்வாயை மூட முடியுமா?

கள்ளின் மயக்கினைவிடக் காதல் மயக்கம் உறைப்பானது. காதல்வெறி கொண்டவர்களின் மனப்பாங்கை எளிதில் அறிந்து கொள்ளமுடியாது. காதல் வெறியோ மிகவும் பொல்லாதது; காதல் காரணமாகப் பிறர் பழிதூற்றும்பொழுது (அலர் தூற்றும்பொழுது) அதில் சம்பந்தப்பட்டவர்கட்கு மனநிறைவே ஏற்படுகின்றது. சாதாரணமாக ஒருவருக்குக் கிட்டாத பெருமை தமக்குக் கிட்டி விட்டதாகத் தமக்குள் ஒருவித மகிழ்ச்சி அலை பொங்கி எழுவது தான் இதற்குக் காரணம் என்று கருதலாம். பட்டம் இல்லாதவர் கட்கு உயர்ந்த பட்டங்களைப் போட்ட முகவரியுடன் கடிதங்கள் வருங்கால் ஒருவித மகிழ்ச்சி உண்டாவதில்லையா? அதுபோன்ற ஒருவித மகிழ்ச்சி இவர்கட்கும் உண்டாகின்றது. அதுவும் பெரிய இடத்துத் தொடர்புடன் அலர் எழுந்துவிட்டால் அதில் சம்பந்தப் பட்ட சாதாரண நிலையிலுள்ளவர்க்கு ஏற்படும் மகிழ்ச்சியே ஒரு தனி நிலை.

x x x

உலா வருங்கால் சேரனைக் காணும் குழல்மொழி நங்கை யொருத்தி காதல் கொள்ளுகின்றாள். அதனால் அவளது மன அமைதி குலைந்து விடுகின்றது. உண்ணும் உணவும் அவளுக்கு மருந்தாகிவிடுகின்றது; உறக்கமும் சரியாக வருவதில்லை. அவனையே நினைந்து நினைந்து உருகி நெகிழ்கின்றாள்; வளையல்களும் தாமாகக் கழன்றொழிகின்றன. இவற்றையெல்லாம்) கண்ட ‘அலர் வாய்ப் பெண்டிர்’ பலர் பழி மொழியத் தொடங்குகின்றனர். அவளைப்பற்றிய அம்பலும் அலருமாக ஊரெல்லாம் பரவி விடு கின்றது. அந்த நங்கையின் அன்னையும் இதனை அறிகின்றாள். தன் மகளை இற்செறிக்கின்றாள்.

இந்நிலையில் பிறிதொருநாள் சேரன் உலா வருகின்றான் நங்கையோ ஊரார் பழிமொழியையோ (scandal) அன்னையின் அலைத்தலையோ பொருட்படுத்தவில்லை. 'ஊரவர் கௌவை எருவாக அன்னை சொல், நீராக' * அவளது காதல் நோய் செழித்து வளர் கின்றது. ஆகவே, சேரனைக் கண்டு மகிழவேண்டும் என்ற துடிப்புடன் வாயிலை நோக்கி வருகின்றாள். இதனைக் காணும் அன்னை ஓடோடியும் வந்து அவளை வீட்டுக்குள் தள்ளிக் கதவையும் அடைத்துத் தாழிட்டு விடுகின்றாள். 'கல் நெஞ்சமுடைய அன்னை!' என்று எண்ணிய நிலையில் அமர்ந்திருந்த அவளிடம் தோழி வருகின்றாள். அவளிடம் நடந்தவற்றை ஒன்றுவிடாமல் சொல்லித் தன் ஆத்திரத்தையும் சேர்த்துக் கொட்டுகின்றாள் அந்நங்கை :

"தோழி, கடலைப் போன்ற மிகுந்த சேனைகளையுடைய சேரனை இன்று பார்க்கமுடியாதபடி வெளிவாயிலிலுள்ள ஒரே கதவையும் அடைத்துவிட்டாள் என் அன்னை. இது வீணான செயல் என்பதைப், பாவம், அவள் அறியவில்லை ! கதவைத் தாழிட்டுவிட்டாள் என்றால் காதல் காற்றிலா பறந்துவிடும்? அந்த மன்னன் பெயரையும் என் பெயரையும் இணைத்துப் பேசும் மகளிரின் வாயும் இதனால் அடை பட்டாவிடும்? அல்லது ஆரவாரம் செய்யும் அணங்குகளின் வாயை இவளே சென்று அடைத்துவிடத்தான் முடியுமா? என்னே இவளது அறியாமை!" என்று ஏக்கத்தோடும் புன்னகையோடும் கூறு கின்றாள்.

இந்தக் காட்சியைக் காட்டும் கவிஞரின் சொல்லோவியம் இது :

**கடற்றானைக் கோதையைக் காண்கொடாள் வீணி**
**லடைத்தா டனிக்கதவ மன்னை—யடைக்குமேல்**
**ஆயிழையா யென்னை யவன்மே லெடுத்துரைப்பார்**
**வாயு மடைக்குமோ தான்.**

(பா - வே.) 3. காண் கொட்டாள்.

* குறள் - 1147.

இது கைக்கிளை; இற்செறிக்கப்பட்ட நங்கை தோழியிடம் கூறுவது.

விளக்கம்: கடல்தானைக் கோதையை - கடல்போன்ற அதிகமான வீரர்களைக்கொண்ட சேரனை. காண் கொடாள் - பார்க்கவே கூடாதென்று. வீணில் அடைத்தாள் தனிக்கதவம் அன்னை - யாதொரு பயனுமின்றி இருந்த ஒரே ஒரு கதவையும் அடைத்துவிட்டாள் தாய். அடைக்குமேல் - கதவை அடைக்கத்தான் முடியும். ஆயிழையாய் - ஆராய்ந்த அணிகளை அணிந்த தோழியே (அன்மொழித் தொகை). என்னை அவன்மேல் எடுத்துரைப்பார் - என்னையும் சேரனையும் இணைத்துப் பேசும் வம்பர்களது. வாயும் அடைக்குமோ தான் - வாயை அடைக்கமுடியுமா, என்ன?

'என்னை அவன்மேல் எடுத்துரைப்பார், வாயும் அடைக்குமோ தான்!' என்ற பகுதியை மீட்டும் மீட்டும் பாடும்பொழுது நங்கையின் எக்களிப்பு பாவம் தட்டுப்படுவதை அறியலாம்; அதன் அழகையும் அனுபவித்து மகிழலாம். (14)

[102]

# இவர்கட்கு எப்படித் தெரிந்தது?

இயற்கைவளஞ் சிறந்த சேர நாட்டின் மாந்தை நகரம் தனிச் சிறப்பு வாய்ந்தது. அங்கு நீர்வளத்திற்குக் குறைவில்லை ஊரைச் சுற்றிலும் புன்னைமரங்கள் செறிந்து காணப்பெறுகின்றன ; தென்னை மரங்கள் நாற்புறமும் சூழ்ந்து நகரை அணிசெய்கின்றன.

தோழிமாருடன் நீராடச் சென்ற நங்கையொருத்தி இந்த இயற்கைக் காட்சிகளை அனுபவித்துக்கொண்டே செல்லுகின்றாள். இந்த இயற்கை வளத்தைப்பற்றி உரையாடிச் செல்லும்போது தோழி யொருத்தி சேரநாட்டில் சுரபுன்னை மரங்கள் அதிகமாக உள்ளன என்றும், எங்குச் சென்றாலும் அந்த மலர்களின் மணத்தை நுகரலாம் என்றும் தான் கேள்வியுற்றவற்றைக் கூறுகின்றாள்.

இவர்கள் இங்ஙனம் உரையாடிக்கொண்டு தடாகக் கரையில் நின்றிருந்தபொழுது மாந்தை நகரைப் பார்வையிட வந்த சேரன் அதே தடாகத்திற்கு நீராட வருகின்றான். நங்கை அவனை நோக்கு கின்றாள். சேரனுடைய கம்பீரமான தோற்றம் அவளது உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது ; காதலுணர்ச்சி அவளை ஆட்கொண்டு விடுகின்றது. மகளிர் அனைவரும் நீராடி வீடு திரும்புகின்றனர்.

அன்றிரவு அவளுக்கு உறக்கமே வரவில்லை. எப்படி வரும்? புன்னையஞ் சோலையின் அழகு, புனல் வளம், தென்னஞ்சோலையின் செழிப்பு, சேரனுடைய கம்பீரமான தோற்றப்பொலிவு - இவை யாவும் அவளது மனத்தைவிட்டு அகலவில்லை. தோழிகூறிய சுரபுன்னை மலர்களின் மணமும் அவளது நினைவிற்கு வருகின்றது. இவற்றையே நினைந்து நினைந்து உருகுகின்றாள். இரவில் நீண்டநேரம் உறங்காது படுக்கையில் புரண்டு கொண்டிருக்கின்றாள்.

இந்நிலையில் எப்படியோ சிறிது அவள் கண்ணயர்கின்றாள். உடனே கனவும் வந்துறுகின்றது. அதில் சேரன் வருகின்றான்; மெது வாக அவளுடைய உடலைத் தடவுகின்றான். துடித்தெழுகின்றாள் நங்கை. கனவு கலைந்துவிடுகின்றது; நினைவும் வருகின்றது. அதற்குப்

பிறகு அவள் தூங்கவே இல்லை. இந்த நிலையை அவள் யாரிடமும் சொல்லவில்லை. ஆயினும், இவள் மெலிவு, சோர்வு, உறக்கமின்மை, உணவு உண்ணாமை முதலியவற்றைத் தோழியர் எப்படியோ அறிந்து கொள்ளுகின்றனர். சிலநாட்கள் கழிகின்றன. ஒருநாள் தோழியர் அவளை நோக்கி, "அன்று இரவு எப்படி இருந்தது ?" என்று வினவு கின்றனர். நங்கை அவர்களின் வினாவிற்குப் பதிலிறுக்காமல் அதைப் பலவிதமாக மறைக்க முயலுகின்றாள். "நீ சொல்லா விட்டால் எங்கட்குத் தெரியாதா என்ன ?" என்று ஏளனச் சிரிப்புக் காட்டுகின்றனர் தோழியர்.

நங்கை அந்தக் கனவு நிகழ்ச்சியை நினைந்து பார்க்கின்றாள். "கனவில் கண்டதை இவர்கள் எப்படி அறிந்தனர் ?" என்ற சிந்தனை யுடன் அவர்கள் முகத்தை நோக்குகின்றாள் அக்காரிகை.

நங்கையின் இந்த நிலையைக் கவிஞர் அழகான சொல்லோவி யத்தால் நமக்குக் காட்டுகின்றார். அஃது இது :

> புன்னாகச் சோலை புனற்றெங்கு சூழ்மாந்தை
> நன்னாக நின்றலரு நன்னாடன்—என்னாகங்
> கங்கு லொருநாட் கனவினுட் டைவந்தான்
> என்கொ லிவரறிந்த வாறு.

இது கைக்கிளை; நங்கை நெஞ்சொடு நவில்வது.

**விளக்கம்:** புன்னாகச் சோலை - புன்னை மரங்கள் செறிந்த சோலை. புனல் தெங்கு - புனல் வளமும் தென்னைமரங்களும்; இவை சூழ்ந்தது மாந்தை நகரம். நல் நாகம் - நல்ல சுரபுன்னை ; இது மணத்திற் சிறந்த மலர்களைத் தரும். சேர நாட்டில் இம் மரங்கள் அதிகம். அலரும் - மலரும். ஆகம் - மேனி; உடம்பு. கங்குல் ஒரு நாள் - ஒரு நாள் இரவில். கனவினுள் தை வந்தான் - கனவில் வந்து தடவிக்கொடுத்தான். என் கொல் இவர் அறிந்த ஆறு - இதைச் சேடியர் எங்ஙனம் அறிந்தனர்.

இயற்கைவளம் செறிந்த மாந்தை நகரைச் சேரன் தனக்கு உரிமையாக வைத்திருத்தல் போல, சிறந்த மன்னர்குல மங்கையரை மணந்த மன்னன் எழில்நலம் நிறைந்த தன்னையும் உரிமை மகளிருள் ஒருத்தியாகக் கொண்டு கனவில் வந்து தன்னைத் தழுவிச் சென்றதாக நங்கையின் மயக்கம். (15)

[103]

# நிலை தடுமாறும் நெஞ்சு

உலா வந்த சேரனைப் பார்த்த சிலர் பார்க்காத பலரிடம் உலாவின் சிறப்பைப்பற்றிச் சிறப்பித்துப் பேசுகின்றனர். மார்பில் திகழ்ந்த மணிப்பூணைப்பற்றியும், மார்பில் அங்குமிங்குமாக அசைந்தாடும் மலர் மாலைகளைப்பற்றியும் அவர்கள் பாராட்டிப் பேசுகின்றனர். இதைக் கேள்வியுறும் நங்கையொருத்தி சேரனை ஒருநாள் பார்க்கவேண்டுமென்று அவாக்கொள்ளுகின்றாள். ' ஆய்மணிப் பைம்பூண் அலங்கு தார்க்கோதை ' என்ற உருவத்தை நினைந்த வண்ணம் இருக்கின்றாள் அவள்.

இந்நிலையில் சேரன் ஒருநாள் உலா வருகின்றான். அவன் ஏறி வரும் குதிரை இந்த நங்கையின் வீடு வரையிலும் வந்து விடுகின்றது. உட்கட்டிலிருந்தவள் கொட்டு முழக்கத்தைக் கேட்டு வாயிற்படி வரையிலும் விரைந்து வருகின்றாள். ஆனால், அவளது நாணமோ அவளது கையைப் பிடித்துப் பின்புறமாக இழுக்கின்றது ; பார்க்கச் சென்றவள் உடனே கதவடைத்துத் திரும்பிவிடுகின்றாள். ஆனால் மீண்டும் போவோமா, பேசாமல் இருந்துவிடுவோமா என்று மனம் ஊசலாடுகின்றது.

பெருஞ் செல்வராக இருந்த ஒருவர் காலக்கோளாற்றினால் எப்படியோ வறுமை நிலையை அடைந்து விடுகின்றார். இவ்வாறு நல்குரவு நிலையை அடைந்தஅவர் ஒரு செல்வரிடத்தில் கடனாகவோ அல்லது இனாமாகவோ கொஞ்சம் பொருள் பெறவேண்டுமென்று நினைத்துச் செல்லுங்கால், சற்றுத் துணிவோடேயே செல்லுவார். அவர் மாளிகையை அடைந்ததும் நாணம் வந்து தடுத்துவிடும்; மீண்டும் வீட்டை நோக்கித் திரும்பி விடுவார். வறுமையோ பழையபடி போய் வரத்தூண்டும் ; நாணமோ அதைத் தடுத்து நிறுத்தும். இவ்வாறு

அவரது மனம் இங்கு மங்கும் அலைந்து ஊசலாடும். இந்த நல் கூர்ந்தாரின் நிலையை ஒத்திருக்கின்றது நங்கையின் நிலை.

நங்கை தன்னுடைய மனநிலையைத் தோழியிடம் கூறுவதுபோல் கவிஞர் கவிதையை அமைத்துள்ளார்.

அந்தக் கவிதை இது :

ஆய்மணிப் பைம்பூ ணலங்குதார்க் கோதையைக்
காணிய சென்று கதவடைத்தேன்—நாணிப்
பெருஞ்செல்வ ரில்லத்து நல்கூர்ந்தார் போல
வருஞ்செல்லும் பேருமென் னெஞ்சு.

இது கைக்கிளை ; தலைவி தோழிக்கு உரைப்பது.

விளக்கம் : ஆய்மணிப் பைம்பூண் - ஆய்ந்தெடுத்த இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற பசும் பொன்னாலான அணிகலன்களையும், வெவ்வேறு இடத்திற் பிறந்த மணியும் பொன்னும் ஒன்று சேர்ந்து பூணாக விளங்கிய தன்மையைப்போல, வேந்தர் குலத்தில் பிறந்த கோதையும் மற்றொரிடத்திற் பிறந்த நானும் ஒன்று சேர்ந்து விளங்குவோம் என்பது நங்கையின் குறிப்பு.† அலங்குதார்க் கோதையை - அங்குமிங்குமாக அசையும் மாலையினை அணிந்த சேரனை. காணிய சென்று-பார்த்தனுபவிக்கவேண்டு மென்றுபோய். 'காணிய' என்பது 'செய்யிய' என்னும் வாய்பாட்டு வினையெச்சம். கதவடைத் தேன் நாணி - நாணத்தின் காரணமாகப் பார்க்காமல் கதவை மூடிவிட்டேன். பெருஞ் செல்வர் இல்லத்து நல்கூர்ந்தார்போல-புதிதாக வறுமையுற்றவர்கள் செல்வர் வீடுவரை சென்று நாணத்தினால் ஒன்றும் கேட்காமல் வீடுதிரும்பி

(பா - வே.) 7. கதவடைத்தே.

காவென்றும் சிந்தா மணிஎன்றும்
நீஎன்றன் கையி லள்ளித்
தாவென்(று) உரைக்கத் தரித்திரம்
பின்சென்று தள்ளி ஏனைப்
போவென்(று) உரைக்கவும் நாணம்அங்கே
என்ன போவ திங்கு
வாவென்(று) உரைக்கவும் வந்தேன்
விராலி மலைக் கந்தனே.

என்ற தனிப்பாடலை ஈண்டு எண்ணி மகிழ்க.

விடுவதுபோல. நல்கூர்ந்தார் - வறுமையடைந்தவர் (வினையாலணையும் பெயர்). வரும் செல்லும் பேரும் என் நெஞ்சு - எனது உள்ளம் நாணத்தினால் திரும்பும்; ஆசையினால் கதவருகில் செல்லும்; மீண்டும் நாணத்தினால் திரும்பிவரும்.

சேரனது அழகிய உருவம் சேயிழையாளின் மனக்கண் முன் வந்து நிற்கின்றது என்பதை, "ஆய்மணிப் பைம்பூண் அலங்கு தார்க் கோதை" என்ற சொற்றொடர் எடுத்துக்காட்டுகின்றது. "நெஞ்சு" என்ற சொல் நங்கையின் நெஞ்சை நமக்குக் காட்டுவது போல் தனிச்சீரில் அமைந்து கிடக்கின்றது.* (16)

† 230-ஆம் பக்க அடிக்குறிப்பு :

† பொன்னுந் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய வாயினுந் தொடைபுணர்ந்
தருவிலை நன்கல மமைக்குங் காலை
ஒருவழித் தோன்றியாங் கென்றுஞ் சான்றோர்
சான்றோர் பால ராப
சாலார் சாலார் பாலரா குபவே.

என்ற புறப்பாடல் (புறம் - 218) இவ்வாறு பொருள் கொள்ளுவதற்குத் துணைசெய்கின்றது.

* இவ்விடத்தில் தமயந்தியின் ஆடையைப் பாதி அரிந்துகொண்டு அவளைப் பிரிய நினைக்கும்போது அவனது மன நிலையைக் காட்டும்,

போயொருகால் மீளும் புகுந்தொருகால் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த அடுபாலின்—தோயல்
கடைவார்தம் கைபோல ஆயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம்.

என்ற நளவெண்பாப் பாடல் (பாடல்-283) நினைவிற்கு வருகின்றது. தமயந்தி யைப் பிரிய எண்ணும் நளனது மனம் தயிர் கடையும் ஆய்ச்சியர் கைபோல தமயந்திபால் செல்லுவதும் மீண்டு வருவதும் பின்னும் அவள்பால் போவது மாக இருந்தது என்ற கருத்து இப்பாடலில் நங்கையின் மனநிலையைக் காட்டும் கவிஞரின் கருத்துடன் ஒருவாறு ஒத்துள்ளதைக் கண்டு மகிழ்க.

[104]

# வாசலில் காத்துக்கிடக்கின்றதோ?

இரவு நேரம். மாலையில் உலாவந்த சேரனை நினைந்து நினைந்து உருகிக்கொண்டிருக்கின்றாள் நங்கையொருத்தி. சேரனது மார்பில் கிடந்து கவ்விக்கொண்டிருந்த ஆய்மணிப் பைம்பூணை நினைந்து நைகின்றாள்; அங்குமிங்கும் ஆடிக்கொண்டு மார்பில் புரண்டுகொண்டிருந்த தளிரோடு ஒழுங்கு பெறத் தொடுக்கப்பெற்ற மலர் மாலையை எண்ணி எண்ணி ஏங்குகின்றாள். பகைவரைச் சீறுவதுபோல் ஒளிர்கின்ற வேல் அவளது உள்ளத்தை வருத்துகின்றது. "'ஆ, இந்த ஆய்மணிப் பைம்பூணும் அலங்குதார்க் கோதையும்' என்ன தவம் செய்தனவோ அவனது மார்பில் கிடந்து புரள!" என்று எண்ணுகின்றாள்.

அதுவோ மார்கழி மாதம்; கடும்பனி பெய்யும் காலம். வாடையோ எலும்புகளைத் துளைப்பதுபோல் வீசிக்கொண்டிருக்கின்றது. அவள் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு புரண்டு புரண்டு படுக்கின்றாள். உறக்கம் வந்தால்தானே? காதல் நோய் அவளை வருத்துகின்றது. என்ன செய்வதென்று அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அதே அறையில் மற்றொரு பக்கத்தில் படுத்திருந்த தோழி, அவளது நிலையைக் கண்டு, "ஏன் உறக்கம் வரவில்லையோ!" என்று வினவுகின்றாள். அதற்கு இவ்வாறு மறுமொழி கூறுகின்றாள் அந்த நங்கை :

"தோழியே சேரனைக்காணும்பொருட்டு என் மனம் அவன்பால் சென்றுள்ளது. நேரமோ அதிகமாகிவிட்டது. போகும்போது ஒரு போர்வையைக்கூடக் கொடுக்க மறந்துவிட்டேன். பாவம், அது அவனைக் காணும் செவ்வி நோக்கி இந்தக் கடும்பனி இரவில் கையையே போர்வையாகக் கொண்டு * அவனது பெரிய வாயிலில் காத்துக் கொண்டிருக்கின்றதோ? அல்லது யாராவது அதனைத் தடுத்து நிறுத்தியிருப்பார்களோ? ஒன்றுந் தெரியவில்லையே." என்கின்றாள்.

---

* ஆடை யின்றி வாடையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழீஇப்
பேழையு ளிருக்கும் பாம்பென வுயிர்க்கும்
ஏழை யாளனைக் கண்டன மெனுமே.

என்ற சத்திமுற்றப் புலவரின் ''நாராய் நாராய்'' எனத்தொடங்கும் பாடற் பகுதியில் கையைப் போர்வையாகக் கொள்ளும் நிலை வருதல் காண்க.

நங்கையின் மனநிலை, உணர்ச்சி முதலியவை நல்ல வடிவம் பெற்று அழகிய சொல்லோவியமாக மிளிரும் பாடல் இது :

> கடும்பனித் திங்கட்டன் கைபோர்வை யாக
> நெடுங்கடை நின்றதுகொ லேழை—நெடுஞ்சினவேல்
> லாய்மணிப் பைம்பூ ணலங்குதார்க் கோதையைக்
> காணிய சென்றவென் னெஞ்சு.

இது கைக்கிளை ; தலைவி தோழியிடஞ் சொல்லுவது.

விளக்கம் : கடும்பனித்திங்கள் - மிகுந்த பனியினால் நடுங்கக்கூடிய மார்கழி மாதம். திங்கள் - மாதம். கை போர்வையாக - வலக்கையை இடத் தோளிலும், இடக்கையை வலத்தோளிலும் வைத்துப் பொத்திக்கொண்டு. நெடுங்கடை நின்றதுகொல் - பலர் காத்துக்கொண்டு நிற்கும் நீண்ட வாயிலில் செவ்வி பார்த்துக்கொண்டே நின்று விட்டதோ. கொல் - ஐயம் குறித்தது. 'நெடுஞ்சினவேல், ஆய்மணிப் பைம்பூண் அலங்குதார்க் கோதை' என்பது நங்கையின் மனத்தில் பதிந்து கிடக்கும் சேரனது உருவம். நெடுஞ் சினவேல் - பகைவரிடத்தில் மிகவும் சீற்றங்கொண்டதுபோல் ஒளிவிடும் வேல். ஆய்மணிப் பைம்பூண் - ஆய்ந்து எடுத்த இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற பசுமையான பொன்னாலான அணி. 'மணியும் பொன்னும் சேர்ந்து அழகிய அணிகலமானதுபோல நானும் சேரனும் சேர்ந்து விளங்குவோமா' என்பது ஏந்திழையின் குறிப்பு. அலங்குதார்க் கோதை - தளிருடன் ஒழுங்கு பெறத் தொடுக்கப்பெற்ற மலர் மாலை. காணிய - பார்க்கும் பொருட்டு (செய் யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.) 'நான் போவென்று சொல்லி என் நெஞ்சு போகவில்லை ; அது வாகவேதான் சென்றது' என்ற குறிப்பினை "என் நெஞ்சு" என்ற தொடர் தொனிக்கின்றது.

'காணிய சென்றஎன் நெஞ்சு' என்ற இறுதியடியைத் திரும்பத் திருப்பப் பாடிப் படித்தால் தலைவியின் காதல் துடிப்பும் ஏக்க பாவமும் தட்டுப்படுவதை உணரலாம். (17)

[105]

# பெட்டிப் பாம்பாகிவிட்டாளே!

ஊருக்கருகில் நெடுஞ்சாலையோரத்தில் ஓர் அழகிய பூஞ் சோலை. பருவம் வந்த மகளிர் பலர் அதில் விளையாடிக்கொண் டிருக்கின்றனர். அவர்களுள் ஒருத்தி உலாவருங்கால் சேரனைக் கண்டு அவன்மீது காதல் கொண்டவள். அதனால் அவளது உடலும் மெலிவுற்றிருந்தது. அந் நங்கை மன்னன்பால் கொண்டிருந்த காதலை மற்ற மகளிர் ஓரளவு அறிவர். அவர்கள் யாவரும் மன்னனுக்கும் அவளுக்கும் உள்ள தொடர்பை எடுத்துக்காட்டிப் பரிகாசம் செய் கின்றனர். இவளும் அவர்களிடம் தன் காதலைப் புலப்படுத்திக் கொள்ளும் வண்ணம் பேசுகின்றாள்:

"யாரோ குடநாட்டு மன்னனும்! அவன் வரட்டும் ஒரு கை பார்க்கின்றேன். அந்த வஞ்சியான் வரட்டும்! என் வெஞ்சினத்தைக் காட்டுகின்றேன். 'ஐயா, நீவீர் என்மீது காதல் கொண்டது உண்மையா?' என்று நேரிலேயே கேட்டுவிடுகின்றேன். அப்பொழுது உண்மை வெளிப்பட்டுவிடும்!" என்கின்றாள்.

இவ்வாறு அவள் ஆர்ப்பாட்டம் செய்துகொண்டிருக்கும் பொழுது எதிர்பாராதவிதமாகச் சேரனே அருகிலுள்ள சாலை வழி யாகக் குதிரையின்மீது வந்துகொண்டிருக்கின்றான். அவனை அந்த மகளிர் அனைவரும் காண்கின்றனர். வாய்க்கு வந்தபடியெல்லாம் வீம்பு பேசிக்கொண்டிருந்த நங்கை அவனைக் காணவும் பெட்டிப் பாம்பாகி விடுகின்றாள்; தவயோகிபோல் மௌனமாகின்றாள். அவள் காட்டிய சினம் காற்றில் அகப்பட்ட இலவம்பஞ்சுபோல் பறந்துவிடுகின்றது. காதலாகிக் கசிந்துருகுகின்றாள்; கண்களில் நீர் பெருகி நிற்கின்றது.

இதை அவளது தோழியர் யாவரும் காண்கின்றனர்; வியப் படைகின்றனர். "எவ்வளவு விரைவாக மனம் மாறிவிட்டது!" என்று மூக்கின்மேல் விரலை வைக்கின்றனர்.

இந்த நிகழ்ச்சிக்கு அழகிய வடிவம் அமைத்துக் கவிஞர் தரும் சொல்லோவியம் இது :

> வருக குடநாடன் வஞ்சிக்கோ மானென்
> றருகல ரெல்லா மறிய—வொருகலாம்
> உண்டா யிருக்கவவ் வொண்டொடியாள் மற்றவனைக்
> கண்டா ளொழிந்தாள் கலாம்.

இது கைக்கிளை; தோழி தன் நெஞ்சொடு சொல்லுவது.

விளக்கம்: வருக - வரட்டும். குட நாடன் - குட நாட்டு மன்னன். வஞ்சிக்கோமான் - வஞ்சிமாநகரின் வேந்தன். என்று - இப்படியெல்லாம் சீற்றத்துடன் ஆரவாரித்துக்கொண்டு. அருகலர் - பக்கத்திலுள்ள தோழியர், ஆயத்தார் முதலியோர். அறிய - தெரிந்துகொள்ளும்படியாக. ஒரு கலாம் நெடு நேரம் உண்டாய் இருக்க - ஒரு பெரிய ஆர்ப்பாட்டம் நீண்ட நேரமாக நடந்துகொண்டிருக்கையில். ஒண் தொடியாள் - ஒளி பொருந்திய வளையல்களை அணிந்த அந்த நங்கை. மற்றவனை - அந்தச் சேரனை. கண்டாள் - எதிர்பாராது தனக்கு நேரில் வரக்கண்டாள். ஒழிந்தாள் கலாம் - சீற்றம், வசை முதலிய யாவும் பஞ்சாய்ப் பறந்து விட்டன.

"கண்டாள் ஒழிந்தாள் கலாம்" என்ற இறுதியடியில் சீற்றத்திற்கும் காதலுக்கும் இடையில் ஒரு விநாடிகூட நேரம் இல்லை என்ற பாவம் மிக அரிதாக அமைந்திருக்கின்றது. உணர்ச்சி இப்படித் திடீரென்று மறையும் என்று நாம் ஐயுறலாம். ஆயினும், அதுதான் உண்மை; காதலர்களிடையேயும் சிறு குழவிகளிடையேயும் நாம் இத்தகைய உணர்ச்சி மாற்றத்தைக் காணலாம். (18)

# 'கள்வன்' என்ற பட்டம்!

சேரன் உலாவருவதைக் காணும் சேயிழையாள் ஒருத்தி அவன்பால் பெருவேட்கை கொள்ளுகின்ருள். அவனது அழகில் ஈடுபட்டுச் சதா அவனையே நினைந்துகொண்டிருக்கின்ருள். உணவும் சரியாக அவள் உட்கொள்வதில்லை; உறக்கமும் சரியாக அவளுக்கு இல்லை. அதனால் அவளது உடல் மெலிவடைந்ததுடன், மனமும் நிலை குலைந்துவிடுகின்றது. இந்த நிலையில் அவள் தெரு வழியாகப் போய்க் கொண்டிருக்கும்பொழுது அவளையொத்த பலர் இவளைப்போலவே மெலிவடைந்தும் மனங்கலங்கியும் இருப்பதைக் காண்கின்ருள். அவர்கள் யாவரும், 'இவன் என் உடல் நலத்தைக் கவர்ந்த கள்வன்' 'இவன் என் மனத்தைக் குலைத்த கள்வன்' என்று தூற்றிக் கொண்டிருப்பதையும் பார்க்கின்ருள்.

தோழி அவளிடம் வந்தபொழுது தான் கண்டதைப்பற்றி அவளிடம் கூறுகின்ருள்! "அழகிய சொல்லையுடைய தோழியே, இந்தப் பெண்கள் ஏன் நம் மன்னனை இங்ஙனம் தூற்றுகின்றனர்? மன்னன் வந்தால் அவனை வாழ்த்துவது முறை; அதை விடுத்துப் பழி தூற்றுவது ஏனோ?'' என்கின்ருள்.

நங்கையின் மனநிலையைக் காட்டும் கவிஞரது அழகிய சொல் லோவியம் இது:

> இவனென் னலங்கவர்ந்த கள்வ னிவனென்னது
> நெஞ்சம் நிறையழித்த கள்வனென்—றஞ்சொலாய்
> செல்லு நெறியெலாஞ் சேரலர்கோக் கோதைக்குச்
> சொல்லும் பழியோ பெரிது.

இது கைக்கிளை: தலைவி தோழிக்குக் கூறுவது.

விளக்கம்: நலம் - உடம் நலம். நெஞ்சம் நிறையழித்த - மனத்தை நிலைகுலையச்செய்த. அஞ்சொலாய் - அழகான சொற்களைப் பேசும் தோழியே. செல்லும் நெறியெலாம் - போகின்ற வழிகளிலெல்லாம். பழி - பழிச்சொல்.

சேரனுக்கு நல்ல பேர் கிடைக்கவேண்டுமென்ற நங்கையி னுடைய தோழியின் பரிவினைப் பாடலில் காண்க. (19)

# உண்மை அறியா அன்னை

சேரன் உலா வருங்கால் அவனை ஒரு பெண் பார்க்கின்றாள். அவன்மீது மால்கொண்டு தன் உள்ளத்தைப் பறி கொடுக்கின்றாள். அவள் சரியாக உணவு உட்கொள்ளுவதில்லை; உறக்கமும் சரியாகக் கொள்ளுவதில்லை. உடலும் இளைத்துவிடுகின்றது; உடலின்மீது பசலையும் பூக்கின்றது. தனது மகளின் இந்நிலையை உணர்ந்த தாய் அதைப்பற்றிப் பல முதுவாய்ப் பெண்டிரை உசாவுகின்றாள். தெய்வக் கோளாறு தன் மகளுக்கு ஏற்பட்டுவிட்டதோ என்பது தாயின் ஊகம்.

அவர்கள் வீட்டிற்கு வந்த பலர் பலவிதமாகக் கூறுகின்றனர். ஒருத்தி தெய்வக்கோளாறு ஏற்பட்டிருத்தல் வேண்டும் என்கின்றாள். மற்றொருத்தி பேய் பிடித்திருக்கவேண்டும் என்று கூறுகின்றாள். இன்னொருத்தி அஃது ஒருவித நோய் என்று உரைக்கின்றாள். இறுதியாக யாவரும் தெய்வக் கோளாறே என்று உறுதிசெய்து வேலனுக்கு வெறியாட்டெடுக்க வேண்டும் என்ற முடிவுக்கு வருகின்றனர். இவற்றையெல்லாம் உள் வீட்டிலிருந்த நங்கை கேட்டுக் கொண்டுதான் இருக்கின்றாள்.

அடுத்த நாள் முதுவாய்ப் பெண்டிருள் ஒருத்தி கூறியபடி தோட்டத்தில் ஓரிடம் தூய்மை செய்யப் பெற்றுப் புதுமணல் பரப்பப் பெறுகின்றது. அவர்கள் வெள்ளாட்டின் குருதியை அதன்மீது தெளிக்கின்றனர். ஒரு புதுக் குடத்தில் நீர் நிறைத்து அதில் மாவிலை வைத்துக் கும்பமாக்கிச் செபம் செய்வதற்கு ஏற்பாடு ஆகின்றது. அது முடிந்தவுடன் அந்தக் கும்பநீரைக் கொண்டு அந்த நங்கையை நீராட்டுதல்வேண்டும். இந்த ஏற்பாடுகளையும் பார்த்துக்கொண்டு தான் இருக்கின்றாள் அந்த நங்கை.

இச்சமயத்தில் தோழியொருத்தி அந்த நங்கையிடம் வருகின்றாள். அவளிடம் நங்கை இவ்வாறு கூறுகின்றாள்; "தோழியே, அதோ பார்த்தாயா என் அன்னையின் செயலை? வெறியாட்டுக்கு

ஏற்பாடு செய்கின்றாள். எனக்கு தெய்வக் கோளாறு ஏற்பட்டிருப்பதாக அன்னையின் எண்ணம். பகைவரை வென்று, வாகை மாலை சூடி, நாடுகளைக் கைப்பற்றும் சேரன்மீது காதல் கொண்டேன். அந்த நோய் என் நெஞ்சைப் பிடித்து வாட்டுகின்றது. இதைத் தாய் அறியவில்லையே. பூசை முடிந்து கும்பநீரால் என்னை நீராட்டி 'ஏ நோயே, இவளைவிட்டு அகன்று போ!' என்றால் அஃது அகன்று போகுமா? செய்த வினையை மறந்து தெய்வத்தை நொந்துகொள்வதால் யாது பயன்?'' என்கின்றாள்.

இந்த நிகழ்ச்சியைக் காட்டும் கவிஞரது அழகிய சொல்லோவியம் இது:

> காராட் டுதிரந்தூஉ யன்னை களனிழைத்து
> நீராட்டி நீங்கென்றால் நீங்குமோ—போராட்டு
> வென்று களங்கொண்ட வெஞ்சினவேற் கோதைக்கென்
> னெஞ்சங் களங்கொண்ட நோய்.

இது கைக்கிளை; தலைவி தோழிக்கு உரைப்பது.

***விளக்கம்:*** காராடு - வெள்ளாடு. உதிரம் - குருதி; இரத்தம். தூஉய்- தெளித்து. களன் இழைத்து - வெறியாட்டு எடுப்பதற்கு இடம் அமைத்து. நீராட்டி - என்னை அந்தக் கும்ப நீரில் முழுகச்செய்து. போராட்டு - போரில். களங்கொண்ட - போர்க்களத்தில் மாற்றார் எறிந்து விட்டு ஓடிய வில், வாள் முதலியவற்றைக் கைப்பற்றிய. வெஞ்சினவேல் கோதைக்கு - கொடுஞ் சீற்றமுள்ள வேற்படையையுடைய சேரன் பொருட்டு. என் நெஞ்சு களங் கொண்ட நோய் - என் நெஞ்சை இடனாகப் பெற்ற காதல் நோய்.

பகைவரை வென்று களங்கொண்ட கோதை தன் நெஞ்சக் களத்தினையும் கவர்ந்தான் என்பது பெண்ணின் குறிப்பு. (20)

# மனம் அறியா மன்னன்

மாந்தை நகரத்துப் பூந்தோட்டம் ஒன்றில் நங்கையொருத்தி நறுமலர் கொய்துகொண்டிருக்கின்ருள் அந்தத் தோட்டத்தின் அருகிலுள்ள சாலே வழியாகச் சேரன் குதிரைமீது செல்லுகின்ருன். அரசனை இவள் பார்க்கின்ருள்; அரசனும் இவளைப் பொது நோக்காகக் காண்கின்ருன். ஆனல், நங்கை அரசனது பார்வையைச் சிறப்பு நோக்காகக் கொண்டு எப்படியும் மன்னன் தன்னை மணப்பான் என்று 'பகற்கனவு' காண்கின்ருள்.

சிறிதுநேரங் கழித்து அவளும் தோட்டத்தில் மற்ருெரு பக்கத்தில் பூக்கொய்துகொண்டிருந்த தோழியும் அங்குள்ள தடாகத்தில் நீராடி வீட்டிற்குத் திரும்புகின்றனர். நங்கையின் நினைவெல்லாம் சேரன்பாலிருக்கின்றது. எப்படியாவது நடந்த நிகழ்ச்சியைத் தோழியிடம் சொல்லிவிடவேண்டும் என்று நினைக்கின்ருள் நங்கை. ஒருவிதமாகப் பேச்சைத் தொடங்குகின்ருள்:

"தோழியே, இந்த நகரத்து மன்னன் மிகமிகத் திறமையுடன் ஆட்சி செய்கின்ருனும். அவன் எல்லோருடைய எண்ணத்தையும் குறிப்பிஞலேயே அறிந்துகொள்வானும். ஆனல் எனக்குத் தெரிந்த மட்டிலும் அவ்வளவு கூர்த்த மதிபடைத்தவன் என்று சொல்ல இயலவில்லை. அங்ஙனம் கூரிய அறிவுடையவனுயின், என் நோக்கினைக் கொண்டே என் உள்ளத்தை அறிந்துகொண்டிருந் திருப்பான். ஆனல் நமது குறையை நாம் சொல்லித்தான் தீர்த்துக் கொள்ள வேண்டும்போலிருக்கின்றது."

இந்த அளவு அவள் சொன்னவுடன் நாணம் மேலும் பேசவிடாது அவளைத் தடுக்கின்றது. சிறிதுநேரம் அவள் பேசாதிருக்கின்ருள். நாணத்தின் காரணமாகப் பேச்சை வேறுவழியாகத் திருப்பப் பார்க்கின்ருள்: "தோழி, இன்று உனது நெற்றிப்பொட்டு நல்லமுறையில் வாய்ப்பாக அமைந்து இருக்கின்றது. அது நெற்றிக்குத் தனி

அழகினைத் தருகின்றது'' என்று சொல்லி மேலும் சிறிதுநேரம் மௌனம் சாதிக்கின்றாள். அதன் பிறகு, "உயர்ந்தவரின் உள்ளத்தை நமது உள்ளத்துடன் பொருத்திப் பார்க்கவேண்டுமானால் அவர்களது இயல்பை நாம் அறிந்துகொள்ளவேண்டும்'' என்கின்றாள். இவ்வாறு தலையைச்சுற்றி மூக்கைப் பிடிப்பதுபோலத் தன் உள்ளக்கிடக்கையைத்தோழிக்கு உணர்த்துகின்றாள் அந்த நங்கை.

இந்தக் காட்சியை நமக்குக் காட்டும் கவிஞரது சொல்லோவியம் இது :

மல்லனீர் மாந்தையார் மாக்கடுங்கோக் காயினுஞ்
சொல்லவே வேண்டும் நமகுறை—நல்ல
திலகங் கிடந்த திருநுதலா யஃதால்
உலகங் கிடந்த இயல்பு.

இது கைக்கிளை ; தலைவி தோழிக்கு உரைப்பது.

விளக்கம் : மல்லல் நீர் மாந்தையார் - நீர்வளம் மிக்க மாந்தை நகரிலுள்ள குடிமக்களது. மாக்கடுங்கோக்கு ஆயினும் - அரசனாகிய சேரற்கு ஆனாலும், நம குறை - நமது குறையாகிய காதலை. திலகம் - நெற்றிப் பொட்டு. நுதல் - நெற்றி. அஃதால் - இதில் 'ஆல்' என்பது அசை.

'கன்று முட்டினால்தான் பசு பால் கொடுக்கும்' என்பது யாவரும் அறிந்த உண்மை. அங்ஙனமிருக்க, குறையிரக்காமல் கோமான் குறை நீக்குவான் என்பது குவலயத்தில் குதிரைக் கொம்பு என்பது நங்கையின் குறிப்பு. (12)

# பின்னிணைப்பு - I

## முத்தொள்ளாயிரப் பதிப்புக்கள்

1. உயர்திரு. ரா. இராகவய்யங்கார் அவர்கள் (முன்னாள் அண்ணாமலை பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர்) பதிப்பித்த முத்தொள்ளாயிர மூலம்; இது மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடாக வெளிவந்தது (1905). முப்பது ஆண்டுகள் கழித்து மேற்படி மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடாகவே வெளிவந்த இரண்டாவது பதிப்பு—மூலம் மட்டிலும் (1935).

2. பேராசிரியர் S. வையாபுரிப் பிள்ளை அவர்கள் (முன்னாள் சென்னை தமிழாராய்ச்சித் துறைத் தலைவர்) பதிப்பித்த புறத்திரட்டு என்ற நூலின் மூலம். இதில் முத்தொள்ளாயிரப் பாடல்கள் பல தலைப்புக் களில் அமைந்து கிடக்கின்றன. இதன் முதற்பதிப்பு 1938-ஆம் ஆண்டிலும், இரண்டாம் பதிப்பு 1939-ஆம் ஆண்டிலும் சென்னைப் பல்கலைக்கழக வெளியீடாக வெளி வந்துள்ளன.

3. ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் பதிப்பித்த முத்தொள்ளாயிரம் (திருக்குற்றாலம், பொதிகை மலைப்பதிப்பு); இதன் முதற் பதிப்பு 1943-ஆம் ஆண்டிலும், இரண்டாவது பதிப்பு 1946-ஆம் ஆண்டிலும், மூன்றும் பதிப்பு 1957-ஆம் ஆண்டிலும் வெளி வந்துள்ளன.

4. திருவாளர் ந. சேது ரகுநாதன் அவர்கள் உரையுடன் பதிப்பித் துள்ள முத்தொள்ளாயிரம் 1946-இல் முதற்பதிப்பும், 1952-இல் இரண்டாவது பதிப்பும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடாக வெளிவந்துள்ளன.

5. காரைக்குடி ரெ. முத்துக் கணேசன் அவர்கள் பதிப்பித்து வெளி யிட்ட முத்தொள்ளாயிரம் (1957). இதன் இரண்டாவது பதிப்பும் (1962) வெளி வந்துள்ளது.

# பின்னிணைப்பு - 2

## உரைவிளக்கத்தில் எடுத்தாளப்பெற்ற நூல்கள்

| | |
|---|---|
| அகநானூறு. | |
| அதிவீர ராமபாண்டியன் : | நறுந்தொகை. |
| இளங்கோவடிகள் : | சிலப்பதிகாரம் (அடியார்க்கு நல்லார் உரை.) |
| கம்பன் : | கம்பராமாயணம். |
| கலித்தொகை : | |
| சமயதிவாகர முனிவர் : | நீலகேசி தெருட்டு. |
| சயங்கொண்டார் : | கலிங்கத்துப் பரணி. |
| சுவாமிநாத தேசிகர் : | திருச்செந்திற் கலம்பகம். |
| தமிழ் நாவலர் சரிதம். | |
| தனிப்பாடல் திரட்டு. | |
| திருத்தக்க தேவர் : | சீவக சிந்தாமணி. |
| திருவள்ளுவர் : | திருக்குறள் (பரிமேழகர் உரை.) |
| தொல்காப்பியர் : | தொல்காப்பியம்—பொருளதிகாரம் (நச்சினார்க்கினியம், பேராசிரியம்). |
| நற்றிணை. | |
| நாலாயிர திவ்ய பிரபந்தம். | |
| நாலாயிரம் : | பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம். |
| பட்டினத்தடிகள் : | பட்டினத்தார் பாடல்கள். |
| பதினோராந் திருமுறை. | |
| பழமொழி நானூறு. | |
| பாரதியார் : | கவிதைகள். |
| புகழேந்திப் புலவர் : | நளவெண்பா. |
| புருடோத்தம நாயுடு, பு. ரா: | திருவாய்மொழி—ஈட்டின் தமிழாக்கம். |
| மாணிக்கவாசகர் : | திருக்கோவையார். |
| ,, : | திருவாசகம். |
| யாப்பருங்கல விருத்தி. | |

# பின்னிணைப்பு - 3

## அருஞ்சொல்விளக்க அகராதி

### அ

அகலம் - மார்பு
அங்கண்மா ஞாலம் - பரந்த பூமி
அஞ்சி - பயந்து
அட்ட - இறந்த
அடுதல் - அழித்தல், சமைத்தல்
அணிவரை - அழகிய மலை
அம்மனை - தாய்
அமர் - போர்
அயர்தல் - விளையாடுதல்
அயலார் - பக்கத்து வீட்டார்
அயில் - ஈட்டி
அரக்காம்பல் - சிவந்த நிறமுடைய ஆம்பற் பூக்கள்
அரவு - பாம்பு
அரிவையர் - பெண்கள்
அருகலர் - பக்கத்திலுள்ளவர்கள்
அருமணி - பெருமையாகப் பேசப் பெறும் நாகரத்தினம்
அல்குல் - தொடைக்கு மேலும் இடைக்குக் கீழும் உள்ள பகுதி; பெண் குறி என்பது பிற்கால வழக்கு
அலங்குதார் - அசைகின்ற மாலை
அலைத்தல்-அடித்துத் துன்புறுத்துதல்
அழல் - நெருப்பு
அழலும் - கொதிக்கும்
அழுவம் - குழி
அள்ளல் - சேறு
அளி - அருள், தண்ணளி, அன்பு
அற்றம் - சோர்ந்திருக்கும் காலம்
அறுகை - அறுகம் புல்
அன்ன - ஒத்த

### ஆ

ஆ - பசு
ஆகம் - மேனி, மார்பு
ஆடரவம் - படம் எடுத்து ஆடும் பாம்பு
ஆடுகோ - முழ்குவேனே
ஆமா - காட்டுப் பசு; ஆப்போலும் மா.
ஆர்ப்ப - ஒலிக்க
ஆரம் - சந்தனம்
ஆவி - உயிர்
ஆறு - வழி, நெறி

### இ

இகு கரை - தாழ்ந்திருக்கும் கரை
இடர் - துன்பம்
இப்பி - முத்துச் சிப்பி
இமிழ்திரை - ஒலிக்கின்ற அலை
இமை பொருந்தல் - உறங்குதல்
இமையார் - தேவர்கள்
இயம்புதல் - சொல்லுதல்
இரா - இரவு
இரிதல் - நெறிகெட்டு ஓடுதல்
இலங்க - விளங்க
இழக்கோ - இழக்கவா வேண்டும்
இழுக்குதல் - சறுக்குதல்
இளங்கோ - சிறியவன்
இற்செறித்தல் - வீட்டிற்குள்ளேயே இருத்துதல்
இறை - அரசன், வரி.
இனம் - கூட்டம்

ஈழம் - இலங்கை

உ

உகளுதல் - தாவி ஓடித்திரிதல்
உஞ்சை - உச்சயினி
உதிரம் - குருதி, இரத்தம்
உபாயமா - மெதுவாக
உய்தல் - பிழைத்தல்
உயர்மாடம் - உன்னதமான மாளிகை
உரு - உட்கு, அச்சம்
உரும் – இடி
உரையல் - சொல்லற்க
உறந்தை - உறையூர்
உறந்தையர் கோன் - சோழன்
உறந்தையார்கோ - சோழன்
உறிஞ்சும் - உராய்ந்துகொண்டு செல்லும்
உழக்கி - நிலை குலையச்செய்து
உழுவை - புலி

ஊ

ஊடல் - கணவன் மனைவியரிடையே தோன்றும் சிறுபிணக்கு
ஊமன் - கூகை

எ

எய்தாது - அடையாமல்
எயில் - மதில்
எரி - தீ
எலா அ - தோழி (விளி)
எவ்வம் - துன்பம்
எழில் - அழகு
எள்ளி - இகழ்ந்து

ஏ

ஏ - அம்பு
ஏசுவர் - கடிவர், தூற்றுவர்
ஏடு - பூவிதழ்
ஏத்தி - புகழ்ந்து
ஏமம் - பொன்
ஏர் - அழகு, எழுச்சி
ஏற்றிய - அருச்சித்த
ஏறு - காளை, இடபம்

ஐ

ஐதா - அழகியதாக

ஒ

ஒல்குதல் - ஒதுங்குதல்

ஓ

ஓகை - மகிழ்ச்சி; உவகை என்பதன் திரிபு
ஓச்சி - ஓங்கி
ஓதம் - அலை
ஓருற்றால் - ஒரு வழியாக

க

கங்குல் - இரவு
கச்சி - காஞ்சிபுரம்
கடத்தல் - நேர் நின்று பொருது வெல்லுதல்
கடாஅம் - மதநீர்
கடி - மணம், பாதுகாப்பு
கடிமனை - பாதுகாப்பான வீடு
கடுங்கோன் - பாண்டியன்
கண் - இடம்
கண்ணுர - கண்குளிர
கண்ணி - தலையில் சூடும் மாலை
கண்ணிரத்தம்-கண்ணிலுள்ள சிவப்பு; சிவப்பு சீற்றத்தைக் குறிக்கும்
கண்படை - உறக்கம்
கதவம் - கதவுகள்
கதிப்ப – பரபரப்புடன் துள்ளியோட
கதிர்வேல் - கூரியவேல்; ஒளி விடும் வேல்
கமுகு - பாக்கு
கயல் - கெண்டை மீன்
கலவி - கூடல்
கவ்வை - அச்சத்துடன் கூடிய ஆரவாரம்
கவற்றுதல் - கவலையை உண்டாக்கல் (கவல் - பகுதி)
கழல் - கால்
களிகள் - கள்ளைப்பருகும் மறவர்கள்

களியானை - மதயானை
களிறு - ஆண் யானை
கனலி - ஞாயிறு, சூரியன்
கனவட்டம் - பாண்டியனுடைய குதிரையின் பெயர்
கனவு - சொப்பனம்
கனவும் - கனவு காணும்

கா

காப்பு - காவல்
காம்பு - கைப்பிடிக் கோல்
காமர் — அழகிய
காய்சின வேல் - ஒளி வீசும் வேல்
காய்த்தினர் - சீற்றத்தை உண்டாக்கினவர்
காராடு - வெள்ளாடு
காவலன் - அரசன், காவல்செய்கிறவன்

கி

கிள்ளி - சோழன்

கு

குடநாடன் - சேரன்
குடுமி - கதவின் கீழும் மேலும் அமைந்த முனைக்குமிழ்
குடைந்து ஆடி - திளைத்து ஆடி
குதலை - மழலை மொழி
குருதி - இரத்தம்
குரும்பை - இளங்காய்
குறியெதிர்ப்பு - இரவல்
குறும்பூழ் - காடை

கூ

கூகை - பெருங்கோட்டான்
கூடல் - மணலில் போட்ட முதற் சுழியும் இறுதிச் சுழியும் ஒன்றாகக் கூடுதல். திருமணமாகாத மகளிர் மேற்கொள்ளும் ஒருவித ஆரூடம். கலவி, முயக்கம் மதுரை.
கூந்தல் மா - பிடரி மயிர் நிறைந்த குதிரை
கூர்நுனை - கூரிய நுனி
கூற்று - எமன்

கை

கைமனை - சிறிய வீடு

கொ

கொண்டல் - மேகம்
கொற்கைக் கோமான் - பாண்டியன்

கோ

கோக்கோதை - சேர மன்னன்
கோடு - கொம்பு
கோதை - சேரனுக்குரிய பல பெயர்களுள் ஒன்று, மாலை
கோமான் - அரசன்
கோவலர் - இடையர், ஆயர்
கோழி - உறையூர்
கோழியர் கோன் - சோழன்
கோள் - குலை
கோள் தெங்கு - குலை குலையாகத் தேங்காய்களைத் தாங்கி நிற்கும் தென்னை மரங்கள்

கௌ

கௌவை - அலரின் முதிர்ச்சியாகிய ஆரவாரம்

சா

சாந்து - சந்தனம்
சால - மிகுதியாக
சாலேகம் - சாளரம், பலகணி. வடமொழியில் 'ஜாலகம்' என்பது பலகணித்துளை

சி

சிலம்பி - சிலந்திப் பூச்சி
சினை - முட்டை

சு

சுரும்பு - தேனீ

செ

செம்பியன் - சோழன்
செம்பொன் - தங்கம்
செம்மல் - தனிப்பெருமை
செரு - போர்
செழியன் - பாண்டியன்

சே

சேக்கை - படுக்கை
சேய் - மகன்
சேரி - ஊர்
சேலேகம் - செந்துரம்

ஞா

ஞாலம் - பூமி, உலகம்

ஞெ

ஞெமல் - சருகு

த

தமர் - உறவினர்
தமிழ்நர் பெருமான் - தமிழை வளர்க்கும் பாண்டியன்
தலைமேல் நடத்தல்-இகழ்ந்து காவலையும் கடந்து செல்லுதல்
தளை - கட்டு
தனிக்குடை - ஒப்பற்ற குடை

தா

தாமம் - மாலை
தார் - மாலை
தாள் - அடி, பாதம்
தானை - சேனை, ஆடை

தி

திங்கள் - மாதம், சந்திரன்
திருத்தக்க - செல்வம் நிலைத்த
திரை - அலை
திலதம் - நடுவட்டம், நெற்றிப் பொட்டு
திறை - கப்பப் பொருள்

தீ

தீயவை - தீமைகள்

து

துடி - உடுக்கை
துயருழந்து - துன்பமடைந்து
துளைதொட்டார் - துளையை அமைத்தவர்

தெ

தெரியல் - மாலை
தென்னன் - பாண்டியன்
தென்னவர் - பாண்டியர்

தொ

தொடி - வளையல்
தொய்யில் - மகளிர் தம் மார்பிலும் தோளிலும் எழுதிக் கொள்ளும் வரிக் கோலங்கள்

தோ

தோல் - கேடகம்

ந

நகுதல் - சிரித்தல், பரிகசித்தல்
நகுவாய் - ஒளி விடும்
நந்து - சங்கு
நல்வினை - புண்ணியம்
நறுமா - நல்ல மணமுள்ள மாமரம்
நன்பால் - மருத நிலம்
நனவு - விழிப்பு

நா

நாகம் - சுரபுன்னை
நாணம் - வெட்கம், உள்ளம் சுருங்குதல்
நாணும் - வெட்கப்படும்
நாம - அச்சந்தரும்
நால்வாய் - தொங்கும் வாய், யானை; நாலுதல் - தொங்குதல்
நாவலர் - புலவர்
நாவலோஒ - ஏர்க்களத்திலும் போர்க்களத்திலும் தத்தம் பகுதியினரைக் கூவி அழைக்கும் குறியீட்டுச் சொல்

நாவாய் - மரக்கலம்
நாள் மீன் - நட்சத்திரம்

நி

நித்திலம் - முத்து
நிமிர்ந்து - தலையெடுத்து
நிரை - வரிசை, தொகுதி
நிலவு - சந்திரன், ஒளிவிடுகின்ற
நிழற்றும் - நிழலைச் செய்யும்
நிறைமதி - முழுமதியம், பௌர்ணமை

நீ

நீடு - நீண்ட
நீலம் - நீலப்பூ, நீலக்கல், குவளைமலர்
நீறு - புழுதி, சாம்பல்

நு

நுதல் - நெற்றி
நுண்மை - சிறுமை

நெ

நெகிழ்தல் - இளகுதல்
நெடுமாடம் - உயர்ந்த மாளிகை
நெருநல் - நேற்று
நெறி - வழி

நே

நேமி - சக்கரம், தோள்வளையம், பூமி
நேர்படுதல் - எதிர்ப்படுதல்

ப

பசப்பு - பசலை நிறம்
பஞ்சவர் - பாண்டியர்
படர்தருதல் - உலாப் போதல்
பண்டன்று - முன்னையகாலம் அல்ல இது
பரிசயம் - பழக்கம்
பழநம் - பொய்கை

பா

பாங்காக - ஒழுங்காக
பாடலம் - சோழனது குதிரையின் பெயர்
பார் - பூமி
பார்ப்பு - இளங்குஞ்சு
பாற - நொறுக்க
பாறு - கழுகு

பி

பிடி - பெண் யானை
பிணி - நோய்
பிணை - பெண் மான்
பிழை பாக்கு - தவறுதல், பிழைத்தல்

பீ

பீர் - பீர்க்கம் பூ

பு

புகலும் - விரும்பும்
புகார்ப் பெருமான் - சோழன்
புயல் - மேகம்
புரவலர் - அரசர்
புரிவளை திருகிய வரிகளமைந்த சங்கு
புருவமுரிவு - புருவ வளைவு
புரைசை - யானையின் கழுத்திலிடும் கயிறு
புல்லார் - பகைவர்
புல்லாதார் - அணையாதார்
புல்லுதல் - தழுவுதல்
புலர்தல் - விடிதல்
புலவி - ஊடல், சிறு பிணக்கு
புலால் - மாமிசம்
புள்ளினம் - பறவையினம்
புறங்கடை - வெளியிலுள்ள இடம்
புன்னாகம் - புன்னை மரங்கள்
புனை இழாய் - அணிகள் புனைந்த தோழியே

பூ

பூங்கோதை - பூமாலை
பூசல் - போர், கலகம்
பூந்தார் - பூமாலை
பூம்புனல் - நீர்வளம் பொருந்திய
பூழியர் கோன் - பூழிநாட்டரசன் (சேரன்)

பெ

பெற்றி - தன்மை

பே

பேதையர் - மகளிர்

பை

பைய - மெதுவாக

பொ

பொற்பு - அழகு

போ

போழுதல் - கிழித்தல், பிளத்தல்

ம

மடங்கா - முடிவே இல்லாத
மடமை - இளமை
மண்ணகம் - மண்ணுலகம்
மணவா - மணந்து கூடாத
மணி - இரத்தினம்
மதி - அறிவு, திங்கள், சந்திரன், மாதம்
மந்தரம் - மந்தர மலை
மரகதம் - பச்சை
மருட்டியற்று - ஏமாற்றியது போன்றது
மருப்பு - கொம்பு, யானையின் தந்தம்
மறம் - வீரம்
மறிதிரை - மடங்கி மடங்கி திரைத்துத் திரைத்து வருகின்ற அலைகள்
மறுகு - அகலமாக அமைந்த தெரு

மா

மா - குதிரை
மாண்ட - மாட்சிமை பொருந்திய
மாணர் - பகைவர்
மாந்தை - சேர நாட்டுத் துறைமுகப் பட்டினம்
மாமை - மாந்தளிர் போன்ற நிறம்
மாற்றார் - பகைவர்
மாறன் - பாண்டியன்

மீ

மீன் - நட்சத்திரம்

மு

முகை - மொட்டு
முடிகள் - கிரீடங்கள்
முத்தம் - முத்துக்கள்
முத்தாரம் - முத்து மாலை
முள்ளி - கண்டங்கத்தரிச் செடி

மெ

மெய் - உண்மை, உடல்

மே

மேனி - உடல்

மை

மைந்தன் - முருகன்
மைந்தர் - இளைஞர்
மைந்து - வலிமை; இதன் அடியாகப் பிறந்த சொல்

மொ

மொட்டு - அரும்பு
மொய்த்து - நெருங்கித் திரண்டு

யா

யாப்பு - இசைப்பு
யாமம் - நள்ளிரவு

வ

வங்கம் - மரக்கலம்
வஞ்சியகம் - வஞ்சிமா நகரம்
வட்கார் - பகைவர்
வன்கண்ணன் - இரக்கமில்லாதவன், அஞ்சாதவன்
வண்புனல் நாடு - நீர்வளம் பொருந்திய நாடு
வணக்கும் - வணங்கச் செய்யும்
வதுவை - திருமணம்
வரிவளை - கீற்று வளையல்
வல்லே - விரைவாக
வவ்வுதல் - பறித்தல

வழு - குற்றம்
வழுதி - பாண்டியன்
வளவன் - சோழன்
வனமாலை - அழகிய மாலை

வா

வாங்கி - இழுத்து
வாமான் - தாவுகின்ற குதிரை
வாரம் - அன்பு
வாருயர் - நீண்டு உயர்ந்த
வானவன் - சேரன்

வி

விசும்பு - வானம்
விதிர்த்தல் - தெளித்தல்
வியன்கானல் - அகன்ற பாலைவனம்
விலங்கி - குறுக்கிட்டு

வீ

வீறு - சிறப்பு

வெ

வெஞ்சமம் - கொடிய போர்
வெண்தேர் - கானல் நீர், பேய்த்தேர்
வெரீஇ - நடுங்கி
வெருவரு - அஞ்சத்தக்க
வெள்ளம் - நீர்
வெறீஇ - பயந்து
வென்றது - ஒத்தது

வே

வேட்டல் - விரும்புதல்
வேட்டு - விரும்பி, ஆசைகொண்டு
வேலி - கடலால் சூழப்பட்டது
வேலை - கடல்
வேழம் - யானை
வேளை - தை மாதத்தில் அதிகமாக வளரும் ஒருவகைச் செடி
வேற்றார் - பகைவர்

வை

வையகம் - நிலவுலகம்

வெள

வெளவுதல் - கைப்பற்றிக்கொள்ளுதல்

# பின்னிணைப்பு - 4

## உரை விளக்க மேற்கோள் பாட்டு முதற்குறிப்பு அகராதி

# பின்னிணைப்பு - 5

## பாட்டு முதற்குறிப்பு அகராதி




**First Paper:** *என்ன ஆச்சரியம்?* **"Enna Aacharyam !" [1949]**

# ஓர் அறிமுகம்

பேராசிரியர்

# ந சுப்பு ரெட்டியார்



Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

1) **Tamil Payitrum Murai [1957]**
2) **Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
3) **Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
4) **Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21

b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

***Research on Professor's Books***

a) University of Madras - 1993 (leading to PhD)

b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)



பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற 100 நூல்கள் (முழுமையாக)
**http://tinyurl.com/nsr100collections**
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]

India
Book of Records

# CERTIFICATE

## CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

**Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).**

**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

**Date: March 19, 2018**



ISBN 978-81-939502-1-0

